# கழகத் தமிழ்க் கோவை



மலர் இரண்டு ஒன்பதாம் வகுப்பு

கழக வெளியீடு

கழக வெளியீடு, கூ௪௧

# கழகத் தமிழ்க் கோவை

## மலர் - உ

ஒன்பதாம் வகுப்பிற்கு உரியது

[1958-ஆம் ஆண்டு புதிய பாடத் திட்டப்படி அமைக்கப்பெற்றது]

தொகுத்தோர்:
கழகக் கல்வியறிஞர் குழுவினர்

*[Approved by the Madras Text-Book Committee for class use, vide Page 14 of the Fort St. George Gazette dated 18-5-1960]*

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1960

# பதிப்புரை

அரசியலார் 1958 இல் வெளியிட்ட பாடத்திட்டத்தின்படி ஒன்பதாம் வகுப்பிற்குரிய செய்யுட் பகுதியும், உரை நடைப் பகுதியும் சேர்த்துக் கோக்கப்பட்டுக் "கழகத் தமிழ்க் கோவை" என்னும் பெயருடன் முதல் முறையாக எமது கழகத்திலிருந்து புதுமையாக வெளிவருகிறது இது.

கழகம் இதற்கு முன்னும் கழகத் தமிழ்ப் பொழில், கழகத் தமிழ்ச் சோலை, கழகத் தமிழ்க் கோவை மலர்-க, முதலிய பல தொகை நூல்கள் மாணவர்கட்குத் தகுதியாக அரசியலார் வகுத்த திட்டத்தின்படி பல ஆண்டுகளாகப் பதித்து வெளியிட்டு வந்துள்ளது. மாணவர் அறிவை வளர்ப்பதுவே கழகத்தின் நோக்கமாகும்.

சென்ற ஆண்டில் எட்டாம் வகுப்புக்குரிய பாடத் திட்டத்தின்படி "கழகத் தமிழ்க் கோவை" என்ற பெயருடன் எட்டாம் வகுப்புப் புத்தகம் வெளியிட்டோம். அப் புத்தகம் பல உயர்நிலைப் பள்ளிகளிலும் பாடமாக வைத்துப் பயன்படுத்துவது கண்டோம். அதுபோல இவ் வாண்டிலும் ஒன்பதாவது வகுப்பிற்குக் கோவையை வெளியிடுகின்றோம்.

இக் கோவையில், ஒன்பதாம் வகுப்பு மாணவர்க்குத் தகுதியான வாழ்த்து, அறவுரை, கதைப் பகுதி, பல்சுவை என்ற பகுதிகளாகப் பல அறிஞர்களால் தேர்ந்து எடுத்துக் கோக்கப்பட்டுள்ளன. கூடுதல், குறைதல் இன்றி அரசியலார் வகுத்த திட்டத்தின்படியே அமைத்திருக்கின்றோம். உரைநடைப் பாடங்களும் இனிய எளிய பகுதியாக ஆய்ந்து அத் துறையில் வல்ல அறிஞர்களின் கட்டுரைகளையே பொறுக்கி எடுத்துக் கொடுத்திருக்கிறோம்.

செய்யுட்பகுதி ஒவ்வொன்றுக்கும் உரிய ஆசிரியர் வரலாறு, அருஞ்சொற்பொருள், இன்றியமையா இலக்கணக் குறிப்பு, தேர்வு வினுக்கள் எழுதி இறுதியிற் சேர்க்கப் பட்டுள்ளன. உரைநடைப் பாடங்கட்கும் அவ்வாறே ஆசிரியர் குறிப்பும், அருஞ்சொற்பொருளும், வினுக்களும் எழுதப்பட்டுள்ளன.

வருங்கால மாணவரின் தமிழ்அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் சொற்சுவை பொருட்சுவை யமைந்த செய்யுட்களும், உலகியல் அறிவு பெருகுவதற்குரிய உரை நடைகளும் இக் கோவையில் அமைந்திருப்பதால் இதனை மாணவர் உலகம் வரவேற்கும் என்பது ஒருதலை. ஆசிரியர் களும் மாணவர் முன்னேற்றம் கருதும் பிற அறிஞரும், இதற்கு ஆதரவு தருவார் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. இதனைக் கற்ற மாணவர்கள் கடவுட்பற்று, நீதிநெறி, அறிவு, ஒழுக்கம் ஆகிய நற்பண்புகள் வாய்ந்து விளங்குவார்கள் என நம்புகின்றோம்.

செய்யுட் பகுதியிலும் உரைநடைப் பகுதியிலும் உள்ள பாடப் பகுதிகளைச் சேர்த்துக்கொள்ள இசைவுதந்த உரிமைப் பெரியோர் ஒவ்வொருவருக்கும் தனித்தனி எமது நன்றி யைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்னை மாநிலப் பள்ளித் தலைமையாசிரியர்களும் தமிழ் ஆசிரியர்களும் எமது கழகத் தமிழ்க் கோவையை ஆய்ந்து வாங்கி மாணவர்களுக்குக் கற்பித்து நற்பயன் விளைக்குமாறு வேண்டுகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளார். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# நன்றி

அடியிற் குறித்த உரைநடைப் பகுதிகளை இந்நூலில் சேர்த்துக்கொள்ள இசைவளித்த அவற்றின் உரிமையாளர்கட்குக் கழகத்தின் நன்றி என்றென்றும் உரியது.

மணிமேகலை
—பெருமழைப் புலவர், பொ. வே. சோமசுந்தரனார், அவர்கள்.

கடிதம்: தங்கைக்கு—டாக்டர், மு. வரதராசனார் அவர்கள்.

நீதி நூல்களில் இலக்கிய நயம்
—டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள்.

தமிழ் இலக்கியத்திற் கண்ட அரசு
—டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்.

பாரத நாட்டுச் சிற்பக்கலை
—(திருமதி, ஆர். எஸ். ருக்மணி, எம். ஏ., அவர்கள்)
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.

சுவிட்சர்லந்து
—திரு. சோம. இலக்குமணச் செட்டியார் அவர்கள்.

அரசர் அண்ணாமலை வள்ளல்
—திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்.

மனையியல்
—(டாக்டர், இராஜம்மாள் தேவதாஸ் அவர்கள்)
ஆசிரியர், கலைக்கதிர், கோயமுத்தூர்.

காடு—(மறைத்திரு. மறைமலையடிகள்.)
மறைமலையடிகள் விருப்ப ஆவணச் செயற்குழு.

சுவாமி இருக்கிறார்-(டாக்டர், உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்)
திரு. க. சுப்பிரமணியம் அவர்கள்.

பாசனம்—இயக்குநர், சென்னை அரசாங்க செய்தித் துறை.

இளைஞர்களுக்கு அறிவுரை
—(திரு. கெ. து. சுந்தரவடிவேலு, M. A., L. T., அவர்கள்)
ஆசிரியர், கலைக்கதிர், கோயமுத்தூர்.

# தேசீய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப சிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதித ரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே

# நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக்கிளர்ச்சி யடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது ; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது ; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன ; நின் புகழைப் பாடுகின்றன ; இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு,
வெற்றி, வெற்றி, வெற்றி !

# கழகத் தமிழ்க் கோவை

## மலர் - உ



## செய்யுட் பகுதி

### க. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்.
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

—*சேக்கிழாரடிகள்.*

### 2. மொழி வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திரவிடநல் திருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே.

—*பேராசிரியர், பெ. சுந்தரம் பிள்ளை, எம். ஏ*

### 3. நாட்டு வாழ்த்து

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு. (1)

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
யாரம் படைத்த தமிழ்நாடு. (2)

—*பாரதியார்.*

# உ. அறவுரை

## 1. திருக்குறள்

### அறத்துப்பால்

#### பாயிரம்

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். (1)

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. (2)

உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (3)

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (4)

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (5)

அன்றறிவாம் என்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. (6)

வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (7)

#### இல்லறவியல்

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. (8)

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. (9)

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். (10)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (11)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். (12)

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு. (13)

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. (14)

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். (15)

துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (16)

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். (17)

கொன்றன்ன இன்னா செயினும் அவர் செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். (18)

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். (19)

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. (20)

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (21)

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (22)

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. (23)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. (24)

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. (25)

அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். (26)

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். (27)

கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல். (28)

பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். (29)

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (30)

ஒப்புரவி னல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (31)

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (32)

இரத்தலின் இன்னது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல். (33)

சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. (34)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவா தெவன். (35)

துறவற வியல்

உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன். (36)

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. (37)

தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல். (38)

அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலம் கரி (39)

இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். (40)

நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல். (41)

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. (42)

சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும். (43)

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (44)

சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். (45)

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். (46)

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. (47)

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். (48)

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (49)

## பொருட்பால்

### அரசியல்

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். (50)

தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். (51)

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். (52)

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். (53)

கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை. (54)

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். (55)

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். (56)

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. (57)

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. (58)

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். (59)

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். (60)

செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். (61)

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். (62)

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். (63)

ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின். (64)

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. (65)

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும். (66)

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும். (67)

செய்வினை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல். (68)

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. (69)

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். (70)

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (71)

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். (72)

கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு. (73)

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று. (74)

ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். (75)

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. (76)

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர். (77)

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன். (78)

### அமைச்சியல்

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. (79)

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. (80)

துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. (81)

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு. (82)

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். (83)

அரணியல்

பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. (84)

படையியல்

பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு. (85)

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து. (86)

நட்பியல்

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். (87)

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல். (88)

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். (89)

ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய். (90)

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. (91)

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின். (92)

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (93)

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (94)

குடியியல்

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. (95)

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான் (96)
குற்றமே கூறி விடும்.

கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு. (97)

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். (98)

நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். (99)

உழவினர் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம் என்பார்க்கும் நிலை. (100)

—திருவள்ளுவர்

## 2. ஏலாதி

### பெரியோர் இயல்பு

கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்மனைமேல்
செல்லான் சிறியார் இனஞ்சேரான்—சொல்லும்
மறையிற் செவியிலன் தீச்சொற்கண் மூங்கை
இறையிற் பெரியாற்கு இவை (1)

### குடியோடு வாழ்வான் செயல்

களியான்கள் உண்ணன் களிப்பாரைக் காணன்
ஒளியான் விருந்திற்கு உலையான்—எளியாரை
எள்ளான்ஈத் துண்பானேல் ஏதமில் மண்ணுண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து. (2)

### இன்பம் உறுபவர்

இல்லிழந்தார் கண்ணிழந்தார் ஈண்டியசெல் வம்மிழந்தார்
நெல்லிழந்தார் ஆனிரை தானிழந்தார்க்கு—எல்லுழந்து
பண்ணியூண் ஈந்தவர் பல்யானை மன்னராய்
எண்ணியூண் ஆர்வா ரியைந்து. (3)

சிற்றினஞ் சேராமை

பெருமை புகழ்அறம் பேணுமை சீற்றம்
அருமைநூல் சால்பில்லார் சாரின்—இருமைக்கும்
பாவம் பழிபகை சாக்காடே கேடுஅச்சம்
சாபம்போற் சாருஞ் சலித்து. (4)

அன்புடையார் செயல்கள்

சாதல் பொருள்கொடுத்தல் இன்சொற் புணர்வுவத்தல்
நோதல் பிரிவிற் கவறலே—ஓதலின்
அன்புடையார்க் குள்ளன ஆறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து. (5)

—கணிமேதையார்.

## 3. சிறுபஞ்சமூலம்

பெருமையும் சிறுமையும்

பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை
இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்—இழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வதும் நன்று (1)

மூடன் இயல்பு

பூத்தாலுங் காயா மரமுமுள நன்றறியார்
மூத்தாலும் மூவார்நூல் தேற்றுதார்—பாத்திப்
புதைத்தாலும் நாருத வித்துள பேதைக்கு
உரைத்தாலும் செல்லா துணர்வு. (2)

உயர்ந்தோர் கொள்ளும்நெறி

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள் வெளவல்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின்—ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு. (3)

பெண்டிர் சிறப்பு

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித்—திருவாக்கும்
தெய்வதையும் எஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு. (4)

வாழவேண்டிய முறை

தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிற ரால்கருதற் பாடுணர்ந்து—தான்பிறரால்
சாவ வெனவாழான் சான்ரோரால் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்தல் நன்று. (5)

—காரியாசான்.

## 4. நான்மணிக்கடிகை

மேலானவை

கண்ணிற் சிறந்த உறுப்பில்லை கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை ஈன்ருளோடு
எண்ணக் கடவுளு மில். (1)

இன்னது வேண்டின் இன்னது செய்க

இன்னுமை வேண்டின் இரவெழுக இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல். (2)

துயில்இன்றி இருப்போர்

கள்வமென் பார்க்குந் துயிலில்லை காதலிமாட்டு
உள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை ஒண்பொருள்
செய்வமென் பார்க்குந் துயிலில்லை அப்பொருள்
காப்பார்க்கும் இல்லை துயில். (3)

—விளம்பிநாகனார்.

# ௩. தொடர்நிலைச் செய்யுள்

## 1. பெருங்கதை

### பந்தடி கண்டது

*இராசனை*

கொடிபுரை நுண்ணிடைக் கொவ்வைச் செவ்வாய்
மதுநாறு தெரியன் மகதவன் தங்கை
பதுமா பதிதன் பணியெதிர் விரும்பி
விராய்மலர்க் கோதை இராசனை என்போள்
கணங்குழை முகத்தியை வணங்கினள் புகுந்து
மணங்கமழ் கூந்தலும் பிறவுந் திருத்தி,

பந்துகள்

வெண்மையுஞ் செம்மையுங் கருமையும் உடையன
தண்வளி யெறியினுந் தாமெழுந் தாடுவ
கண்கவர் அழகொடு நெஞ்சக லாதன
ஒண்பந் தோரேழ் கொண்டன ளாகி,
ஒன்றொன் றொற்றி யுயரச் சென்றது ;
பின்பின் பந்தொடு வந்துதலை சிறப்பக்

**இராசனை பந்தடித்தல்**

கண்ணிமை யாமல் எண்ணுமின் என்று
வண்ண மேகலை வளையொடு சிலம்பப்
பாடகக் கால்மிசைப் பரிந்தவை விடுத்தும்
சூடக முன்கையிற் சுழன்றுமா றடித்தும்
அடித்த பந்துகள் அங்கையில் அடக்கியும்
மறித்துத் தட்டியும் தனித்தனி போக்கியும்
பாயிர மின்றிப் பல்கலன் ஒலிப்ப
ஆயிரங் கைநனி அடித்தவள் அகல,

**காஞ்சனமாலையின் பந்தடி**

அன்ன மென்னடை அவந்திகை யுவந்தவள்
கண்மணி யனைய ஒண்ணுதற் பாவை
காஞ்சன மாலை வாங்குபு கொண்டு

பிடித்த பூம்பந் தடித்துவிசும் பேற்றியும்,
அடித்த பந்தால் விடுத்தவை யோட்டியும்
குழன்மேல் வந்தவை குவிவிரற் கொளுத்தியும்
நிழன்மணி மேகலை நேர்முகத் தடித்தும்
கண்ணியிற் சார்த்தியும் கைக்குட் போக்கியும்
உண்ணின்று திருத்தியும் விண்ணுறச் செலுத்தியும்
வேயிருந் தடந்தோள் வெள்வளை யார்ப்ப
ஆயிரத் தைந்நூ றடித்தனள் அகலச்

அயிராபதியின் பந்தடி

செயிர்தீர் பதுமைதன் செவிலித் தாய்மகள்
அயிரா பதியெனும் அம்பணைத் தோளி
மானேர் நோக்கிற் கூனி மற்றவள்
தானேர் வாங்கித் தனித்தனி போக்கி
நாற்றிசைப் பக்கமும் நான்கு கோணமும்
காற்றினுங் கடிதாக் கலந்தன ளாகி
அடித்தகைத் தட்டியுங் குதித்துமுன் புரியா
அகங்கை யொட்டியும் புறங்கையிற் புகுத்தியும்
தோண்மேற் பாய்ச்சியும் மேன்மேற் சுழன்றும்
வாக்குறப் பாடியும் மேற்படக் கிடத்தியும்
நோக்குநர் மகிழப் பூக்குழல் முடித்தும்
பட்ட நெற்றியிற் பொட்டிடை யேற்றும்
மற்றது புறங்கையில் தட்டினள் எற்றியும்
முன்னிய வகையால் முன்னீ ராயிரங்
கைந்நனி யடித்துக் கையவள் விடலும்,

விச்சுவலேகையின் பந்தடி

பேசிய முறைமையின் ஏசா நல்லெழில்
வாசவ தத்தைக்கு வலத்தோள் அனைய
அச்சமில் காரிகை விச்சுவ லேகையென்
றுற்ற நாமப் பொற்றொடிக் குறளி
"யானிவண் நிற்பக் கூனியைப் புகழ்தல்
ஏலா" தென்றவள் சேலந் திருத்திக்
கருவிக் கோல்நனி கைப்பற் றினளாய்
முரியுங் காலைத் தெரிய மற்றதில்

தட்டினள் ஒன்றென் றுற்றனள் எழுப்பிப்
பத்தியிற் குதித்துப் பறப்பன வாகியும்
வாங்குபு கொண்டு வானவிற் போல
நீங்கிப் புருவம் நெரிவுடன் எற்றியும்
முடக்குவிரல் எற்றியும் பரப்புவிரற் பாய்ச்சியும்
தனித்துவிரல் தரித்தும் மறித்தெதிர் அடித்தும்
குருவிக் கவர்ச்சியின் அதிரப் போக்கியும்
அருவிப் பரப்பின் முரியத் தாழ்த்தியும்
ஒருபாற் பந்தின் ஒருபாற் பந்துற
இருபாற் றிசையும் இயைவன வாகிப்
பாம்பொழுக் காக ஓங்கின ஓட்டியும்
காம்பிலை வீழ்ச்சியின் ஆங்கிழித் திட்டும்
முன்னிய வகையான் முன்னீ ராயிரத்
தைந்நூ றடித்துப் பின்னவள் விடலும்,

ஆரியையின் பந்தடி

சீரியல் பதுமைதன் சிந்தைக் கொப்பெனும்
காரியை மயிலன ஆரியை புகுதா,
நுணங்குகொடி மருங்குல் நோவ அசைஇ
மணங்கமழ் கூந்தல் வகைபெற முடித்தும்
சூடக மேற்றியும் பாடகந் திருத்தியும்
நாடக மகளிரின் நன்கனம் உலாவியும்
இருகையும் அடிப்ப விசும்பொடு நிலத்திடை
திரிபுவீழ் புட்போல் ஒருவயின் நில்லா
தெழுந்துவீழ் பந்தோ டெழுந்துசெல் வனள்போல்
கருதரு முரிவொடு புருவமுங் கண்ணும்
வரிவளைக் கையும் மனமும் ஓட
அரியார் மேகலை ஆர்ப்பொடு துளங்கவும்
அரிமலர்க் கோதையோ டணிகலஞ் சிதறவும்
இருந்தனள் நின்றனள் என்பதை யறியார்,
பரந்த பஃறேள் வடிவின வாகித்
திரிந்தனள் அடித்துத் திறத்துளி மறித்தும்
முரியுந் தொழிலொடு மூவா யிரந்தை
முறையின் எற்றிப் பந்துநிலத் திட்டாள்.

—கொங்குவேளிர்.

## 2. பெரிய புராணம்

### இளையான்குடி மாறநாயனார் புராணம்

*மாறனார் அன்பின் சிறப்பு*

ஏரின் மல்கு வளத்தி னால்வரும்
    எல்லை யில்லதொர் செல்வமும்
நீரின் மல்கிய வேணி யாரடி
    யார்தி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை
    திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை
    பெற்ற நீடு பயன்கொள்வார் : (1)

ஆரம் என்பு புனைந்த ஐயர்தம்
    அன்பர் என்பதொர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினும்
    நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள்
    குவித்து நின்று செவிப்புலத்(து)
ஈர மென்மது ரப்ப தம்பரி
    வெய்த முன்னுரை செய்தபின், (2)

கொண்டு வந்து மனைப்பு குந்து
    குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆத னத்திடை
    வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு
    சுவைத்தி றத்தன ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில்
    அமுது செய்ய அளித்துளார். (3)

ஆளும் நாயக ரன்ப ரானவர்
    அளவி லாருள மகிழவே
நாளும் நாளும் நிறைந்து வந்து
    நுகர்ந்த தன்மையின் நன்மையால்

நீளு மாநிதி யின்ப ரப்பு
நெருங்கு செல்வம் நிலாவிளண்
டோளி ஞரள கைக்கி ருத்திய
தோழ ஞரென வாழுநாள். (4)

வறுமையிற் செம்மை

செல்வம் மேவிய நாளில் இச்செயல்
செய்வ தன்றியும் மெய்யிளுல்
அல்லல் நல்குர வான போதினும்
வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்ல
மறைந்து நாடொறு மாறிவந்
தொல்லே யில்வறு மைப்ப தம்புக
உன்னி ஞர்தில்லே மன்னிஞர். (5)

இன்ன வாறு வளஞ்சு ருங்கவும்
எம்பி ரான்இளே யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குதல்
இன்றி உள்ளன மாறியும்
தன்னே மாறி இறுக்க வுள்ள
கடன்கள் தக்கன கொண்டுபின்
முன்னே மாறில் திருப்ப ணிக்கண்
முதிர்ந்த கொள்கைய ராயினர். (6)

அடியவர் வடிவில் வந்த சிவபெருமானுக்கு
அமுது அளிக்க விரும்புதல்

ஈர மேனியை நீக்கி இடங்கொடுத்
தார இன்னமு தூட்டுதற் காசைபால்
தார மாதரை நோக்கித் "தபோதனர்
தீர வேபசித் தார்;செய்வ தென்"என்று, (7)

நமக்கு முன்பிங் குணவிலே யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாம்இன் னடிசில் தகவுற
அமைக்கு மாறெங்ங னேஅணங் கே"என, (8)

மாது கூறுவாள் "மற்றொன்றுங் காண்கிலேன்;
ஏதி லாரும் இனித்தரு வாரிலை;
போதும் வைகிற்று; போமிடம் வேறிலை
தீது செய்வினை யேற்கென் செயல்" என்று, (9)

"செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலு மாகுமற்
றல்ல தொன்றறி யேன்" என் றயர்வுற, (10)

மற்றம் மாற்றம் மனைவியார் கூறுமுன்
பெற்ற செல்வம் எனப்பெரி துண்மகிழ்ந்
துற்ற காதலி னல்ஒருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார். (11)

இருளின் சிறப்பு

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்பண் அறிவருங் கங்குல்தான்
கருகு மையிரு ளின்கணம் கட்டுவிட்
டுருகு கின்றது போன்ற துலகெலாம். (12)

எண்ணும் இவ்வுலக கத்தவர் யாவரும்
துண்ணெ னும்படி தோன்றிமுன் தோய்ந்திடில்
வண்ணம் நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து, (13)

உள்ளம் அன்புகொண் டூக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினர்
வள்ள லார்இளை யான்குடி மாறனார். (14)

நெல் முளையை வாரிக்கொண்டு வருதல்

காலி னாற்றட விச்சென்று கைகளால்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி இடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர். (15)

வந்தபின் மனைவி யாரும்
வாய்தலி னின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரில்
சேற்றினை அலம்பி ஊற்றி
"வெந்தழல் அடுப்பின் மூட்ட
விறகில்லை" என்ன மேலோர்
அந்தமில் மனையில் நீடும்
அலக்கினை அறுத்து வீழ்த்தார். (16)

உணவு சமைத்தல்

முறித்தவை அடுப்பின் மாட்டி
முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் அரிசி யாக்கி
வாக்கிய உலையிற் பெய்து
வெறுப்பிலின் னடிசி லாக்கி
மேம்படு கற்பின் மிக்கார்
"கறிக்கினி என்செய் கோம்"என்
றிறைஞ்சினர் கணவ னாரை. (17)

"வழிவரு மிளைப்பி னோடும்
வருத்திய பசியி னாலே
அழிவுறும் ஐயன்" என்னும்
அன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க்
குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப்
பறித்தவை கறிக்கு நல்க, (18)

மனைவியார் கொழுநர் தந்த
மனமகிழ் கறிகள் ஆய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க
புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினில் வேறு வேறு
கறியமு தாக்கிப் பண்டை
நினைவினுல் குறையை நேர்ந்து
திருவமு தமைத்து நின்று, (19)

கணவனார் தம்மை நோக்கிக்
கறியமு தான காட்டி
"இணையிலா தாரை ஈண்ட
அமுதுசெய் விப்போம்" என்ன
உணர்வினால் உணர ஒண்ணா
வொருவரை உணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங்
கவர்துயி லகற்ற லுற்றார். (20)

"அழுந்திய இடருள் நீங்கி
அடியனேன் உய்ய என்பால்
எழுந்தருள் பெரியோய் ஈண்ட
அமுதுசெய் தருள்க" என்று
தொழும்பனார் உரைத்த போதில்
சோதியா யெழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும்
தொண்டரும் திகைத்து நின்றார். (21)

இறைவன் மாறனார்க்கு அருள்புரிதல்

"அன்பனே அன்பர் பூசை
அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலக மெய்தி
இருநிதிக் கிழவன் றானே
முன்பெரு நிதிய மேந்தி
மொழிவழி ஏவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க" என்றே
அருள்செய்தான் எவர்க்கும் மிக்கான். (22)

—சேக்கிழாரடிகள்.

# 3. வில்லி பாரதம்

## ஆரணிய பருவம்

### பழம் பொருந்து சருக்கம்

*திரௌபதி நெல்லிக் கனியைக் காணுதல்*

அந்நெடு வனத்திற் சின்னாள்
 அகன்றபின் அமித்தி ரன்பேர்
என்னுமா முனிவற் கென்றே
 யாவரு மருகு செல்லா
நன்னல மிகுந்த நெல்லி
 நறுங்கனி யொன்று கண்டாள்
கன்னலும் புளிக்கு மின்சொற்
 கயிரவங் கருகும் வாயாள். (1)

*அக் கனியைப் பறித்துத் தருமாறு திரௌபதி அருச்சுனனிடம் கூறுதல்*

இக்கனி யெனக்கு நீநல்
 கென்றுவில் விறுத்துக் கொண்ட
மைக்கனிக் களவு மானும்
 வடிவுடை விசய னோடு
மெய்க்கனி வுடைமை தோன்ற
 விளம்பினள் வீசு தென்றல்
முக்கனி கமழுஞ் சோலை
 முகில்தவழ் நாடன் பாவை. (2)

*அருச்சுனன் நெல்லிக் கனியை வீழ்த்துதல்*

சோமகர்க் கரசன் பாவை
 சொல்லுமுன் வில்லு வாங்கி
மாமுனிக் குணவாய் நின்ற
 மதுரவா மலகந் தன்னை
ஏழுறை தொடுத்து வீழ்த்தி
 ஈதலு மாங்கட் கண்டோர்
ஏமுறக் காணில் இப்போ
 தென்படும் இறுத்தோ னென்றார். (3)

அக் கனியைத் தருமன்முன் வைத்து அருச்சுனன் தான் தவறு செய்ததற்கு வருந்திக் கூறுதல்

கண்டவம் முனிவர் சொல்லக்
கடவுளர் கோமான் மைந்தன்
கொண்டவக் கனியை மூத்த
கொற்றவன் திருமுன் வைத்து
மண்டழற் பாவை சொல்லால்
மதியிலே னெய்தே னென்றான்
திண்டிறற் றேவர்க் காகத்
திதிமைந்த ராவி கொண்டான். (4)

தருமன் வருந்துதல்

காடுறை வாழ்க்கை யெய்திக்
காய்கனி மூலந் தின்று
நீடுறு காலம் போக்கி
நீங்கலா திருக்கு மெம்மை
நாடொறும் இடையூ றன்றி
நண்ணுவ தில்லை யாயின்
ஏடுறு தாராய் செய்வ
தென்கொலென் றியம்பி னானே. (5)

முனிவனை வணங்கி உண்மை கூறுமாறு வீமன் கூறுதல்

அவ்வுரை வீமன் கேட்டாங்
கமித்திரன் வந்த போதே
இவ்வுரை கேட்கி னம்மை
யெரியெழச் சபித்தல் திண்ணம்
வெவ்வுரை யுரையா முன்ன
மெய்ம்முனி தன்னைப் போற்றிச்
செவ்வுரை கூறி னம்மைச்
சீறுமோ சீறல் செய்யான். (6)

பொறுத்திடு மேலி டாவைம்
புலத்தினை னுதை லாலே
மறுத்திடான் ஐய நின்தன்
மாசிலா வாய்மை யென்ன

நிறுத்திடுந் துலேயோ டொப்பான்
நினேவினுக் கிசையத் தெவ்வைச்
செறுத்திடு விசயன் மீளச்
செப்பினன் செப்ப மாக. (7)

அருச்சுனன் கூறுதல்

செய்தவ னினிது மாந்தத்
தேவர்நா ளொன்றுக் கொன்றும்
கைதவ மில்லா நெல்லிக்
கனியினேக் கருதா ருமல்
எய்தவன் தன்னே யன்றி
யாரையு மிடான்வெஞ் சாபம்
மெய்தவ ருத சொல்லாய்
வெருவுதல் என்கொ லென்ருன். (8)

தருமனின் விடை

வேந்தனம் மாற்றங் கேட்டு
வில்வலான் தன்னே நோக்கி
ஏந்திழை சொல்ல வோரா
தினியவிக் கனியின் றீர்ந்தாய்
மாந்தரின் மடங்க லொப்பாய்
வருத்தநீ யுழக்க யாமோ
பேர்ந்துபோய்ப் பிழைப்போ மென்ருன்
பிதாவினுங் கருணே மிக்கான். (9)

நகுலன் கூறுதல்

அம்முனி வந்த வாபத்
ததனினுங் கொடிதிக் கானத்
திம்முனி யுணவு கொண்ட
தெனவெரீஇ நகுலன் தானும்
வெம்முனி வகற்றி நாமும்
மேம்பட வேண்டி னின்னந்
தெம்முனி திகிரி யானேச்
சிந்தனே செய்தி யென்ருன். (10)

சகாதேவன் கூறுதல்

விளைதவ முனிவன் கண்டு
வெகுளுமு னவன்தாள் போற்றிக்
கிளைபடு நெல்லி வாசக்
கேழுறு கனிமுன் வைத்தால்
உளைவுற முனியா னம்மை
யுறுதிமற் றிதுவே யென்று
இளையவன் தானும் தம்மு
னினைவினுக் கேற்பச் சொன்னான். (11)

தருமன் கண்ணனை நினைத்தலும் அங்கு வந்த கண்ணன் கூறுதலும்

திண்மையா லுயர்ந்த நீவிரை விருமித்
தீயிடைப் பிறந்தசே யிழையும்
உண்மையா னெஞ்சி னிகழ்ந்தபட் டாங்கீண்
டுரைத்திடக் கோட்டின்மீண் டொன்றும்
வண்மையா லுயர்ந்தீ ரென்றுசெம் பவள
வாய்மலர்ந் தருளினான் மாயோன்
தண்மையார் கருணைத் தராபதி முதலோர்
சாற்றுவார் தம்மனத் தியல்பே. (12)

பாண்டவர் ஐவரும் முறையே தம் எண்ணங்களைத் தெரிவித்தல்

தருமன்

வெல்லுக அறமும் மெய்ம்மையும் பொறையும்
மேகமே னியனும்வெல் லாமற்
செல்லுக பாவம் பொய்ம்மொழி கோபந்
தயிர்த்தியர் குலமெனத் தெளிவுற்(று)
அல்லும்வெம் பகலும் என்மன நிகழும்
அலகையாம் அன்னையை முன்னங்
கொல்லுதல் புரிந்தோய் என்றனன் முரசங்
கோட்டிய கொற்றவெங் கொடியோன். (13)

வீமன்

பிறர்மனே வியரைப் பெற்றதா யெனவும்
பிறர்பொரு ளெட்டியே யெனவும்
பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும்
பிறர்துய ரென்துய ரெனவும்
இறுதியே வரினும் என்மனக் கிடக்கை
யெம்பிரா னிவையென வுரைத்தான்
மறலியு மடியு மாறுமல் லியற்கை
வலிமைகூர் வாயுவின் மைந்தன். (14)

அருச்சுனன்

ஊனமே யான ஊனிடை யிருக்கும்
உயிரினைத் துறந்துமொண் பூணும்
மானமே புரப்ப தவனிமே லெவர்க்கும்
வரிசையுந் தோற்றமு மரபும்
ஞானமே யான திருவடி யுடையாய்
ஞாலமுள் ளளவுநிற் றலினல்
ஈனமே உயிருக் கியற்கையா தலினல்
என்றனன் வீமனுக் கிளையோன். (15)

நகுலன்

குலமிக வுடையர் எழில்மிக வுடையர்
குறைவில்செல் வமுமிக வுடையர்
நலமிக வுடையர் என்னினுங் கல்வி
ஞானமற் பமுமிலா தவரை
வலமிகு திகிரிச் செங்கையாய் முருக்கின்
மணமிலா மலரென மதிப்பேன்
சலமிகு புவியில் என்றனன் வாகைத்
தார்புனே தாரைமா வல்லான். (16)

சகாதேவன்

ஒருமொழி யன்னே வரம்பிலா ஞான
முற்பவ காரண னென்றுந்
தருமமே துணைவன் கருணையே தோழன்
சாந்தமே நலனுறு தாரம்

அரியதிண் பொறையே மைந்தன்மற் றிந்த
அறுவரு மல்லதா ருறவென்(று)
இருவரி லிளையோன் மொழிந்தனன் தன்பே
ரிதயமா மலர்க்கிடை யெடுத்தே. (17)

**திரௌபதியும் தன் கருத்தைத் தெரிவித்தபின் நெல்லிக்கனி முன் இருந்த கிளையிற் பொருந்துதல்**

அறுவரு மிவ்வா றுண்மையே யுரைத்தார்
ஆதலால் நிரைநிரைப் படியே
மறுவணி துளப மார்பனுங் கேட்டான்
மாமுனிக் கோதன மான
நிறைசுவை யமுத நெல்லியின் கனியும்
நின்றகொம் பணைந்ததால் என்றும்
பெறுமுறை பெறுமே உள்ளவா றுரைத்தால்
பெரியவர் பேசும்வா சகமே. (18)

—வில்லிபுத்தூரார்.

## 4. மனோன்மணீயம்

இடம்: திருவனந்தையில் சேரன் அரண்மனை. காலம்: காலை.

*[புருடோத்தமன் வீற்றிருக்கிறான்]*

**சேவகன்:** (*வந்து*) எழுதரும் மேனி இறைவ! நின் வாயிலில்
வழுதியின் தூதுவன் வந்துகாக் கின்றான்.

**புரு:** யாரவன்?

**சேவ:** பேர்பல தேவன் என்(று) அறைந்தான்.

**புரு:** (*தனக்குள்*) சோரன்!
(சேவகனை நோக்கி) வரச்சொல்!
(*தனக்குள்*) தூதேன்! எதற்கிக்
கயவனைக் கைதவன் அனுப்பினன்?
நயந்தீ(து) உணர்ந்து நட்டிலன் போன்மே.

**பலதே:** மங்கலம்! மங்கலம்! மலய மன்னவ!
பொங்கலைப் புணரிசூழ் புவிபுகழ் சுமக்கத்
தன்தோள் தாரணி தாங்க எங்கும்
ஒன்னார் தலையொடு திகிரி உருட்டிக்

குடங்கை அணையில் குறும்பர் தூங்க
இடம் பார்த்(து) ஒதுங்கும் தடமுற் றத்து
மேம்படு திருநெல் வேலிவீற் றிருக்கும்
வேம்பார் சீவக வேந்தன் விடுத்த
தூதுயான்; என்பேர் ஓதில்அவ் வழுதியின்
மந்திரச் சிகாமணி, தந்திரத் தலைவன்,
பொருந்தலர் துணுக்குறும் அருந்திறல்
சூழ்ச்சியன்
குடிலேந்திரன் மகன்—

**புரு:** *(தனக்குள்)* மடையன்!
*(அவனை நோக்கி)* வந்ததென்?

**பலதே:** அப்பெரு வழுதி ஒப்பறு மாநகர்
நெல்லையிற் கண்டு புல்லார் ஈட்டமும்
அரவின(து) அரசும் வெருவி ஞெரேலெனப்
பிறவிப் பௌவத் தெல்லையும் வறிதாம்
ஆணவத் தாழ்ச்சியும் நாண அகழ்வலம்
தொட்டஞ் ஞானத் தொடர்பினும் உரமாய்க்
கட்டிய மதிற்கணம் காக்க விடயத்(து)
எட்டி அழுத்தி இழுக்கும் புலன்களின்
யந்திரப் படைகள் எண்ணில இயற்றி—

**புரு:** வந்த அலுவலென்?

**பலதே.** மன்னவா! நீ ஆள்
வஞ்சிநா டதற்குத் தென்கீழ் வாய்ந்த
நன்செய் நா(டு) என்றொரு நாடுள(து) அன்றே?
எங்கட்(கு) அந்நா(டு) உரித்தாம் அங்கு
பரவு பாடையும் விரவும் ஆசாரமும்
நோக்கில் வேறொரு சாக்கியம் வேண்டா

**புரு:** நல்லது! சொல்லாய்!

**பலதே:** தொல்லையாம் கிழமைபா
ராட்டித் தங்கோல் நாட்டி நடத்த
வல்ல மன்னவர் இன்மையால் வழுதிநாட்(டு)
எல்லையுட் புகுந்தங்(கு) இறுத்துச் சின்னாள்
சதியாநீ அர(சு) ஆண்டாய்........

புரு: அதனால்?

பலதே: அன்னதன் உரிமை மீட்க உன்னியே
முதுநக ராம்எழில் மதுரை துறந்து
நெல்லையைத் தலைநகர் வல்லையில் ஆக்கி
ஈண்டினன் ஆங்கே.

புரு: வேண்டிய(து) என்னை
உரையாய் விரைவில்!

பலதே: உதியனும் செழியனும்
போர்தனி புரியில் யார்கொல் பிழைப்பர்
பங்கமில் இரவியும் திங்களும் துருவி
எதிர்ப்படுங் காலை, கதிர்க்கடுங் கடவுள்
மறையஇவ் வுலகில் வயங்கிருள் நிறையும்
அவர்அந் நிலையில் அமர்ந்திடில் அவ்விருள்
தவறுத் தன்மைபோல் நீவிர் இருவரும்
சமர் செயில் உலகம் தாங்கா(து) என்றே
எமையிங்(கு) ஏவி இவ்வகைக் கேற்றவை
நீதியாய் எடுத்தெலாம் ஓதி, நன் செய் நா(டு)
உடையார்க்(கு) உரிமை நோக்கி அளிப்பதே
கடன் எனக் கழறிப் பின்நிகழ் உன் கருத்(து)
அறிந்து மீளவே விடுத்தான்.

புரு: ஆ! ஆ!
முடிந்ததோ? இலையெனின் முற்றும் செப்புவாய்!

பலதே: மேலும் ஒருமொழி விளம்புதும் வேந்தே!
சாலவும் நீவிர் பகைக்கின் சகமெலாம்
ஆழ்துயர் மூழ்கலும் அன்றி உங்கட்(கு)
ஏது விளையுமோ? அறியேம். ஆதலின்,
அஞ்சா அரியே(று) அன்னசீ வகனுடன்
வெஞ்சமர் விளைத்தல் நன்றல.

புரு: (பயந்தாற்போல்) ஆ! ஆ!

பலதே: நன்செய் நா(டு) இனிமேல் மீட்டு நல்கலும்
எஞ்சலில் பெரும்புகழ்க் கேற்ற(து) அன்றெனில்,
உரைக்குதும் உபாயம்ஒன்(று) உசிதன் மனையில்

திரைக்கடல் அமுதே உருக்கொண் டதுபோல்
ஒருமலர் மலர்ந்தங் குறைந்தது; தேன்உண
விரைமலர் தேரளி வீற்றிங்(கு) இருந்தது!
அன்னவள் மன்ன! நின் அரியணை அமரில்
தென்னவன் மனமும் திருந்தும் நன்செய் (நாடு)
உன்னதும் ஆகும்.

புரு: உண்மை ஓ! ஓ!
வண்டு மலரிடை அணைய உன் நாட்டிற்
கொண்டு விடுவரே போலும்! நன்று!
கோதறும் இருபுறக் காதல் அன்றிஎம்
நாட்டிடை வேட்டல்மற்(று) இல்லை மேலும் நம்
அரியணை இருவருக்கு இடங்கொடா(து);
அறிகுதி!

பலதே: (*தனக்குள்*) சுரிகுழல் வதுவை போனது! சுகம்! சுகம்!

புரு: கருதா துணையிங்கு ஏவிய கைதவன்
ஒருவா ரத்திற் குள்ளாய் அவன்முடி
யார்பகை இன்மையால் இதுகா(று) அணிந்து
பார்வகித் தானெனப் பகரா(து) அறிவன்!
விரித்துநீ எம்மிடம் உரைத்த புரிசையும்,
அரிக்குநேர் என்னநீ அறைந்த அரசனும்
இருப்பரேல் காண்குவம் அவர்வலி யினையும்.

—பேராசிரியர், சுந்தரம் பிள்ளை.

## 5. வள்ளல் அதியமான்

### கொங்கு நாட்டின் சிறப்பு

கன்னல் வளரும் வயலெங்கும்
கதிர்முத் தொளிரு மயலெங்கும்
தென்னை யீனும் விரிபாளை
தேமா வீழ்த்தும் மடுவாளை
நன்னீ ரோடும் பன்னண்டு
நாளும் பாடும் பொன் வண்டு
பொன்னி பாயுந் தென்னாடு
பொருவில் கொங்கு நன்னாடே (1)

தகடூரின் பெருமை

தெங்கு கமுகு நெடும்பலவு
	தேமா வாழை வளர்செந்நெல்
துங்க ஞாயி லரணுகச்
	சூழ்ந்து விளங்கு நகரென்ப
மங்குன் முழங்க மயிலாடும்
	வண்ணப் பளிக்கு வெற்பன்ன
அங்கண் முழவ மெழமகளிர்
	ஆடு மாடத் தகடூரே. (2)

அதியமான் தோற்றம்

பூவி னியைந்த மணமென்னப்
	பொன்னி னியைந்த மணியென்ன
ஆவி யியைந்த அழகுடம்பிற்
	கணிசெய் நெற்றிப் பொட்டென்ன
நாவி னியைந்த பாவாணர்
	நாளும் புகழு மதியர்குலத்(து)
ஏவி னியைந்த வில்வல்லான்
	எழினி நெடுமான் தோன்றினனுல். (3)

கலைபயிலல்

மழலை மென்சொ லீன்றூர்க்கு
	வழங்கும் பொழுதே பள்ளியினிற்
பழகு சிருரொ டின்றமிழ்த்தேன்
	பருகி னன்பன் னூலறிவு
குழவி நிலவின் கலையென்னக்
	கூடிக் கூடி நிறைவெய்த
அழகு நன்னூ லறிந்தாரோ(டு)
	அளவ ளாவி யகமகிழ்வான். (4)

படைப்பயிற்சியும் அரசியலும்

வில்வாள் பயின்றுன்; மாவேறும்
	வித்தை பயின்றுன்; வேத்தியனூல்
வல்லாங் குணர்ந்தான்; முறையுணர்ந்தான்;
	வடிவார் குழலி தனைமணந்தான்;

செல்வா னுலகந் தந்தைசெலச்
செம்பொற் கட்டின் மீதிவர்ந்து
நல்லார் புகழக் குடிமகிழ
ஞாலங் காத்தான் நெறியறிந்தே. (5)

ஔவை பரிசில்நாடிச் செல்லல்

அன்ன காலை யருந்தமிழ்ப் பாடினி
மென்ம யில்புரை மெல்லிய லாள்ஔவை
மன்ன னஞ்சி வயின்பரி சில்பெற
உன்னி யாழ்கொண் டுவந்தெழுந் தாளரோ. (6)

மின்னி லத்திடை மென்னடை கொள்ளல்போல்
அன்னம் பொய்கை யகன்றதர் செல்லல்போல்
பொன்னம் பூங்கொடி கால்கொடு போகல்போல்
நன்னு தற்பெண் ணணங்கு நடந்தனள். (7)

இயற்கைக் காட்சி

ஓடு தீம்பலாத் தேனி னுயர்ந்தநெல்
மாடு நின்று வணங்கவும் மாடமேல்
ஆடு மாமயில் வாவென் றகவவும்
நீடு மாமதி லூரை நெருங்கினள். (8)

அரசவை யடைதல்

அகழ்க டந்தரண் வாயி லகன்றுபல்
புகழ்க டந்த புலமையோர் சூழ்தர
மகிழ்க டந்தவேன் மன்ன னுறையவை
துகள்க டந்தமென் தோகை புகுந்தனள். (9)

வணக்கமும் வரவேற்பும்

வாழ்க மன்னவ! மன்னுக கோலென
ஏழி சைமுர லியாழொ டிறைஞ்சினள்
மூழ்கு வேலவன் முன்னம் வருகெனத்
தாழ்வி லாதோ ரிருக்கையைத் தந்தனன். (10)

என்று காண்குவ மென்றெழு நெஞ்சினன்
மன்ற லந்தொடை மன்னன் மகிழ்ந்தெமக்(கு)
இன்று நின்வர வின்ப மளித்தது
நன்று நின்வர வென்று நவின்றனன். (11)

ஔவைபாடலும் அவையோர் மகிழ்ச்சியும்

இருந்த ஔவைதன் யாழை யெடுத்ததன்
நரம்பு தொட்டு நலந்திகழ் நைவளம்
திருந்து கைவிரல் கொண்டு தெறித்திசை
விருந்த ளித்து மிகுசுவை யூட்டினாள். (12)

திவவி யாழிசை சீரிது; வாயிசை
தவவு யர்ந்தது; தண்டமிழ்ப் பாடலும்
நவில்பண் ணும்பொரு ளும்மிக நல்லவென்(று)
உவகை யுற்றனர் வேந்துமற் றோருமே. (13)

விருந்தளித்தல்

இன்மொழி கூறி யில்ல
மேகித்தன் துணைக்குக் காட்டித்
தன்னரு கிருத்திப் பொன்னற்
றட்டினிற் சுவையூ ணூட்டி
மென்னறுந் திரைய னல்கி
விருப்பொடு பழகிப் பன்னாள்
பொன்மணி யீயா தஞ்சி
போக்கினன் பிரிவுக் கஞ்சி. (14)

எண்ணமும் வாயிலோற்கு இயம்பலும்

கல்வியில் வல்லன்; கண்டு
கனிந்துரை யாடல் வல்லன்;
வில்லினில் வல்லன்; யார்க்கும்
விருந்திடல் வல்லன்; மாவிற்
செல்லலில் வல்லன்; செங்கோல்
செலுத்தலில் வல்லன்; செல்வம்
நல்கலி லல்லன் போலும்
நாட்கழிக் கின்றான் வேந்தன். (15)

என்றெணி யாழெ டுத்தாள்;
　　இறைவன்பாற் செல்லாள்; வாயில்
நின்றவன் பாற்போய் வேந்தென்
　　னிலைமைகண் டீயான் காடு
சென்றுகொல் தச்சன் போலச்
　　செல்வர்பாற் பரிசில் கொள்வேன்
நன்று;போய் வருவ லென்று
　　நவின்றனள் வாயி லோயே. (16)

வாயிலோன் கூற்றும் மன்னவன் கூற்றும்

வாயிலோன் விரைந்து மன்ன! வணங்குவன்;ஔவை பெற்ற
தாயினு மினியாள் யாழைத் தாங்கினள்; வெகுண்டு பாடிப்
போயின ளென்றான்; அஞ்சி யஞ்சினான்; புறம்போய்க் கண்டு
நீயிரங் குக;யாய்! மீள்க நீடுயர் மனைக்கென் றானே. (17)

பரிசில் பெற்று மீளல்

மீண்டனள் வெகுளி நீங்கி
　　விளங்குபொன் மணிமெல் லாடை
ஆண்டகை யளிப்பக் கொண்டாள்
　　அடைபுனற் பொய்கை போன்றாள்
பூண்டபே ரன்பி னானைப்
　　புகழ்ந்தனள் விடைகொண் டம்மா(து)
ஆண்டுநின் றகன்றாள் வள்ளல்
　　வள்ளுவ னணியூர் சேர்வாள். (18)

—வித்துவான் பெ. கோவிந்தன்.

# ௬. பல்சுவை

## 1. வருணனை

### நிலாத் தோற்றம்

கானெலா மலர்ந்த முல்லை
　　ககனமீ தெழுந்த தென்ன
வானெலாம் வயங்கு தாரை
　　நிரைநிரை மலர்ந்து தோன்ற
வேனிலான் விழவின் வைத்த
　　வெள்ளிவெண் கும்ப மென்னத்
தூநிலா மதியம் வந்து
　　குணதிசைத் தோன்றிற் றம்மா. (1)

—*வில்லிபுத்தூரார்.*

### சோலைக் காட்சி

குயிலினம் வதுவை செய்யக்
　　கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடும்
　　அரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை அரச அன்னம்
　　பனிமலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச்
　　செவ்வழி முரல்வ சோலை. (2)

—*கம்பர்.*

## 2. சீட்டுக் கவி

### பெருமாள் செட்டியார்க்கு எழுதியது

**கணிகொண்ட பஞ்சலட் சணமும்ரா மாயணக்**
　　**கடலையு முணர்ந்தபுலவன்**
**கவிராசர் புகழ்கின்ற காழியரு ணாசலக்**
　　**கவிராய னெழுதுமோலை**

மணிகொண்ட மார்பிலங் கப்பமகி பாலன்
மகிழ்ந்தசுதன் வணிகாதிபன்
வருசீர் படைத்தநற் பெருமாள் நரேந்திரன்
மனமுவந் தினிதுகாண்க
அணிகொண்ட தியாகேசர் வண்ணமுறை செய்ததும்
அதற்குவெகு மதிசெய்ததும்
அதுநமக் குபகார மானதுவு மிப்புவியில்
அறியாத பேருமுளரோ
பணிகொண்ட ராமகீர்த் தனையுமப் படியே
பரிந்துநீ கேட்கவேண்டும்
பாரிலோ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
படைத்துவாழ்ந் திடுகமாதோ.

—அருணாசலக் கவிராயர்.

## 3. சிலேடை

சேலார் செழுந்தடத்திற் செந்தா மரையினிற்றேன்
காலாறு பாயுங் கலைசையே—சூலேறு
பாணியார் வேணியார் பாகீ ரதியென்னும்
பாணியார் வேணியார் பற்று. (1)

—தொட்டிக்கலை, சுப்பிரமணியத் தம்பிரான்.

நஞ்சிருக்குந் தோலுரிக்கும் நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது—விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம். (2)

—காளமேகப் புலவர்.

## 4. சிறுபிரபந்தம்

### திருவேங்கடத் தந்தாதி

திருவேங் கடத்து நிலைபெற்று நின்றன; சிற்றன்னையால்
தருவேங் கடத்துத் தரைமேல் நடந்தன; தாழ்பிறப்பின்
உருவேங் கடத்துக் குளத்தே யிருந்தன; உற்றழைக்க
வருவேங் கடத்தும்பி அஞ்சலென் றோடின மால்கழலே. (1)

—பிள்ளைப்பெருமாளையங்கார்.

## திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்

கண்ணு லுனது திருவடியைக்
கண்டா தரவு பெருகியிரு
கையால் தொழுதுன் திருக்கோயில்
காலால் வலஞ்செய் துனதுபுகழ்

பண்ணு லுருகிப் புகழ்ந்துகண்ணீர்
பாயா எனையுந் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங்கருணை
படைத்து விரிஞ்சைப் பதிவாழும்

அண்ணல் வருக! வுலகமுழு
தாண்டாய் வருக! கதிதரும்எம்
ஐயா வருக! ஆறுமுக
அப்பா வருக! விளங்குகதிர்

வண்ணு வருக! மயிலேறு
மன்னு வருக! அடியார்கள்
வாழ்வே வருக! தெய்வசிகா
மணியே வருக! வருகவே.!! (2)

— மார்க்கசகாயதேவர்.

## முக்கூடற் பள்ளு

### நகர்வளம்

#### மூத்தபள்ளி

கொண்டல் கோபுரம் அண்டையிற் கூடும்
கொடிகள் வானம் படிதர மூடும்
கண்ட பேரண்டந் தண்டலை நாடும்
கனக முன்றில் அனம்விளை யாடும்
விண்ட பூமது வண்டலிட் டோடும்
வெயில்வெய் யோன்பொன் னெயில்வழி தேடும்
அண்டர் நாயகர் செண்டலங் காரர்
அழகர் முக்கூடல் ஊரெங்கள் ஊரே. (3)

—என்னயினுர்ப்புலவர்.

## திருவருணைக் கலம்பகம்

### சம்பிரதம்

பரவைபொ ருக்கெழவுங் ககனம்வ டுப்படவும்
பரிதிவ டக்கெழவு நிருதிகு ணக்குறவும்
இரவுப கற்படவும் பகலிர வொத்திடவும்
எளிதினி யற்றிடுவோ மிவைசில வித்தைகளோ
அரவம ணிப்பணியா னனலகி ரிப்பெருமான்
அருணகி ரிக்கிணையா வவனித லத்திடையே
கருதிம னத்தினிலே சிறிதுநி னைத்தளவே
கதியை யளித்திடுமோர் பதியுமு ணர்த்துவமே. (4)

—சைவ எல்லப்ப நாவலர்.

## 5. வழிபாட்டுப் பாடல்

### தேவாரம்

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோ ரணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி
எழுஞ்சுடராய் எம்அடிகள் நின்ற வாறே! (1)

—அப்பர்.

### தாயுமானர் பாடல்

அரும்பொனே! மணியே! எ னன்பே! எ னன்பான
அறிவே! எ னறிவிலூறும்
ஆனந்த வெள்ளமே! என்றென்று பாடினேன்,
ஆடினேன், நாடிநாடி
விரும்பியே கூவினேன், உலறினேன், அலறினேன்,
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்;

இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு ளுலுமுனை
இடைவிட்டு நின்றதுண்டோ ?
என்றுநீ, அன்றுநான் உன்னடிமை யல்லவோ?
யாதேனு மறியாவெறுந்
துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ ?
தொண்டரொடு கூட்டுகண்டாய்!
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே, பரஞ்
சோதியே, சுகவாரியே ! (2)

—தாயுமானுர்.

## நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

### திருப்பள்ளி யெழுச்சி

கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனவிரு ளகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம்
வானவ ரரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தன ரிவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலி லலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. (3)

—தொண்டரடிப்பொடி யாழ்வார்.

## தேம்பாவணி

அறந்தாய் தந்தை சுற்றமு மற்(று)
அனைத்து நீயே கதிநீயே
பிறந்தாய் உலகிற்(கு) உயிரன்னுேய்
பிறந்தெம் துயரும் எம்பகையும்
துறந்தாய் எங்கள் சிறைதீர்த்தாய்
துகள்பூட் டியவீட்(டு) உயர்வாயில்
திறந்தாய் இவையா வருமறியத்
திறன்செய்(து) அருள்செய் திரங்காயோ ! (4)

—வீரமாமுனிவர்.

# மனப்பாடம் செய்தற்கு உரிய பகுதி

## I. வாழ்த்து

1. கடவுள் வாழ்த்து
   *செய்யுள் 1* — *வரிகள் 4*
2. மொழி வாழ்த்து
   *செய்யுள் 1* — ,, *6*

## II. அறவுரை

1. திருக்குறள் :
   *செய்யுள் எண் : 1, 5, 10, 11, 21, 22, 29, 31, 35, 46, 47, 51, 54, 63, 78, 91, 98.* — ,, *34*
2. சிறுபஞ்ச மூலம் 3 — ,, 4
3. நான்மணிக்கடிகை 2 — ,, 4

## III. தொடர்நிலைச் செய்யுள்

1. பெரிய புராணம் 12, 22 — ,, 8
2. வில்லி பாரதம் 14, 16 — ,, 16
3. வள்ளல் அதியமான் 15, 16 — ,, 16

## IV. பல்சுவை

1. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் 1 — ,, 8

*ஆக வரிகள் 100*

# உரைநடைப் பகுதி

## க. மறைமலை அடிகள்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

பிறப்பு

புனல் நாடு எனப் புகழ் பெற்ற பொன்னிவள நன்னாட்டிலே, தஞ்சை மாவட்டத்தில் உள்ள நாகப்பட்டினத்திற்கு அண்மையில் விளங்கும் காடம்பாடி என்னும் சிற்றூரில் 15-7-1876 இல் மறைமலையடிகள் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சொக்கநாதபிள்ளை என்பது. தாயார் சின்னம்மையார். சோழியச் சைவ வேளாளர் குலத்திலே தோன்றிய சொக்கநாதபிள்ளை நெடு நாட்களாக மக்கட் பேறு இன்றியிருந்தார். அதனால் மனங்கவன்று அவர்தம் துணைவியாருடன் திருக்கழுக்குன்றம் என்னும் சீரிய ஊரினை யடைந்தார்; அங்குக் கோவில் கொண்டுள்ள கண்ணுதற் பெருமானை நாடோறும் வழிபட்டு வந்தார். இருவரும் பலநாள் நோன்புகளை ஆற்றி வந்தனர். இறைவன் திருவருளால் சில திங்கள் சென்றபின் சின்னம்மையாருக்கு ஆண் மகவு ஒன்று பிறந்தது. குழந்தையைக் கண்ட பெற்றோர் இருவரும் பெருமகிழ்வு கொண்டனர். பெறுதற்கரிய தவத்தால் பெற்றெடுத்த அக்குழந்தைக்கு வேதாசலம் எனப் பெயரிட்டனர். மறைமலை அடிகள் என்பது துறவுக் கோலம் பூண்டபின் உண்டாகிய சிறப்புப் பெயர்.

இளமையும் கல்வியும்

அடிகள் பத்து ஆண்டுகள் நிறையாத சிறுவராய் இருந்தபோதே தந்தையார் சொக்கநாதபிள்ளை காலமானார். "தந்தையொடு கல்வி போம்" என்னும் பெரியோர் மொழிக்கு இலக்கு ஆகாமல் அடிகள் தந்தையார் இறந்தபின்னரும்,

முயற்சியுடையவராயிருந்து அன்னையாருடைய ஆதரவால் பள்ளியில் தொடர்ந்து கல்வியைக் கற்று வந்தார். பள்ளிப் படிப்பு முடித்தபின் அடிகள் கல்லூரியிற் சேர்ந்து ஓராண்டுக் காலம் ஆங்கிலம் முதலியவற்றைக் கற்று வந்தார்; பின்னர்க் குடும்பத்தில் ஏற்பட்ட பொருள் முட்டுப் பாட்டினால் ஆங்கிலக் கல்வியை அவ்வளவில் நிறுத்திக்கொண்டார்.

தமிழ்த்துறையில் தேர்ச்சி

அந்நாளில் நாகப்பட்டினத்தில் நாராயணசாமிப்பிள்ளை என்னும் நற்றமிழ் அறிஞர் ஒருவர் இருந்தார். அவர் தமிழ் இலக்கணம் இலக்கியம் முதலியவற்றை ஐயமறக் கற்ற மூதறிஞர். மனோன்மணீயம் என்னும் நாடக நூலின் ஆசிரியராகிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்களுக்கும், அவர் போன்ற மற்றும் சிலருக்கும் தமிழ் கற்பித்த சிறப்பு உடையவர். அவர் நாகையிற் புத்தகக் கடை ஒன்றும் வைத்திருந்தார். அந்நாளில் அச்சிட்டு வெளியாகியிருந்த எல்லாத் தமிழ் நூல்களும் அவருடைய கடையில் விற்பனை செய்வதற்கு வாங்கி வைக்கப்பட்டிருந்தன. மாணவர் தமக்கு வேண்டிய நூல்களை அவரிடம் விலைக்கு வாங்குவது மட்டும் அன்றிப் பாடங் கேட்கத் தகுந்த நூல்களை அவரிடம் பாடங் கேட்டுத் தேர்ச்சி பெற்றனர்.

மறைமலை அடிகள் நாராயணசாமிப்பிள்ளை அவர்களின் பெருமையைக் கேள்வியுற்று நேரிற் சென்று "என்னைத் தங்கள் மாணவனாக ஏற்றுக்கொண்டு தமிழ்நூல்களை எனக்குக் கற்பித்தல் வேண்டும்" என வணங்கிக் கேட்டுக் கொண்டார். நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் மறைமலையின் வரலாற்றைக் கேட்டறிந்தார்; தமிழ்க் கல்வியில் அவர் கொண்டிருக்கும் பற்றைக் கண்டு பெருவியப்புக் கொண்டார். தம்முடைய மாணவர்களுள் ஒருவராகச் சேர்த்துக் கொண்டு கல்வி கற்பிக்கத் தொடங்கினார். மற்றைய மாணவர்களைப் போல் படித்தோம் என்னும் பெயருக்குப் படிக்காமல் அடிகள் பிள்ளையவர்களிடம் கருத்தூன்றிக் கல்வியைக் கற்றார். பெரும்பாலும் பிள்ளையவர்களுடனேயே தங்கியிருந்து அவருக்கு வேண்டிய வேலைகளையும் செய்தார்.

அடிகளாரின் மெய்யன்பு நாராயணசாமிப்பிள்ளையவர்கட்கு மிகுந்த உவகையை அளித்தது.

## மணமும் மக்கட்பேறும்

மறைமலை தம் பதினேழாம் அகவையில் சவுந்தரவல்லி என்னும் மங்கையாரைத் திருமணம் செய்துகொண்டார். சவுந்தரவல்லி அம்மையார் அடிகளார்க்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாக அமைந்ததோடு,

> "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்குச் சிறந்த இலக்கியமாக விளங்கினார்

அடிகளார்க்கு ஆணமக்கள் நால்வரும் பெண்மக்கள் மூவரும் தோன்றினர். ஆண்மகக்கள் பெயர்கள் திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி என்பன. அடிகள் தம் மக்கட்கு இவ்வாறு பெயரிட்டமை கொண்டே அவர் சமயாசாரியர்களிடத்தில் எத்தகைய பற்றுக் கொண்டிருந்தார் என்பதை நாம் ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

## மறுப்புக் கட்டுரைகள்

அந்நாளில் சோமசுந்தர நாயகர் என்பவர் புகழ்பெற்ற சைவசித்தாந்தியாகச் சென்னையிற் சிறந்து விளங்கினார். அவர் சொல்லாற்றலிற் சிறந்தவர். கேட்பவர் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியுமாறு செய்திகளை அழுத்தந் திருத்தமாகக் கூறக்கூடியவர். அவர் நாகையில் இருந்த சைவசித்தாந்தப் பேரவை ஒன்றுக்குச் சொற்பொழிவுசெய்ய வந்தார். பல சொற்பொழிவுகள் செய்தார். மறைமலை அந்தச் சொற்பொழிவுகள் எல்லாவற்றையுங் கருத்துடன் கேட்டார். நாயகரின் தமிழன்பினையும் சமயப்பற்றையுங் கண்டு மகிழ்ச்சிகொண்டார். அவரிடமே சைவசித்தாந்த நூல்களைக் கற்றுணர்வது என்றும் உள்ளத்தில் உறுதி செய்துகொண்டார்.

அப்போது நாகையில் இருந்த அறிஞர் ஒருவர் சோம சுந்தர நாயகரின் கொள்கைகள் சிலவற்றை மறுத்து ஒரு பத்திரிகையில் எழுதினர். மறைமலை, நாயகர் கருத்தையும் கட்டுரையாளர் கருத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தார். நாயகர் கருத்துச் சிறந்ததென்று முடிவு செய்தார். "முருகவேள்" என்னும் புனைபெயருடன் நாயகர் கருத்துக்கள் உயரியவை என்பதைப் பத்திரிகையில் கட்டுரை மூலம் தொடர்ந்து எழுதினர். இக் கட்டுரைத் தொடர்ச்சிகளைச் சென்னையில் இருந்த நாயகர் படித்தார். கட்டுரைகள் யாவும் நேர்மை யான முறையில் வெளிவருதலைப் பாராட்டினர். "அவைகளை எழுதும் 'முருகவேள்' யாவர்?" என்று நாகைச் சைவசித் தாந்த சபையாருக்குக் கடிதம் எழுதிக் கேட்டார் அச்சபை யினர் மறைமலையின் வரலாற்றை எழுதியனுப்பினர்கள். திங்கள் பல சென்றன. நாயகர் நாகைக்கு வந்தார். மறை மலையைக் கண்டு மகிழ்ச்சியுடன் பாராட்டினர். "சென்னையில் இருந்தால் சைவசித்தாந்த வளர்ச்சிக்கு நல்ல பணி புரியலாம்," என்று கூறினர். மறைமலை சென்னைக்கு வருவ தாக ஒப்புக்கொண்டார்.

## சுந்தரம் பிள்ளையோடு தொடர்பு

திருவனந்தபுரம் அரசர் கல்லூரிப் பேராசிரியராக இருந்த சுந்தரம் பிள்ளை "மனோன்மணீயம்" என்னும் நாடக நூலை எழுதி வெளியிட்டார். அந் நூல் நாகை நாராயணசாமிப் பிள்ளைக்கும் வந்தது. மறைமலை அந் நூலைப் படித்தார். அதனைப் பாராட்டிப் பிள்ளையவர்கட்கு எழுதினர். அதுமுதல் இருவருக்குந் தொடர்புண்டாயிற்று. சுந்தரம் பிள்ளை மறைமலையையும், தம் ஆசிரியர் நாராயண சாமிப் பிள்ளையையும் திருவனந்தபுரத்திற்கு அழைத்தார். இருவரும் திருவனந்தபுரஞ் சென்று சுந்தரம் பிள்ளையின் விருந்தினராகச் சிலகாலந் தங்கியிருந்து மீண்டனர்.

மறைமலையின் அறிவாற்றலை நன்குணர்ந்த சுந்தரம் பிள்ளை இவரைத் தகுதியான வேலையில் அமர்த்தவேண்டும் என்று விரும்பினர். ஆங்கிலப் பள்ளியொன்றில் தமிழாசிரிய ராக வேலை பார்ப்பதற்கு ஏற்பாடு செய்தார். அடிகள் அவ்

வேலையை ஏற்றுச் சில திங்கள் பார்த்தார். அந் நகரத்தின் தட்ப வெப்பம் அடிகளாரின் உடல் நலத்திற்கு ஏற்றதாக இல்லை. ஆகவே அவர் அவ் வேலையை விட்டுவிட்டு நாகைக்குத் திரும்பினர். திருவனந்தபுரத்தில் இருந்தது இரண்டு மூன்று திங்களேயாயினும் அங்கு அரிய தமிழ்த் தொண்டுகள் பல ஆற்றினர்.

சென்னையை அடைதல்

அடிகள் முதலிற் சென்னைக்குச் சென்று ஐந்தாறு திங்கள் ஒரு பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். பிறகு, அவ் வேலையை விடடுவிட்டு நாகைக்கு மீணடார். அப்போது சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் பரிதிமாற் கலைஞர் (வி. கோ. சூரியநாராயண சாத்திரியார்) பேராசிரிய ராக இருந்தார். அவர் நல்ல செந்தமிழ் அறிஞர். தமிழ் வரலாறு, ரூபாவதி, கலாவதி முதலிய நூல்களை எழுதியவர். பரிதிமாற் கலைஞருக்குத் துணையாக மற்றுமொரு தமிழாசி ரியர் அக் கல்லூரிக்குத் தேவைப்பட்டார். அப் பதவியை அடையப் பலர் முயன்றனர். கல்லூரித் தலைவர் தக்கவரைத் தேர்ந்தெடுக்குமாறு பரிதிமாற் கலைஞரைக் கேட்டுக்கொண் டார். அவர் அதற்கிணங்கிப் பலரை ஆராய்ந்து அடிக ளாரைத் தேர்ந்தெடுத்தார். அதன்பின் பரிதிமாற் கலைஞ ருக்கும் மறைமலைக்கும் நட்பு மிகுதிப்படடது.

செய்யுள்நூல் செயதல்

அடிகள் சென்னையில் அரண்மனைக்காரத் தெருவில் குடியிருந்தார். அப்போது அடிகளார்க்கு வயிற்றுவலி உண்டாகியது. மருத்துவர் மூலம் நெடுநாள் மருந்து உண்டும் அந்நோய் நீங்காமையால் அடிகள் திருவொற்றியூர் முருகப்பெருமான்மீது "மும்மணிக் கோவை," என்னும் நூல் ஒன்றைப் பாடி அவ் வயிற்றுவலியைப் போக்கிக் கொண்டார்.

மாணவர்கள்

கல்லூரி மாணவர்க்கும் தமிழ் அறிஞர்க்கும் பயன்படு மாறு முல்லைப்பாட்டு ஆராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி

முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார். அடிகளாரிடம் கல்லூரியிற் பயின்ற மாணவர்கள் போக இல்லத்திலும் பல மாணவர்கள் கல்வி கற்றனர். ச. சோமசுந்தர பாரதியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, டி. கே. சிதம்பரநாத முதலியார், சி. என். முத்துரங்க முதலியார், மணி திருநாவுக்கரசு முதலியார், நாகை தண்டபாணிப்பிள்ளை, இளவழகனார் முதலியோர் அடிகளின் மாணவர்களிற் சிறந்தவர்களாவர். இவர் எழுதிய நூல்களில் மாணிக்கவாசகர் வரலாறுங் கால ஆராய்ச்சியும், மக்கள் நூறாண்டு உயிர்வாழ்தல் எப்படி? முதலிய நூல்கள் மிகச் சிறப்புடையன.

இறுதி

மக்கள் வாழவேண்டிய முறைகளை விளக்கி நூல்கள் எழுதியதோடு அவ்வகையே தாமும் நடந்து நின்ற அடிகள் தமது எழுபத்தைந்தாவது அகவையிலே 1950 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 15 ஆம் நாள் இறைவன் திருவடிநீழலை எய்தினார். அடிகளின் பிரிவு தமிழ் உலகத்திற்கு ஈடு செய்தற்கரிய பேரிழப்பாக முடிந்தது. அறிஞர் பலரும் இரங்கற்பாக்கள் பாடித் தமது ஆற்றாமையைப் புலப்படுத்தினர்.

தொண்டுகளும் பண்புகளும்

தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் அறிவிற் சிறந்து விளங்கவேண்டும்; சமய அறிவு பெறவேண்டும் என்னும் நன்னோக்கம் உடையவர் அவர். அதனால் பல்லாவரத்தில் 'பொதுநிலைக் கழகம்' என்னும் ஒரு கழகத்தை நிறுவி அதன் வழியாகத் தமிழ் நூல்களைக் கற்பித்தல், சமயப் பேருரைகள் ஆற்றுதல் முதலிய தொண்டுகளையும் செய்து வந்தார்; பிறரைக்கொண்டு செய்வித்தும் வந்தார்; ஏழை மக்களுக்குத் தம்மால் இயன்ற அளவு உதவிசெய்தார். இப் பேரறிஞருடைய அரிய தொண்டுகளைத் தமிழ்நாடு என்றும் மறவாது போற்றுதல் வேண்டும்.

# உ. மணிமேகலை

[பெருமழைப் புலவர், பொ. வே. சோமசுந்தரனார்]

மணிமேகலை என்பது நமது செந்தமிழ் மொழியின்கண் தலைசிறந்து திகழும் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் இவைகளே ஐம்பெருங் காப்பியங்களாம். இக் காப்பியங்களுள் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கடைச்சங்க காலத்தை அடுத்துத் தோன்றியவையாகும். இக்காலத்தைக் 'காப்பியக் காலம்' என்னலாம் ஐம்பெருங் காப்பியங்களிற் காலத்தால் முற்பட்டன சிலப்பதிகாரமும், மணிமேகலையுமேயாம்.

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் பொருள் வகையால் நோக்கும்பொழுது ஒரே பெருங் காப்பியத்தின் உட்பிரிவுகளே என்பது புலனும். ஆயினும், இருவேறு நல்லிசைப் புலவர்களால் தனித்தனி இயற்றப்பட்டிருத்தலின் இருவேறு காப்பியங்களாகவே நின்று நிலவுகின்றன. சிலப்பதிகாரமும், மணிமேகலையும் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த 'ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி, மாசாத்துவான்' என்னும் வணிகன் மகனாகிய கோவலன் குடும்ப வரலாற்றினையே பொருளாகக்கொண்டு தோன்றியுள்ளன. இவற்றுள் மணிமேகலையை இயற்றியவர் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்னும் நல்லிசைப் புலவராவார். இவர் 'தென்சொற் கடந்து வடநூற்கடற்கும் எல்லை தேர்ந்தவர்.' ஆசிரியர், இளங்கோவுடன் ஆருயிர்த் தோழமை பூண்டவர். திருக்குறளின்பால் பெரும் பற்றுடையவர். புத்தர் பெருமான் மெய்ம் மொழிகளை நன்குணர்ந்து புத்தசமயம் சார்ந்து ஒழுகியவர். கவியரசராலும் புவியரசராலும் ஒருங்கே போற்றப்பெற்ற பெருமையுடையோராவார்.

ஊழ்வினை காரணமாகக் கோவலன் கண்ணகி நல்லாளோடு மதுரைமா நகரடைந்து கண்ணகியின் காற்சிலம்பு விற்கவேண்டி அந்நகரத்து மன்னனாற் கொலையுண்டமையும், பின்னர்க் கண்ணகி மதுரை மாநகரத்தை எரியூட்

டினமையும், அப் பத்தினித் தெய்வத்திற்கு அந்நகர்த் தெய்வமாகிய மதுராபதி கூறிய அரிய செய்திகளும், ஆகிய இந்நிகழ்ச்சிகளை ஆசிரியர் சாத்தனார் தாமே கண்கூடாகக் கண்டும் கேட்டும் உணர்ந்தவர். பின்னர், இவர் சேர நாட்டிற் சென்று இளங்கோவடிகளாருடன் அளவளாவி யிருக்கும்பொழுது அவ்வரலாற்றினை அடிகளார்க்கும் இவரே அறிவுறுத்தினர். இவ் வரலாற்றின்கண் ஒரு காப்பியம் சமைத்தற்கு வேண்டிய அரும் பொருள்கள் காணப்பட்டமையால், இளங்கோவடிகளார் இவ்வரலாற் றினை யாம் ஒரு காப்பியமாகச் சமைக்கின்றோம் என்று இயம்பினர். அடிகளார் கருத்துணர்ந்த சாத்தனார், 'அங்ஙனமே செய்தருள்க!' என்று அப் பணியை அடிக ளார்க்கே விட்டுவிட்டனர்.

சாத்தனார் முன்னரே இவ்வரலாற்றினை வைத்துத் தாமே ஒரு பெருங் காப்பியமியற்ற எண்ணியிருந்தனர். இளங்கோவடிகளார் இவ்வரலாற்றினைக் கேட்டபொழுதே சாத்தனார் கருதியவாறே தாமும் இதனைக் காப்பியமாக்கக் கருதியதும் சாத்தனார் வியந்து அப் பணியை அடிகளே செய்தருள்க! என்று அவர்பால் ஒப்படைத்ததும் இகலிலாத இந் நண்பர்களின் கருத்தொற்றுமையைக் காட்டுகின்றன வன்றோ? மேலும் இந் நிகழ்ச்சிகள் 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' தோன்றுதற்கும் சீத்தலைச் சாத்தனாரே காரணம் எனவும் அறிவுறுத்துகின்றன.

பெருங் காப்பியங்கள் 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் உறுதிப் பொருள் நான்கனையும் தம்முள் எஞ்சாமற் றழுவி நடத்தல் வேண்டும் என்று சான்றோர் கூறுவர். இளங்கோவடிகளார் தமது சிலப்பதிகாரத்தின்கண் இவற்றுள் அறம் பொருள் இன்பம் என்னும் அன்பொடு புணர்ந்த மூன்றுறுதிப் பொருள்களையும் திறம்பட விளக்கிச் சாத்தனார் தலைமையின்கீழ் நின்று அரங்கேற்றுதலும் செய் தருளினர். அப்பெருங் காப்பியத்தை அடிகளார் இயற்றி முடிக்கும்பொழுது "எஞ்சிய வீடு என்னும் அருளொடு புணர்ந்த உறுதிப்பொருளை விளக்குதல் இனித் தண்டமிழா சான் சாத்தற்கே கடன்," என்று குறிப்பாலுணர்த்துவார்

போன்று "மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதி காரம் முற்றும்" என இனிதின் முடித்தருளினர்.

காவிரிப்பூம் பட்டினத்திருந்த மாதவி நல்லாள் மதுரையிற் கோவலன் கொலையுண்ட செய்தி கேட்டவுடன் இடியேறுகேட்ட நாகமென நடுங்கினள். தன் துன்பத்திற் கோர் எல்லை காணுதவளாய் அறவண அடிகள் என்னும் பௌத்த துறவியைப் பணிந்து தன் இன்னல் நிலையை இயம்பி நின்ருள். அவர் அருள்கூர்ந்து அவட்கு ஆறுத லளித்தனர். அறவணரின் அருளறங்கேட்ட மாதவி இப் பொல்லாத வுலகினைத் துரும்பென நீத்துப் பிக்குணிக் கோலம் பூண்டாள். மேலும் தன் மகளாகிய மணிமேகலையை, "மாபெரும் பத்தினி (கண்ணகி) மகள் மணிமேகலை" என ஆர்வத் துடன் சுட்டிக் கூறி அவட்கும் துறவுக்கோலம் பூட்டி விடுத் தனள். பேதைப் பருவம் கடந்து பெதும்பைப் பருவம் எய்தி அழகின் தெய்வமே இவள் என்னும்படி விளங்கிய மணிமேகலையின் துறவுச்செய்தி கேட்டு, அந்த நகரமே கலங்கியது.

தாய் பூட்டிவிட்ட துறவுக்கோலத்தை மேற்கொண் டொழுகிய மணிமேகலைக்கு நேர்ந்த இடையூறுகள் பற்பல வாம். அறிவும் ஆற்றலும் ஒருங்கே அமைந்த அம் மணி மேகலை, அவ் விடையூற்றை யெல்லாம் கண்டு அஞ்சாது நின்று தான் தாங்கிய அருளறத்தையே கடைப்பிடியாகக் கொண்டு புத்தர் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய பெரு நெறியே பிடித்து ஒழுகி நோற்றுயர்வடைந்தனள். இவ் வரலாறு கோவலன் குடும்ப வரலாற்றின்கண் எஞ்சிய வரலாருகும். இவ் வரலாற்றையே தண்டமிழ்ச் சாத்தனுர் தமது பெருங் காப்பியத்திற்கு உள்ளுறை பொருளாக அமைத்துக்கொண்டனர். ஆசிரியர் இளங்கோவடிகளாரும் கண்டு கண்டு வியக்கும்படி இம் மணிமேகலையை நன்கு சமைத்தனர். அடிகளார் தலைமையின்கீழ் நின்று அரங் கேற்றுதலும் செய்தனர்.

காப்பியம் புனையும் வித்தகத் தொழிலிலே சாத்தனுர் இளங்கோவடிகளாரையும் சிற்சில இடங்களிலே விஞ்சி

விடுகின்றனர் என்பது எமது கருத்தாகும். 'செவ்விய மதுரஞ் சேர்ந்த சீரிய கூரிய தீஞ்சொல்' தேர்ந்து செய்யுள் புனைவதில் இவர் பெரிதும் ஆற்றல் வாய்ந்தவர். இவரை இளங்கோவடிகளார் "தண்டமிழ் ஆசான் சாத்தன்" என்றும், "தண்டமிழ்ச் சாத்தன்" என்றும், "நன்னூற் புலவன் சாத்தன்" என்றும் பெருமிதம்படப் பாராட்டுதல் புனைந்துரையன்று. சாத்தனார் தாம் உலகுக்கு அறிவுறுத்தக் கருதிய புத்தர் அறங்களையும் பிற அறங்களையும் தமது காப்பியத்தைப் பயில்வோர் நெஞ்சத்தில் ஆழப் பதிக்கும் பொருட்டுத் தம் கூற்றாகக் கூறாமல் ஆங்காங்குப் பற்பல கிளைக்கதைகளைப் படைத்துக்கொண்டு அக்கதை யுறுப்பினர் (பாத்திரங்கள்) கூற்றாகவே கூறும் வித்தகம் பெரிதும் போற்றற்பாலதாம். இக் கதைகளின் வாயிலாகவே இப் புலவர் பெருமான் புத்தருடைய மெய்க்காட்சிகளை மிகவும் திறம்பட விளக்கியிருக்கின்றனர். இப் புலவர் பெருமான் சிற்சில செவ்விகளிற் கந்திற்பாவையையும் ஓவியத்தையுங் கூடப் பேசச் செய்து சிறந்த கருத்துக்களைப் புலப்படுத்துவது இனிய காவிய நுணுக்கமாகும்.

இன்னும் சிலப்பதிகாரத்திற்கு உள்ளுறையாக அமைந்த "அரசியல் ஒழுக்கத்திற் சிறிது பிழைப்பினும் அவ்வரசரை அறக்கடவுள் தானே கூற்றமாய்க்கொல்லும்" என்பதும், "கற்புடை மகளை மக்களேயன்றித் தேவரும் முனிவரும் ஏத்தித் தொழுவர்" என்பதும், முன்செய்த இருவினையும் செய்த முறையே செய்தோனை நாடிவந்து உருக்கொண்டு நின்று நுகர்விக்கும் என்பதுமாகிய இந்த மூன்று மெய்க்காட்சிகளையும் இவ்வாசிரியர் இம் மணிமேகலையினும் பற்பல கதைகளின் வாயிலாய் வலியுறுத்துதலைக் காணலாம்.

இனி இப் பெருங்காப்பியம் பிறத்தற்கு நிலைக்களனாக அமைந்த புத்தசமயம் இத்தமிழ் நிலத்திலே வேரூன்றும் மதுகையிலதாய் அழிந்தொழிந்த பின்னரும் இத்தமிழ் நாட்டிற் றோன்றிய சான்றோர் அனைவரும் இக் காப்பியத்தைப் பொன்னேபோற் போற்றிப் பயின்று வருவதே இம்

மணிமேகலையின் மாண்பிற்கு ஒரு நற்சான்ருகும். 'திற முடைய புலமை எனிற் பிறநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' என்று பாரதியார் கூறியது போன்று இம் மணிமேகலை தன்பாலமைந்த இலக்கியவின்பச் சிறப்பாலும் புலமை நுணுக்கமுடைமையாலுமே பிற சமயச் சான்ருேரானும் போற்றப்பட்டு வருகின்றது. தமிழ்மொழி வழங்கும் காலமெல்லாம் இத் தண்டமிழ்க் காப்பியமும் நின்று நிலவி அணிசெய்யும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

இனி இப் பெருங்காப்பியத்தின்கண் இடந்தோறும் மாணிக்கக் கோவைபோன்ற அறிவுரை செறிந்த பகுதிகள் பற்பல இருக்கின்றன. இந்நூலை மாணவர்கள் நன்கு பன்முறையும் பயின்று அப் பகுதிகளை நன்கு நெஞ்சத்தே இருத்திக்கொள்ளல் வேண்டும் என்பது எமது அறிவுரையாகும். எடுத்துக்காட்டாக ஒரோவொரு பகுதியை மட்டும் கீழே தருகின்ருேம்.

*"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்*
*பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்*
*பற்றின் வருவது முன்னது பின்னது*
*அற்ருேர் உறுவது அறிக."*

என்பதாம். வாழ்க மணிமேகலை!

## ௯. கடிதம் : தங்கைக்கு

[டாக்டர், மு. வரதராசனார்]

அன்புள்ள தங்கை,

தம்பிக்கு எழுதுவதுபோல் உனக்கு நீண்ட கடிதங்கள் எழுத நான் எண்ணியதில்லை. ஆனால் அத்தகைய கடிதங்களை எழுதும்படியாக நீயே செய்துவிட்டாய்.

“பொதுவான அறிவுரைகள் கூறுவதில் பயனில்லை. உங்கள் வாழ்க்கையிலிருந்தும் உங்கள் நண்பர்களின் வாழ்க்கையிலிருந்தும் நீங்கள் பெற்ற அனுபவங்களைத் தெரிவியுங்கள்” என்று எழுதியிருக்கிறாய். வாழ்க்கையில் வரக்கூடிய சிக்கல்களைப் பற்றியும் அறிந்துகொள்ள விரும்புகிறாய். இவ்வாறு நீ எனக்கு எழுதிய கடிதம் உன்னுடைய முற்போக்கைத் தெரிவிக்கிறது; நீ கண்மூடியாய் நில்லாமல் கண் திறந்து வாழ விரும்புவதைக் காட்டுகிறது; செம்மறியாடாகச் செல்லாமல் சிந்தனைப் பிறவியாக வளர்வதைப் புலப்படுத்துகிறது. கடிதம் எனக்குப் பெருமகிழ்ச்சி அளித்துள்ளது. உங்கள் இல்வாழ்க்கையைப் பற்றி அம்மா என்னிடம் சொன்னபோது உண்டான மகிழ்ச்சியைவிட இப்போது பெரியமகிழ்ச்சி அடைகின்றேன்.

பழங்காலப் பெண்களைப்போல் அடங்கி நடப்பது நல்லதா, இக்காலத்துப் பெண்களைப்போல் உரிமையுணர்ச்சியோடு வாழ்வது நல்லதா என்று கேட்டிருக்கிறாய். எனக்கு விடைசொல்லத் தெரியும். ஆனால் எப்படி எழுதுவது, என்ன எழுதுவது என்று எண்ணும்போது தயங்குகிறேன். எவ்வளவோ எழுதவேண்டும் என்று விரிவான பல எண்ணங்களும் எழுகின்றன.

சிறுவர்களுக்கு, வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று தனித்தனியே பிரித்துப் பார்த்தே அறிவு வளர்கின்றது. பசி உணவு இந்த இரண்டும் ஒன்றற்கொன்று நேர்மாறானவை என்று எண்ணிவிடுகிறார்கள். அதனால், பசி எடுப்பது நல்லதா, வயிறாரச் சாப்பிடுவது நல்லதா என்று

உடனே கேட்டுவிடுகிருர்கள். உன் கேள்வியும் ஏறக்குறைய அதேபோல்தான் உள்ளது.

விடை சொல்லட்டுமா? இரண்டும் நல்லவைகளே. அடங்கியும் நடக்கவேண்டும், உரிமையோடும் வாழ வேண்டும்.

இதைப் படித்ததும் நீ என்னைப்பற்றி என்னவோ எண்ணுவாய். ஆனல் உண்மை இதுதான். பசி எடுக்கின்ற வயிறு உள்ளவர்கள்தான், வயிருரச்சாப்பிட முடியும். அடங்கி நடக்கின்றவர்கள்தான் உரிமையின் நன்மையை அனுபவிக்க முடியும்.

பசிக்கு மாருனது பசி எடுக்காத மந்த நிலை. வயிருர உண்பதற்கு மாருனது செரிக்கும் ஆற்றல் இல்லாத நிலை. ஆனல் பசியும் உணவும் நேர்மாருனவை அல்ல. பசித்தால் தான் நன்ருக உண்ணமுடியும்.

அடங்கி நடக்கலாம். ஆனல் பிறருடைய அடக்கு முறைக்கு அஞ்சி இரையாகக் கூடாது; நாமே அன்புள்ளவர்களின் அன்புக்கு அடங்கி நடக்கலாம். உரிமை வாழ்க்கை நடத்தலாம். ஆனல் மனம்போன போக்காய் வாழக் கூடாது; கடமையை ஒழுங்காய்ச் செய்து உரிமையைக் காத்துக்கொள்ளலாம்.

இன்று பலர் தெளிவு இல்லாத கல்வியால் தவருக எண்ணுகிருர்கள். தான்தோன்றித்தனத்தை உரிமை என்று கருதிக் கெடுகிருர்கள். விட்டுக்கொடுத்து இணங்கி நடப்பதை அடிமைத்தனம் என்று 'இகழ்கிருர்கள்.

என் நெடுங்கால அனுபவத்தின் பயனுக நான் தெரிந்துகொண்ட உண்மையை எழுதுகின்றேன். கடமைகளை ஒழுங்காகச் செய்கின்றவர்கள் மட்டுமே உரிமையை அனுபவிக்க முடியும். மற்றவர்கள் பிறர் உரிமையில் தலையிட்டுக் கெடுத்து இறுதியில் தம் உரிமையையும் இழந்து விடுவார்கள். ஆகையால் உரிமையை முதலில் வைத்து நடக்கும் நெறி இடர்ப்பாடானது என்றே சொல்வேன். அன்பை முதலில் வைத்து, உரிமையை இரண்டாவதாக வைத்து நடப்பது எளிய நெறியாகும்.

இது இந்த நாட்டு மக்கள் மட்டும் கண்ட நெறி என்று எண்ணாதே. மேற்கு நாட்டு அறிஞர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்துப்பார். அவர்கள் எழுதியுள்ள கதைகளையும் நாடகங்களையும் ஆராய்ந்து பார். உரிமைக்குப் பெயர் பெற்ற அந்த நாடுகளிலும் நான் சொல்லும் உண்மை விளங்குவதை உணரலாம்.

இன்னொரு தவறு உள்ளது. இப்படிப் பெண்களுக்குச் சொல்லி ஏமாற்றி ஆண்கள் மட்டும் உரிமையோடு வாழப் பார்க்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அது உண்மை அல்ல. நல்ல குடும்பங்களாக வாழ்கின்றவர்களிடையே நான் பார்த்துவருகிறேன். மனைவி கணவனுக்கு விட்டுக் கொடுத்து வாழ்வது போலவே, கணவனும் பலவகையில் மனைவிக்கு விட்டுக்கொடுத்து வாழ்க்கை [illegible] [illegible] தொடக்கத்தில் ஆணின் அடக்குமுறை காணப்படும் குடும்பங்களிலும், வரவர அது குறைந்து அன்புவாழ்க்கையே வளர்கின்றது. கணவனுக்கு வயது ஆக ஆக அவன் மனைவிக்கு விட்டுக்கொடுப்பதே மிகுதியாகக் காண்கின்றேன். நெடுங்கால அனுபவத்திற்குப் பிறகு அவன் கற்றுக்கொண்ட பாடம் இது என்று தோன்றுகிறது.

அன்புக்காக விட்டுக்கொடுத்து இணங்கிநட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே என்று நான் சொல்வேனால், அது உனக்கும் உன்னைப் போன்ற பெண்களுக்கும் மட்டும் சொல்லும் அறிவுரை என்று எண்ணாதே. என்னுடன் பழகும் நண்பர்களான ஆண்கள் பலர்க்கு இதையே நான் சொல்லியிருக்கிறேன். 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்னும் நாலடியாரின் பொன்மொழி இல்வாழ்க்கையின் மந்திரமாக விளங்க வேண்டும்; ஒருவேளை கணவனும் இன்னொருவேளை மனைவியுமாக விட்டுக் கொடுத்தால்தான் வாழ்க்கை எளிதாக நடக்கும்.

என்னுடன் படித்த—கனகா பக்கத்துத் தெரு வழக்கறிஞர் மகள். கனகாவைப்பற்றி உனக்கு நினைவு இருக்கும் என நம்புகின்றேன். எங்களோடு படித்துவந்த அந்தக்

காலத்திலேயே அவள் உரிமை மிகுந்த பெண்ணாக இருந் தாள். குடும்பத்தாரும் அப்படியே வளர்த்து வந்தார்கள். அவளுடைய வாழ்க்கை என்ன ஆயிற்று தெரியுமா? அவள் தாய்வீட்டில் வாழ்கிறாள்; கணவன் தனியே மனம்போன போக்காய்க் காலம் கழிக்கிறான். கனகா இனிமேல் பி. டி. படித்து ஆசிரியர் தொழிலுக்குப் போக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவளுடைய வாழ்க்கை இப்படி ஆனதற்கு என்ன காரணம் சொல்கிறாய்? அவளுக்கு அழகு, அறிவு, முற்போக்கு, திறமை எல்லாம் இருக்கின்றன; விட்டுக்கொடுத்தல் என்ற ஒன்றுமட்டும் இல்லை. அவ ளுடைய கணவனைப்பற்றி எனக்கு நேரே ஒன்றும் தெரி யாது. அந்த ஊரான் ஒருவனோடு நெருங்கிப் பழகிக் கேட்டுத் தெரிந்துகொண்டேன். அவனும் அறிவு, திறமை எல்லாம் உடையவனாம். ஆளைப் பார்த்திருக்கிறேன். அழகான தோற்றமும் உண்டு. இவ்வாறு இருந்தும் இரு வரும் வாழத் தெரியாதவர்கள் ஆகிவிட்டார்கள். இனி என்ன செய்வது? இனிமேல் இவர்களின் மனத்தில் அன்பும் காதலும் வளர்வது அருமை. மனம் அப்படிப் பட்டது. உரிமைவெறி மிகுந்த பெண்ணோ ஆணோ, நாளடைவில் பழகிப் பழகித் தம் உரிமைவெறியைக் குறைத் துக்கொள்கிறார்கள். தீயும் நீரும் உறவுகொண்டு ஒன்றை ஒன்று குறைப்பதுபோல் ஆகின்றது இவர்களின் வாழ்க்கை. ஆனால் கனகாவும் கனகாவின் கணவனும் இரண்டு ஆண்டு கள் வாழ்ந்த வாழ்க்கை, தீயும் தீயும் உறவுகொண்டு பெருந்தீ ஆகிய கதை என்று கருதுகின்றேன். இவர்கள் திருமண மான தொடக்கத்தில் மிகவும் அன்பாக வாழ்க்கையைத் தொடங்கியிருப்பார்கள். இதில் எள்ளளவும் ஐயுறவேண் டாம். ஒரே வீட்டில் பலமாதம் கூடி வாழவேண்டி ஏற்பட்ட பிறகுதான் வெறுப்பு வளர்ந்திருக்கும் அதற்குப் பிறகுதான் உரிமைப் போராட்டம் தலையெடுத்து வம்பு செய்திருக்கும்.

'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்று ஒரு பழ மொழியை முதல் முதலில் அமைத்தார்களே, அவர்கள் வாயில் சர்க்கரை இடவேண்டும். எவ்வளவு பெரிய உண் மையை எவ்வளவு எளிதாகச் சொல்லிவிட்டார்கள்! இதில்

பாலின்மேல் வைத்து விளக்கிய உண்மையையே, பழைய சங்கப்பாட்டு ஒன்றில் தேனின் மேல் வைத்து, "ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்" என்று சொல்லியிருக்கிருர்கள். இந்தப் பாட்டைப் பாடிய புலவர், குடும்ப வாழ்க்கையில் வரும் சிக்கலைக் குறித்தே பாடியிருக்கிருர். கணவன் வேருெருத்தியை நாடுவதை அறிந்து மனைவி மனம் நொந்து வருந்தும் நிலையில், அவன் வீட்டிற்குத் திரும்பி வரும் வேளையில் மனைவிக்கு உயிர்த்தோழியாக உள்ள ஒருத்தி அவனுக்கு அறிவுரை கூறுவதாகப் பாடியுள்ளார். "அய்யா! காதல்வாழ்வின் தொடக்கத்தில் எவ்வளவு அன்போடு உனக்கு உதவி செய்தோம். அப்படிப்பட்ட அன்பை மறந்துவிட்டு, நீ இப்போது இவ்வாறு நடக்கிருய். விடாமல் பருகுவோரின் வாயில் தேனும் புளிக்கும் என்பது பொருத்தமாக உள்ளது. அப்படி வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு நீ எம்மைவிட்டு நீங்குவதாஞல், தாய்வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடு. பிறகு உன் விருப்பம்போல் நட" என்று தோழி அவனிடம் சொல்கின்ருள். பலமுறை எண்ணிப்பார்த்து, மனத்தின் இயல்பை உணர்வதற்குத் துணைசெய்யும் பாட்டு இது.

இதைப்பற்றி எழுதும்போது, எனக்கு மற்ருெரு நல்ல நினைவும் வருகின்றது. தமிழ் இலக்கியத்தில் தோழி என்று வரும் இவளுடைய திறமை போற்றத்தக்கதாக உள்ளது. காதலர் இருவர் நெருங்கி உறவு கொள்வதற்குக் காரணமாக விளங்கும் இவள், அவர்களை எத்தனை முறை எத்தனை காரணங்களால் பிரிக்க முயல்கிருள், தெரியுமா? அவர்களைப் பிரித்து அடியோடு ஒதுக்கிவிட வேண்டும் என்பது அவள் நோக்கமா? இல்லை. தடை இல்லாமல் இடர் இல்லாமல் கூடிப் பழகிஞல் வாழ்க்கை சுவைக்காமல் போய்விடுமே என்று அஞ்சி, அடிக்கடி ஒருவரை ஒருவர் காணுதபடி இடையிடையே பிரித்துவைக்கின்ருள். அவ்வாறு செய்வதால், காணவேண்டும் என்று ஏங்கும்படியான நிலைமையை உண்டாக்கி, அந்த ஏக்கத்தால் காதல் வளரும்படியாகச் செய்கின்ருள். அவள் மனத்தின் தன்மையை நன்ருக உணர்ந்தவள் என்று கூறவேண்டும்.

நம் நாட்டில் திருமணமான தொடக்கத்தில் மனைவி கணவனோடு இருக்கக்கூடாது என்று பிரிக்கும் வழக்கம் ஒன்று இருந்துவருகிறது. அதுவும் இவ்வகையான நன்மைக்கே என்று எண்ணுகிறேன். அறிஞர் எச். ஜி. வெல்ஸ் வாழ்க்கையில் ஒரு குறிப்பு – அவரே எழுதிய குறிப்பு ஒன்று என் நினைவுக்கு வருகிறது. அவருடைய இரண்டாம் மனைவி ஒருமுறை வாழ்க்கையில் மிகச் சலித்தபோது, கணவருக்குச் சொல்லி அனுமதி பெற்றுத் தனியே பிரிந்து சில வாரங்கள் வாழ்ந்தாராம். அப்போது சென்று தங்கியிருந்த இடத்தையும் கணவருக்குத் தெரிவிக்கவில்லையாம்.

இல்வாழ்க்கைக்கு மட்டும் இந்த அறிவுரை என்று எண்ணவேண்டியதில்லை. நீ அங்கே யாரேனும் ஒரு பெண்ணோடு நட்புக்கொண்டு நெருங்கிப் பழகும்போதும் நட்பு நீடிக்கவேண்டுமானால் இதுதான் வழி. நான் இந்த விதியைப் போற்றி நடப்பதால்தான் நண்பர் அருளப்பரோடு இளமை முதல் இன்றுவரையில் தொடர்ந்து நண்பனாக இருந்துவர முடிகின்றது; இனியும் அவ்வாறே இருந்துவர முடியும்.

உனக்கு ஒரு பழக்கம் இருந்தால் நல்லது. அப்போது இந்த உண்மைகள் தெளிவாக விளங்கும். அது என்ன பழக்கம் தெரியுமா? மூன்றும் வீட்டுக் குடும்பச் சண்டையைப் பற்று இல்லாமல், உணர்ச்சி இல்லாமல் அமைதியாக நீ பார்க்கமுடியும் அல்லவா? அதுபோலவே, உன் மனத்தின் போக்கையும் நீ வேடிக்கை பார்ப்பதுபோல் பார்த்துப் பழகவேண்டும். மனம் எப்படி வெறிகொண்டு எழுகிறது, எப்படி யாரைத் தாக்குகிறது, பிறகு எப்படி அலைகிறது, எப்படி அமைதி அடைகிறது என்பவற்றை அமைதியாக எண்ணிப்பார். எடுத்துக்காட்டாக ஒன்று சொல்வேன். கோபம் வருகிறது; பிறகு தணிகிறது. கோபத்தில் நண்பனைக் கண்டபடி பேசுகிறேன். கோபம் தணிந்த பிறகு, நண்பனை அவ்வாறு கடிந்தது தவறு என்று ஓர் எண்ணம் மெல்லத் தோன்றுகிறது. நண்பனிடம் சென்று மன்னிப்புக் கோரலாமா என்று தோன்றுகிறது; ஆனால் உடனே மற்றோர் எண்ணம் அதைத் தடுத்துவிடுகிறது. "நாம்

என்ன செய்துவிட்டோம்? அவன் இப்படிக் கேட்டதால் தானே நான் கோபித்துக்கொண்டேன்? இதற்காக மன்னிப்புக் கோரவேண்டுமா? மானம் இல்லையா? கூடாது" என்று அந்த எண்ணம் தடுக்கிறது. ஒரு மனம் அன்போடு பணிந்துபோக முனைகிறது; மற்ரெரு மனம் ஆணவத்தோடு இணங்காமல் நிற்கிறது.

இப்படிப்பட்ட நெருக்கடியில் நாம் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? அன்பு மனத்தை ஆதரிக்க வேண்டும்; ஆணவ மனத்தைக் கைவிட வேண்டும்.

எந்த வாழ்க்கையிலும் சிறு சிறு பூசல் வரலாம்; போகலாம். அவைகளுக்கு நிலையான இடம் தரக்கூடாது. சிறு பூசல் காரணமாகக் கணவனும் மனைவியும் பேசாமல் சில மணிநேரம் இருக்க நேரலாம். ஆனல் அடுத்தபடி அன்போடு பேசுவதற்கு வாய்ப்பை எதிர்பார்த்திருக்க வேண்டும். வலியச் சென்று பேசுவதற்கு நல்ல மனம் தூண்ட வேண்டும். அவ்வாறு வலியப் பேசி விட்டுக்கொடுத்தவர் தோற்றுவிட்டவர் அல்ல; அவர்தான் அன்பு வாழ்க்கையில் வெற்றிபெற்றவர் என்கிருர் திருவள்ளுவர். "ஊடலில் தோற்றவர் வென்ருர்" என்னும் அவருடைய கருத்து எவ்வளவு உயர்ந்த பண்பாட்டின் அப்படையாகப் பிறந்திருக்கிறது! அத்தகைய பண்பாடு இல்லாதபோது அறிவு எவ்வளவு கூர்மையாக இருந்தபோதிலும் என்ன பயன்? பண்பாடு இல்லாத அறிவு நமக்கு உதவாது; நம்மைக் கெடுக்கவும் கெடுக்கும். அது எதற்கும் காரணம் சொல்லும்; சிறிய குற்றத்தைப் பெரிய குறையாக்கிக் காட்டும்; பெரிய குணத்தையும் சிறிதாக்கி மறக்கச் செய்யும். பண்பாடு இல்லாதபோது அத்தகைய அறிவால் பயன் என்ன? அது நம்பத்தகாதது.

மற்றவை பிறகு எழுதுவேன். நீயும் உன் கருத்துக்களைத் தயங்காமல் எழுது. நல்ல முயற்சிக்குத் தயக்கம் ஏன்?

உன் அண்ணன்,
வளவன்.

# ௬. ராவ்சாகிப் ஆபிரகாம் பண்டிதர்

[கழகப் புலவர், திரு. ப. இராமநாத பிள்ளை]

ஒரு சீரிய நாட்டின் செழிப்பும், நன்னலமும், நாகரிகப் பண்பாடும், நன்கு மதிக்கற்பாடும் அந் நாட்டுக்குரிய ஒப்புயர் வில்லா மொழிவளத்தாலாகும். அம் மொழியும் அதனை உயிரினும் சிறப்பாக ஓவாது ஓம்பிவரும் பொய்யா நாவின் மேலோராகிய புலவர் பெருமக்களானும், சாலச்சிறந்த கலைத்துறை வல்லாரானும் வளம்பெற்றுச் சிறந்து வாழும். ஒரு நாடு உண்மை உழைப்பாளர், உணர்வாளர், உடைமை யாளர் ஆகிய முப்பாலார் தம் ஒப்பரு முயற்சியால் எப்போதும் சிறந்தோங்குமென்பது யாண்டும் மாறா மெய்ம்மையாகும்.

இசைச் சீர்மையினைப் பற்றி மெய்ப்பொருட் கட லெனும் படி ஏறத்தாழ முக்கால் நூற்றாண்டுக்குமுன் அரிய பெரு நூல் ஒன்று யாத்து வெளியிடப்பட்டுள்ளது. அதனை யாத்துத் தந்தருளிய அன்பறிவு சான்ற விழுமியாரின் வரலாற்றைத் தெரிந்தின்புற வேண்டுவது மாணவர்களின் பெருங்கடனாகும். அம்மட்டு மன்று; அந்த வழியின் ஒழுகி முன்னேறிப் பீடுடன் வாழவேண்டியதும் அவர்தம் கட னாகும். அதன் பொருட்டு அப் பெருந்தகையாரின் வரலாற் றினை ஈண்டுத் தருகின்றாம். மேலும் அச் சான்றோர் சித்த மருத்துவச் செல்வராகவுந் திகழ்ந்தனர்.

சான்றோர் மல்கிய கலைநலம் விரிந்த சாம்பூர் வடகரை என்னும் வளஞ்சார் சிற்றூரில் 2-8-1859 ஆம் ஆண்டில் நம் ஆபிரகாம் பண்டிதரவர்கள் திருவருளால் தோன்றினர். இவரைத் தவம்புரிந்து பெற்ற தாய் தந்தையர் முறையே அன்னம்மாள், முத்துசுவாமி என்னும் நல்லறச் சீலர்க ளாவர். இவர்தம் முன்னோரான சுப்பிரமணிய நாடார் என்பவர், திருநெல்வேலி மாவட்டத்தின் கீழ்ப்பாகத்தில் உள்ள நாசரத் என்னும் கலைநவில் நல்லூரைச் சார்ந்த வாழையடி எனப் பெயரிய சிற்றூரின்கண் சீர்சால் குடும்பத்

தில் பிறந்தனர். இவர் திருக்குற்ருலத்துக்கு அண்மையி லுள்ள மேற்கூறிய சாம்பூர் வடகரையில் குடியேறிப் பதின் மூன்று மைந்தர்களைப் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்து கொண்டு வந்தனர். அவர்தம் நல் வாழ்வினுக்குரிய குறையா நிறைவாம் உடைமையெல்லாம் வற்ருவூற்றமை ஒரு கிணறும், அதனையடுத்த வளஞ்சார் சிறு தோட்டமுமே யாம். இந்நிறைவாழ்வினுக்கிடையே நீங்காத் துன்பமும், ஈடு செய்தற்கியலா இழப்பும் நேர்ந்தன.

அவை கக்கற் கழிச்சலாகிய (காலரா) நோயால் நேர்ந்தன. அக் கொடு நோயினுல் பதினொரு மைந்தர்களை இழந்தனர். அதனுல் உள்ளம் உடைந்து ஆற்றும் புகலிட மின்றிப் பெரிதும் நைந்தனர். நைந்து புகலிடம் நாடி ஆறுதல் பெற விழைந்து குழைந்த மனத்தினராய்க் கிறித்துவ நெறியைத் தழுவினர். எஞ்சிய மக்களில் ஒருவர் தாம் நம் ஆபிரகாம் பண்டிதரின் தந்தையாராகிய முத்து சுவாமி நாடார் என்பவர்.

இவர் பங்களாச் சுரண்டை என்னும் ஊரில் ஆங்கிலப் பாதிரியாரிடம் தோட்டக்காரராகத் திறம்படத் தொண் டாற்றி வந்தனர். அவர்தம் அருமை மனைவியார் அன்னம் மாள் கிறித்துவ மறையினைப் போதிக்கும் நற்பணி புரிந்து வந்தனர். இவர்தம் அருமை மகவாக **2–8–1859**இல் பிறந்த நம் ஆபிரகாம் 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பது போல் தம் பசுங்குழவிப் பருவத்திலேயே சீரிய பொலிவும் கூரிய மதித் தோற்றமும் உடையவராகத் திகழ்ந்தனர். இளமைப் பருவத்தில் தொடக்கக் கல்வியினை நன்கு பயின் றனர். சட்டாம்பிள்ளையாகவும் திகழ்ந்தனர்.

தம்முடைய பன்னிரண்டாம் அகவையில் பள்ளி ஆசிரி யராகப் பயனுற பணியாற்றத் தொடங்கினர். அதனை நயனுற ஆற்றினர் எனினும் ஆசிரியப் பயிற்சி பெறப் பெரு விருப்பங் கொண்டனர். அக்காலத்து ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி அண்மையில் இன்மையால் நீண்ட தொலைவுக்கு வரவேண்டியதாயிற்று. அங்ஙனம் வருதலினும் பொருள் வாய்ப்பின்மையால் கால்நடையாக நடந்து வரவும் நேர்ந்

தது. அங்ஙனம் நேர்ந்ததும் ஒன்றிரண்டு கற்களா? அன்றிப் பத்து இருபது கற்களா? அன்று; அன்று. ஒரு நூற்றைம்பது கற்களாகும். இத்துணை நெடுவழியையும் கால்நடையாகத் தனித்து நடந்துவரத் துணிந்தனர் எனின், அவர்தம் கல்வி மாட்டுள்ள கரைகடந்த காதலினை என்னென்று வியப்பது! அங்ஙனம் பெரிது முயன்று அரிதின் நடந்து திண்டுக்கல்லினை அடைந்தனர். ஆங்குள்ள 'நார்மல் பள்ளியில்' 1874இல் சேர்ந்து பயின்று வந்தனர். பயிலுங் காலத்தே 'உயர்தரத் தொடக்கப்பள்ளித் தேர்வில்' கலந்து தேர்வு எழுதிச் சிறப்பாக வெற்றி பெற்றனர்.

பின்னர் அப்பயிற்சிப் பள்ளியிலேயே ஓர் ஆசிரியராக அமர்ந்து அரும் பணியாற்றினர். தம்முடைய உலையா உழைப்பினாலும், ஓங்கிய கலைத்திறமையாலும் அப்பள்ளியினுக்கு அளப்பரும் புகழும், வளப்பமிகு பெயரும் வாய்க்குமாறு செய்தனர். இரவு நேரங்களில் ஆங்கு வழிநடையாகச் செல்லும் தூய துறவிகளையடுத்து அவர் உளங்குளிர்ந்துவக்குமாறு தொண்டுபல புரிந்து அகத்தவமாகிய யோகம், மிக நுணுக்கமாகிய மருத்துவம் முதலியவற்றில் அறிதற்கரிய நுட்பங்களைக் கேட்டுணர்ந்து தெளிவுற்று வந்தனர். இஃதன்றோ சிறக்குந் திறலினர் மறவாது சீர்பெறச் செய்யும் அருஞ்செயலாகும்.

மாந்தர்க்குள்ள அறியாமைப் பிணியை அற அகற்றும் நல்லாசானாகத் திகழ்ந்த நம் ஆபிரகாம், அவர்தம் உடற் பிணியை அகற்றி உறுநலம் விளைக்கும் ஒள்ளிய மருத்துவராகவும் திகழ்ந்தனர். இதனைக் கற்பார் ஒரே நேரத்து இவர்போல் பல துறையில் விழைந்துழைத்து வெற்றி பெற்றுத் திகழ முயலுதல் வேண்டுமென்பதை உளங்கொள்ளுதல் சாலவும் நன்றாகும். நம் ஆபிரகாம் அவர்கள் உயர்வுறு மருந்துகள் உள்ளிட்டு எல்லா மருந்துகளையும் தாமே ஆக்கி அளித்துவந்தனர். இக் காரணத்தால் பெருமக்கள் இவர்பால் பேரன்பும், பெருமதிப்பும், கீழ்ப்படிதலும் கொண்டு சிறந்த மருத்துவர் என அழைத்து வருவாராயினர்.

அந்நாளில் திண்டுக்கல்லை அடுத்துள்ள சுருளி மலைக்குச் சென்றனர். சென்று முற்றவப் பேற்றால் ஆங்குள்ள அரும்புகழ் பெற்ற சித்தராங் 'கருணனந்தரை'க் கண்டு கும்பிடும் பேறு பெற்றனர். அவர்தம் திருவருளால் நீக்கற்கரிய கொடு நோய்களையும் நீக்கவல்ல 'சஞ்சீவி மருந்துகள்' (உயிர்ப்பிக்கும் ஒண்மருந்துகள்) செய்யும் சிறந்த முறையினை நன்கு பயின்றனர். பயின்றதும் அவருடனிருக்கவே விழைந்தனர்.

அவர்தம் திருவாணையினைத் தலைமேற்கொண்டு பிரியா விடையொடும் வந்து 1882இல் 'ஞானவடிவு பொன்னம்மை' என்னும் நல்லியல்புகளனைத்தும் ஒருங்கமைந்த நங்கையினை நன்மணம் புரிந்துகொண்டனர்.

தஞ்சையிலே 'நேப்பியர் பெண்கள் பள்ளியில்' நம் ஆபிரகாம் அவர்களும் அவர்தம் வாழ்க்கை அருந்துணையாம் மனைவியாரும் ஆசிரியப் பணியை மேற்கொண்டனர். இன்னிசை வாணர்களின் சூழ்நிலையால் அறிதற்கரியன அறிந்து திளைத்து மகிழ்ந்து வருவாராயினர்.

"கருணாநிதி மருந்துச்சாலை" என இஞ்ஞான்று உலகெலாம் அறிந்துகொண்டாடப் பெறும் நிலையம் நின்று நிலவும் நல்லதோரிடத்தைத் தஞ்சைக்கு வெளியிலே இவர் விலைக்கு வாங்கினர். 'கருணானந்தபுரம்' என்னும் இவரிடத்திற்கு 1908இல் சென்னை மாநில ஆளுநர் சர். ஆர்தர் லாலி அவர்கள் எழுந்தருளிப் போந்து பண்டிதரவர்களின் மதி நலத்தினையும் மாண்புறு திறத்தினையும் மிகமிகப் பாராட்டிப் புகழ்ந்தனர்.

அப்பெருந் தோட்டத்தில் சுவைமிகு பல்வகைக் கனி மரங்கள், மேலைநாட்டு (ஆங்கில)க் காய்கறிப் பயிர்கள் முதலியன பயிரிடப் பெற்றுக் காண்பார் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்துதரும் சிறப்புடன் செழித்து வளர்ந்தன. ஆளின்றி நீரிறைக்கும் காற்றாலை (windmill) ஒன்றையும் நிறுவினர்.

1911ஆம் ஆண்டில் புதுமையான பொறிகளைக் கொண்ட 'லாலி மின்னியக்க அச்ச'கத்தை யமைத்தனர். புகைப்படக் கலை, வர்ணப் பூச்சுக் கலை, சவர்க்காரம் செய்தல் முதலிய பல்வகைக் கைத்தொழில்களிலும் வெற்றிகண்டனர்.

'பண்ணிசைப் பணியே' நம் பண்டிதர் அவர்களின் வாழ்க்கையின் பெரும்பங்கைக் கவர்ந்துகொண்டது. இசையின் அடிப்படை மெய்ம்மை இயல்புகளை ஆய்ந்துணரத் தம் முழுக் கருத்தினையும் செலுத்தினர். மேலை நாட்டிசையுடன் நம் பரதகண்டத்து இசையை முறையாக இணைக்க அரும்பாடுபட்டனர். இத்துறையில் இவருக்கு உற்ற நற்றுணையாய் விளங்கியவர் ஐரோப்பிய இசை வல்லாரான காலஞ்சென்ற பேராசிரியர் தஞ்சை A. G. பிச்சைமுத்து அவர்களாவர். புகழ்பெற்ற தியாகய்யரவர்கள் தெலுங்கில் கீர்த்தனங்கள் அமைத்த முறையை அடிப்படையாகக்கொண்டு இவர் பல பல புதிய வரிப் பாட்டுக்களைத் தமிழில் உருவாக்கினர். (வரிப்பாட்டுக்கள்–கீர்த்தனங்கள்.)

நம் பண்டிதரவர்கள் கீர்த்தனங்களும் கீதங்களும் அமைக்கும் புதுமுறை யொன்றினைக் கண்டனர். தம் மூத்த மகளாரான அன்னபூரணம் ஞானசிகாமணியும், தம் இளைய மனைவி திருமதி பாக்கியத்தம்மாளும் அயராதளித்த ஒத்துழைப்பால் பண்டிதரவர்கள் புதுப்புதுக் கீர்த்தனங்கள் பலவியற்றி அவற்றிற்கு இசையமைத்தார்கள். சேசண்ணு, முத்தைய பாகவதர், சங்கீத இதழாசிரியர் H. P. கிருட்டிண ராவ் முதலானோர் தடையேதுமின்றி உளமுவந்து வரவேற்றனர்.

1916இல் பரோடாப் பெருநகர்க்கண் கூடிய இசை மாநாட்டில் நம் பண்டிதரவர்கள் பங்கு கொண்டனர். தம் நுண்மாண் நுழைபுல மதிநுட்பத்தால் நன்காய்ந்து கண்ட சுருதிகள் இருபத்து நான்கென்னும் மெய்ம்மையினை யாவரும் உளங்கொளத் தக்க பல சான்றுகாட்டி அருதியிட்டு உறுதிபெற உரைத்தனர். நம் பண்டிதரவர்கள் தாமாகவே ஒரு விழைதக்க வீணையினை அமைத்து, அதன் வாயிலாக இவர்தம் செல்வியர்களான் இசைமீட்டிக்காட்டி அவற்றைத் தெற்றென விளக்கினர். திரு. வேங்கடராமதாசு என்னும் இசைப்புலவர்* 17–5–1917 இல் எழுதிய கடிதத்தில் இவ்வாராய்ச்சியினை நனிமிகப் பாராட்டியுள்ளனர்.

நம் பண்டிதரவர்கள் "கருணாமிர்தசாகரம்" என்னும் ஓர் அரிய பண்ணிசை நூலின் முதற்பகுதியை முன்னவனருளால் வெளியிட்டனர். அந்நூல் உண்மையிலேயே பண்ணமை நுண்ணுணர்வினோர் செவிக்கமிழ்தப் பெருங்கடலெனவே இன்றுந் திகழ்கின்றது; என்றுந் திகழும். இரண்டாம் பகுதியினை முற்றுவிக்குமுன் நம் பண்டிதரவர்கள் 31–8–1919 இல் 'ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமிழ்தாய்' விளங்கும் இறையடி நீழலெய்திப் பேரின்பமுற்றனர்.

பின்பு இவர்தம் மகளார் திருமதி, மரகதவல்லி அம்மையார் தம் அருந் தந்தையார் காட்டிய வழியினைப் பின்பற்றியே இரண்டாம் பகுதியினை முன்னவனருளால் முற்றுவித்தனர். அந்நூல் பண்டிதரவர்களின் தலைமகனாராகிய திருவாளர் டாக்டர் ஆ. சுந்தரபாண்டியனவர்களால் வெளியிடப்பட்டது. இந்நூலுக்குத் திரு. எம். அனந்தநாராயணன் ஐ. சி. எஃச் அவர்கள் சிறந்ததோர் முன்னுரை அளித்துள்ளார்கள்.

நம் பண்டிதரவர்களின் மெய்ப்பொருளாய்வாம் தத்துவ ஆராய்ச்சிநூல் "நன்மறை காட்டும் நன்னெறி" என்பதாம். இந்நூல் கிறித்துவமதத்தின் அடிப்படைத் தத்துவங்களை நயனுற வெளியிடும் நம் பரதகண்டமுறை விளக்கங்களாகும்.

நம் பண்டிதரவர்களின் நூற்றாண்டுப் பிறந்தநாள் விழா 1959 ஆகஸ்ட் 22, 23 ஆகிய இரண்டு நாட்களிலும் மிக்க சிறப்பாக நடந்துள்ளது. இதுபோன்று ஆண்டுதோறும் அவர்தம் நினைவுநாள் கொண்டாடுதல் நற்றமிழுக்கும், தமிழகத்திற்கும், தமிழர்க்கும், நன்னெறிக்கும் நாம் நயந்து புரியும் நல்லடையாளமாகும். வாழ்க பண்டிதர் வளர்தொண்டும் குடும்பமும்.

"அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்."
—திருக்குறள்.

# ரு. நீதிநூல்களில் இலக்கிய நயம்

[டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார்]

நீதி நூல்களில் இலக்கிய நயம் என்பதைப் பற்றிக் கூறுதற்கு முன்னுல், பொதுவாக நீதிநூல்களில் இலக்கிய நயம் மிக்குக் காணப்படுவது இயல்பன்று என்று கூறுதல் வேண்டும். நீதிகளைக் கூற எழுந்தவை நீதிநூல்கள். ஆனதால், இவ்வாறு நடக்கவேண்டும் என்று விதித்தும், இவ்வாறு நடக்கக்கூடாது என்று விலக்கியும் செல்வது நீதிநூல்களின் இயல்பு ஆனதால், அந் நூல்களிற் சிறந்த கவிநயம் காண்பது அரிதாகத்தான் இருக்கும். நல்ல கவிதையின் நோக்கம் மக்கட்கு நீதி கூறுவதன்று என்று சொல்லத் துணியும் மேனுட்டு ஆராய்ச்சியாளர் சிலர் கருத்திற்கேற்ப, நம் நாட்டிலும் சிலர் இக்காலத்தில் காவியத்தில், இலக்கியத்தில் வரும் கருத்தை நோக்கவேண்டா; இன்பத்தை மாத்திரம் கொள்ளுங்கள் என்கிருர்கள். இது ஒப்புக்கொள்ளக் கூடியதன்று. இலக்கியங்கள் சிற்பத்தைப் போல, ஓவியத்தைப்போல, நடனத்தைப் போல ஒரு நுண் கலையாக மதிக்கப்பட்டு இன்பம் நல்குமென்று எதிர்பார்க்கப் பட வேண்டுவது உண்மைதான். ஆனுல், இவ்வருங் கலைகளுக்கும் இலக்கியமாகிய கலைக்கும் ஒரு வேறுபாடு உண்டு. அது யாதென்ருல், சிற்பம், ஓவியம் முதலியவற்றினுடைய நோக்கம் இன்பம் பயப்ப தொன்றேயாகவும், இலக்கியத்தினுடைய நோக்கம் அதனேடு நில்லாமல் மக்களுடைய வாழ்க்கையைச் சீர்ப்படுத்த உதவுவதாகவும் இருத்தல் வேண்டும் என்பதே.

இதனுல் அறிந்து கொள்ளத்தக்கன இரண்டு உண்மைகள்: வாழ்க்கையைச் சீர்ப்படுத்த அமைந்த நீதிநூல்கள் சில இலக்கிய நயம் பெற்றிருத்தல் கூடும் என்பது ஒன்று. நல்ல இலக்கியங்களிற் சில இன்பம் பயப்பதோடு நில்லாமல் வாழ்க்கையை மேம்படுத்தவும் கூடும் என்பது மற்ருென்று.

தமிழிலுள்ள அறநூல்களைப் பற்றிப் பேசத் தொடங்கும் எவரும் திருக்குறளை முதலில் நினைத்தல் இயல்பு. ஈக, இன் சொற் கூறுக, விருந்தோம்புக என விதித்தும், பொய் கூறற்க, கள் உண்ணற்க, கொலை செய்யற்க என விலக்கி யும் செல்லும் இவ் அற நூலிலே இலக்கிய நயம் இருக் குமோ என ஐயப்பட வேண்டா. நீதி கூறும்போது நயம் படச் சொல்லுதற்குச் சாதாரண மனிதனுக்குத் தெரியாது. ஆனால், திருவள்ளுவருக்குத் தெரியவில்லை யெனின், யாருக்குத்தான் தெரியும்! இரக்கின்ற ஒருவனுக்கு இல்லை யென்று கூறுது பொருளுள்ளவர் கொடுக்க வேண்டுமென்று கூற விரும்புகிறார் திருவள்ளுவர். "ஒரு பொருளை எனக்கு ஈக," என ஒருவன் இரத்தல் இழிவுடைத்து என்பதை அறிவார். ஏதோ ஓர் அவசியம் ஏற்பட்டு, யாசித்தே தீர வேண்டும் என்ற நிலையில், ஒருவன் இரப்பதாக வைத்துக் கொள்வோம். அந்நிலையில் வேறொருவன் வீட்டிற் புகுந்து, தன் குறை இன்னது எனச் சொல்லத் தொடங்கிச் சொல்ல நா எழாமல் அவன் நிற்கின்றான். அவன் வந்து நிற்கிற நிலையைக் கண்டவுடனே, அவன் தன்னிடம் ஒரு பொருள் வேண்டி வந்திருக்கிறான் என்பதை அறியும் செல்வன் கூசாது, 'இல்லை' எனச் சொல்கிறான். இல்லை யென்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்தில், இரக்கிறவன் உயிர் போய் விடுகிறது. இல்லை யென்ற விடமோ சொல்லுகிறவன் வாய் வழியே வந்தது. ஆனால், அவனை ஒன்றுஞ் செய்ய வில்லையே! என்ன விந்தை!! அந்த நேரத்தில் அப்படிச் சொல் சொன்னவன் உயிர் எங்கேயாவது மறைந்திருக்க வேண்டும். எந்தப் புரையிலே புகுந்து அந்நேரம் ஒளித்துக் கொண்டதோ தெரியவில்லையே! இல்லையெனக் கேட்டவன் மாய்ந்தான்; கூறினவன் மாயவில்லையே! பொருளை வைத் துக்கொண்டு வழங்காமற் கெடுகிறவன் இருந்தால் என்ன, இறந்தால் என்ன? இந்தக் கருத்துக்கள் அனைத்தையும் திருவள்ளுவர் கூறக் கருதினார். அவற்றைக் கூறுதற்குப் பெரிய கட்டுரை எழுதவில்லை. அன்றி, நீளமாக ஆசிரியப் பாப் பாடவில்லை. பின் என் செய்தார்? ஒன்றே முக்கால் அடியிலே ஒரு குறட்பா இயற்றினார். அதுதான் இது:

"கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்."

இல்லை யென்று ஒருவர் சொல்லாடவும், இரப்பவர்க்கு உயிர் போகிறது; இல்லையென்று மறைப்பவர் உயிர் எங்கே போய் ஒளித்துக் கொள்கிறதோ தெரியவில்லையே என்ற அளவே இக்குறட்பா சொல்வதுபோல மேலெழுந்த வாரி யாய்ப் பார்ப்போர்க்குத் தோன்றும். ஆழ்ந்து நோக்கினுல், எவ்வளவு சிறந்த நயங்களைத் தன்பால் அடக்கிக் கொண் டிருக்கிறது இச்சிறு செய்யுள் என்பது விளங்கும். அதனுல்தான்,

"கடுகைத் துளைத்(து) ஏழ்கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

என இடைக்காடனுர் கூறினுர் போலும்.

உலகிற் பலருக்குப் பல தொழிலை இறைவர் பிண்டம் பிடிக்குங்காலே அமைத்திருக்கிருர் என்ற சொல்லைத் திருவள்ளுவர் கேட்டிருக்கிருர். ஒரு நாள் அவர் எதிரே ஒருவன் சனுவில் வந்தான்போலும் வந்தவன் ஒரு பிச்சைக் காரன். அவன் நேற்று யாசித்தவன், மூன்ரும் நாள் யாசித்த வன், இன்றும் யாசிக்கத்தான் வேண்டுமோ என அஞ்சுகிற வன். ஆம், என் செய்வது, தலையில் எழுதியவண்ணந் தானே நடக்கும், இரந்துதான் ஆகவேண்டும் என்று எண் ணினுன் அதற்குள்ளாக இன்னெரு எண்ணம் அவனுக்குத் தோன்றிற்று. யாசிப்பதும் ஒரு தொழிலா? உலகில் இன் னின்ஞர்க்கு இன்னின்னது தொழில் எனப் பிரமன் வகுப்ப தாக வைத்துக்கொள்வோம். அத்தொழில்களில் ஒன்ருக யாசித்தலையும் சேர்த்து எண்ணினுை பிரமன்? எண்ணி னுன் ஆனுல், அவனே அந்தத் தொழிலைக் கொஞ்சம் பார்க் கட்டும். உட்கார்ந்த இடத்தைவிட்டு அசையாமற் படைத் துக்கொண்டிருப்பதை விட்டுவிட்டு இந்த உலகிற்கு வரட் டும் வந்து தெருத்தெருவாக அல்லற்பட்டு அலையட்டும். அப்பொழுதுதான் அறிவான் இரத்தற்ருெழில் எவ்வளவு இழிவானது என்பதை. இழிவான தொன்றை எனக்கும் என் போன்றவர்க்கும் ஒரு தொழிலாகப் பிரமன் வகுத்தான் என்ருல், அவன் ஒரு பாவி. அந்தப் பாவத்தால் அவன் ஒரு

பிறவி எடுக்கட்டும். அப்பிறவி மானிடப்பிறவியாய் இருக்கட்டும். மானிடனாய், மானம்விட்டு, இரவலனாய் வந்து சேரட்டும். போகிற இடத்திலே உடனே உணவைக், காசைப், பிச்சையைப் பெறுமல், பல வீடுகளில் பல தெருக்களில் அலையட்டும். அலைந்து கெட்டொழியட்டும். இவ்வாறு அப்பிச்சைக்காரன் கருதியதாய் ஒரு கனக்கண்டார் போலும் திருவள்ளுவர்! அதன் பயனாய் ஒரு குறள் எழுதினார். அக்குறள்,

*"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்."*

என்பதே. எவ்வளவு பெரிய கனவை எத்துணைக் குறுகிய அடிகளில் தெரிவித்துவிட்டார். இதுதான் இலக்கிய நயம். இவ்வுலகைப் படைத்தவன் யாவனாயினும், அவன் இரத்தலையும் ஒரு தொழிலெனப் படைத்து அத்தொழிலாற் சிலர் உயிர் வாழ்வாராக என விதித்திருப்பானாயின், அவனும் தெருத்தோறும் பரந்து திரிந்து துன்புறுவானாக எனக் கூறுகின்ற இக்குறள், இரப்பினால் வரும் அச்சத்தை எவ்வளவு கொடுமையுடையதாகப் படம் பிடித்துக் காட்டுகின்றது! இரத்தல் கொடிது என்ற நீதியைக் காட்ட விரும்பும் திருவள்ளுவர் எவ்வளவு சிறந்த இலக்கியமாக இவ்விரண்டடிகளை அமைத்து விட்டார்!

சில உவமைகளைக் கையாளும் விதத்திலேயே திருவள்ளுவர் மிக்க நயமுண்டாகக் குறள் அமைத்திருப்பதைக் காண்கிறோம். உதாரணமாக,

*"அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட*
*மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்"*

என்பதை நோக்குவோம். கயவர்—கீழ்மக்கள். கீழ்மக்களைத் தம்பட்டம் ஆகிய பறைக்கு ஒப்பாகச் சொன்னார். சொன்னதற்குக் காரணம் யாது? தப்பினைத் தட்டுகிறான் ஒருவன். தப்பினிடத்திலே அவன் கையினால் ஒன்றை அறிவிக்கிறான். அதை அந்தப் பறை பலர் காதிற் சேர்க்கிறது; பல இடங்களிற் கொண்டு சேர்க்கிறது. அதைப்போல, இரகசியத்தைப் பிறரிடம் போய்க் கீழ்மக்கள் தெரிவித்து விடுகிறார்கள்.

யாரோ ஒருவர் ஒரு செய்தி இரகசியம் என்று ஒருவனிடத்தில் தெரிவித்தார். அவன் என்ன செய்தான் என்பது தெரியுமா? அதனை மூட்டை கட்டிக்கொண்டு பலரிடம் போனான். அந்த மறைபொருளாகிய சுமையை அவனால் தாங்க முடியவில்லை. அதனால், அதைக் கொண்டுபோய்ப் பலருக்கும் பங்கு போட்டுப் பிரித்து எடுத்து எடுத்துக் கொடுத்தான். இவனை அறைபறையன்னவன் எனத் திருவள்ளுவர் கூறிய அழகு நோக்கத்தக்கது. அந்த இரகசியம் அவனுக்குப் பாரமாக இருந்தது என்பதும், அதனைக் கொண்டு போய்ப் பிறர்க்குச் சேர்த்தான் என்பதும் உய்த்து என்ற சொல்லினாலே பெறப்படுகின்றன. 'உய்த்து' என்ற சொல் இக்குறட்பாவிற்கு உயிர்நிலை. அதனை எடுத்துவிட்டு வேறு எந்தச் சொல்லை அவ் விடத்துச் சேர்த்தாலும், இவ்வளவு சிறந்த நயங்கள் தோன்றமாட்டா. இச் சொல்லைத் தேர்ந்தெடுத்துத் தக்க இடம் பார்த்து வைத்த பெருமை திருவள்ளுவருடையது. கயவரிடம் இரகசியம் கூறக்கூடாது என்ற நீதியை எவ்வளவு நயம்படத் திருவள்ளுவர் கூறியுள்ளார்!

இரண்டடி அறநூலிலிருந்து இப்போது நாலடி நூலிற்குப் போவோம். செல்வம் நிலைபேறுடையதன்று; அழிந்து போகுந் தன்மையது என்னுங் கருத்துடைய நாலடிப் பாட்டு ஒன்றை நோக்குவோம்:

> *"அறுசுவை யுண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட*
> *மறுசிகை நீக்கியுண் டாரும் — வறிஞராய்ச்*
> *சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்று*
> *உண்டாக வைக்கற்பாற்று அன்று."*

அறுசுவை யுண்டியை உண்டு களித்த பெருஞ்செல்வரும் ஒரு காலத்திலே கூழை இரந்துண்ண நேர்ந்தாலும் நேரும். ஆதலால், செல்வத்தை ஒரு பெரும் பொருளாக மதிக்கவேண்டா என இச் செய்யுள் செப்புகின்றது. இதனுள், ஒன்றிற்கு ஒன்று மறுதலையாக வைத்துத் தொடுத்திருப்பதில்தான் அழகு திகழ்கிறது. அன்று அறுசுவை யுண்டி உண்டவன், இன்று உப்பில்லாக் கூழ் குடிக்கிறான். அன்று ஆசனத்தில் அமர்ந்து உண்டவன், இன்று நடந்து

கொண்டே குடிக்கிறான். அன்று மனைவி ஊட்ட உண்டவன், இன்று தனியே ஓரிடத்துக் குடிக்கிறான். அன்று மறுபிடி சோறு வேண்டாம் வேண்டாம் என மறுத்து உண்டவன், இன்று ஒரு பிடி யின்றி வறிஞனாகி இரக்கிறான். இப்படி ஒன்றிற்கு ஒன்று முரண்பட வைத்துக் காட்டிய வகையினாலே, எத்துணைச் சிறந்த செல்வனும் மிகவும் இழிந்த வறிஞனாதல் கூடும். ஆதலால், உள்ள போழ்தே அறஞ் செய்க என்ற கருத்தைத் திறம்பட எடுத்துக் காட்டுகிறது இந்நாலடி. இப் பாட்டிற்கு இவ்வாறு பொருள் கொள்ளாமல், அமர்ந்து என்ற சொல்லை இல்லாள் என்பதோடு சேர்த்து, மனைவி விரும்பி ஊட்டவும் மறுத்து உண்டவர்கள் என்றவாறு இயைத்துப் பொருள் சொல்லப்பட்டு வருகிறது. அப்படிச் சொல்வதைக் காட்டிலும், அறுசுவை யுண்டியை மனைவி ஊட்டவும் அமர்ந்து உண்டவர்கள் பிறகு வறிஞராய் இரக்கவும் நேரிடும் என்று இயைத்துக் கூறுவதுதான் தக்கது எனத் தோன்றுகிறது. அப்படிக் கொண்டால்தான் பாட்டினுடைய முழுஅழகும் விளங்கும். அறுசுவை யுண்டிக்கு மாறாகக் கூழினைக் கூறினார்; இல்லாள் ஊட்ட உண்டவன் ஓரிடத்து யாசித்து உண்கிறான். மறுசிகை நீக்கி யுண்டவன் ஒன்று மில்லாத வறிஞனாய்த் திரிகிறான். இவ்வாறெல்லாம் மாறுபட வைத்துக் கூறியதற்கேற்ப, அமர்ந்து உண்டவன் சென்று இரக்கிறான் என்றே கவிஞர் கூறக் கருதியிருப்பார் என நினைக்கிறேன். இத்துணை நயம் பொதியச் செய்யுளைச் செய்த கவிஞர் இன்னார் என்று அறிய வழியில்லை. அவர் இயற்றிய பாட்டு மாத்திரம் நாலடியார் என்ற நீதிநூலிலே காணப்படுகிறது.

உலகிலே இச்சகம் பேசி வாழும் மாந்தருள் ஒருவனைப் புலவர் ஒருவர் நோக்குகிறார். ஒருநாள் ஒருவரும் அறியாமலே அவன் வீட்டினுள் நுழைந்து, அவன் செய்பவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கிறார். அவன் "போற்றிபோற்றி, புண்ணியா போற்றி, போற்றி போற்றி பாரியே போற்றி, போற்றி காரி, போற்றி ஓரி, போற்றி கன்ன, போற்றி பேகா," என்று என்னென்னவோ உருப்போட்டபடி இருக்கிறான். இதனை மறைந்திருந்து கவனிக்கிறார் புலவர்.

பிறகு அவன் வெளியே புறப்பட்டுப் போகிருன். புலவரும் பின் தொடருகிருர். புதுப் பணக்காரன் ஒருவன் வீட்டில் அவன் நுழைகிருன். "போற்றி போற்றி" என்று தொடங்கி, "அடியேனைக் காத்தருள வேண்டியது ஆண்டவனை ஒத்த தங்களால்தான் இயலும்; இறைவனே அருள் புரிக. தங்கள் அருள நோக்கி வாழுகிறேன். பயிருக்கு மழை எப்படியோ, என்போன்ற வறிஞர்க்குத் தாங்கள் அப்படி" என்று சொல்லிப் பின்னும பல அடுக்கத் தொடங்குகிருன். பார்த்தார் புலவர்; பாடிஞர் ஒரு பாடடு:

> "போற்றியே போற்றியே 'யென்று புதுச்செல்வம்
> தோற்றியார் கண ணெலாம் தொண்டேபோல் — ஆற்றப்
> பயிற்றிப் பயிற்றிப் பலவுரைப்ப தெல்லாம்
> வயிறறுப் பெருமான் பொருட்டு.''

என்பதே அப்பாட்டு. புலவர் தாம கண்ட பெரிய காட்சியைச் சிறு பாட்டிலே அமைத்துக் கொடுத்தார். அவர் கூறக் கருதியதெல்லாம், "வயிற்றை வளர்ப்பதற்காக இச்சகம் பேசித் திரிய வேண்டாம," என்பதே. அதனை எவ்வளவு அழகாக முனைப்பாடியார் அறநெறிச்சாரத்தில் அமைத்து வைத்திருக்கிருர் என நோக்குங்கள். இச்சகம் பேசுவோன் இழிந்தவன், என்று நேரே சொல்லாமல், அவன் வயிற்றினை மகேசுவரனுக்கிப் பெருமைப் படுத்துவது போல் சிறுமைப்படுத்திய திறம வியக்கத்தக்கது. வயிருகிய தம்பிரான் இருக்கிருரே, அந்தக் கடவுளைக் காப்பாற்ற எத்தனை பொய்யும் புனை சுருட்டும் ஆற்றி மாந்தர் வாழ்கிருர்கள் என்று கவிஞர் இவ்விடத்தில் இரங்குகிருர். இப்படிப் பொய் சொல்லியாவது வயிறு வளர்க்க வேண்டுமா எனப் புலவர் கேட்பது போலத் தோற்றுகிறது. இத்துணை நயம்பட "வயிற்றுப்பெருமான் பொருட்டு,'' என்ற ஒரு தொடரால் எவ்வளவு அரிய பெரிய நீதிகளை அறநெறிசசாரச் செய்யுள் காட்டுகிறது.

எனவே, அறநூல்கள் சிலவும் மிக்க இலக்கிய நயமுடையனவாகத் திகழ்கின்றன என்பதை ஒருவாறு கண்டோம்.

# கூ. "மின்மினிப் பூச்சி"

[நாவலர், பு. சி. புன்னைவனநாத முதலியார்]

[ஓர் உரையாடல்]

**தந்தை :** குழந்தாய்! இரவு மணி எட்டுக்கு மேலாகிவிட்டது; ஆகையால் வேடிக்கை பார்த்தது போதும். வீட்டுக்குப் போகலாம்; வா!

**மகன் :** வேடிக்கை பார்க்கவில்லை அப்பா! வியந்துகொண்டிருக்கின்றேன்.

**தந்தை :** எதைப் பார்த்து வியந்துகொண்டிருக்கின்றாய்?

**மகன் :** அப்பா! அதோ பாருங்கள், வாய்க்காலோரத்தில் பளபள என்று மின்னுகின்றதே அஃது என்ன?

**தந்தை :** அதுவா? அதுதான் மின்மினிப் பூச்சி என்பது. இதுவரை நீ கண்டதில்லையா?

**மகன் :** (*அப் பூச்சியை ஆர்வம் பொங்க நோக்கிக்கொண்டு*) மின்மினிப் பூச்சியா! மின்மினிப் பூச்சி என்று காதால் மட்டும் கேள்விப்பட்டிருக்கின்றேன். கண்ணால் இது வரை கண்டதில்லை. ஆ! இந்தப் பூச்சி எத்தனை ஒளியும் எத்தனை கண்கவர் வனப்பும் உடையதாயிருக்கின்றது! இப்பொழுது எனக்கு ஒரு கருத்துத் தோன்றுகின்றது அப்பா!

**தந்தை :** மகனே! என்ன கருத்து? விளக்கமாகச் சொல்.

**மகன் :** இந்தப் பூச்சியை நாம் பிடித்து ஓர் இலையில் சுருட்டி வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போகலாமா என்பது தான்.

**தந்தை :** கண்மணி! விரலைச் சுட்டுக்கொள்ளப் போகின்றாய், கவனம் அப்பா!

**மகன் :** (*அதைக் கேட்டதும் விரலைச் சுட்டுக்கொள்வதினின்றும் தப்பினவன்போல் மிகவும் பரபரப்போடு நீட்டின கையை மடக்கிக்கொண்டான். ஆயினும், உடனே அது பூச்சியென்பதை நினைத்துக்கொண்டு ஒன்றும் அறியாத*

வன்போல் அத்தனை அஞ்சியதற்காகச் சிறிது நாணங் கொண்டு) அப்பா! நீங்கள் என்னைக் கேலி பண்ணு கின்றீர்களா? நீங்கள் சொன்ன மாத்திரத்திலேயே ஒன்றையுங் கருதாமல் உண்மை என்று நம்பி அஞ்சி விட்டேனாயினும், பின்பு கேலி என்பதைத் தெரிந்து கொண்டேன்.

**தந்தை:** நான் சொன்னதைக் கேட்டதும் நீ அஞ்சி விட்டனை! அல்லவா? அச்சந்தவிர். இஃது எரிவ தாய் இருப்பினும் உன் கையைச் சுடாது. உன் விருப்பப்படியே வீட்டிற்குக் கொண்டுபோகலாம். இலையில் சுருட்டி எடுத்துக்கொள்.

**மகன்:** எடுத்துக்கொண்டேன் அப்பா!

*[இருவரும் தெருவில் சென்று கொண்டிருக்கின்றார்கள்.]*

**தந்தை:** குழந்தாய்! இந்த இரவில் இப் பூச்சிகளின் ஒளி தவிர நமக்கு வேறு ஒளி கிடைக்காதிருந்தால் எப்படி இருக்கும்?

**மகன்:** ஆ! அங்ஙனம் நேர்ந்தால் நாம் இருட்டில் மிகவும் துன்பப்பட வேண்டியல்லவா வரும்? இதோ பாருங்கள் அப்பா! இந்தப் பூச்சியை நான் உள்ளங் கையில் வைத்துக்கொண்டிருக்கையிலேயே இதன் ஒளி என் விரலுக்குக்கூட எட்டவில்லையே! திங்களும் உடுக்களும் இல்லாவிட்டால் நாம் என்ன செய்யக்கூடும்? ஒன்றும் இயலாது. ஆயின் உடுக்கள் தரும் ஒளியைவிடத் திங்கள் நமக்கு அளிக்கும் ஒளி மிகவும் சிறந்தது.

**தந்தை:** ஆமாம் குழந்தாய்! திங்களின் ஒளி உடுக்களின் ஒளியைவிட மிகவும் சிறந்ததுதான். திங்களின் ஒளி யைப்போல இல்லாமல் அதைவிட ஒளிவாய்ந்த மற்று மொரு நிறை ஒளி இல்லாமலே நாம் நம்முடைய செயல்களை நடத்த இயலுமென்று நீ நினைக்கின்றாயா?

**மகன்:** கதிரவன் இல்லாவிட்டால் பகற்பொழுதில் நாம் என்ன செய்யமுடியும் அப்பா?

**தந்தை :** (*நகைத்துக்கொண்டு*) கதிரவன் இல்லாவிட்டால் முதலில் உனக்குப் பகல் எங்கிருந்து வரும் கண்மணி! நீ சொல்லுகின்றபடியே ஆகட்டும்; கதிரவன், திங்கள், உடுக்கள் இவை நீங்கலாக வேறு ஒளி இன்றியே நாம் நன்கு வாழலாமல்லவா?

**மகன் :** (*சற்று எண்ணி*) ஓ! நன்கு வாழலாம்; ஆயினும் இராக்காலங்களில் விளக்கொளி, மின்னொளி முதலியன மிகவும் பயனுடையவையல்லவா?

**தந்தை :** ஆம், அஃது உண்மையே. பகலில் ஒளி நல்குகின்ற ஞாயிற்றையும், இரவில் ஒளி கொடுக்கின்ற திங்கள், உடுக்கள் முதலியவைகளையும், வானத்திலுள்ள ஒளிகள் கண்ணுக்குத் தோன்றாத காலங்களில் மிகப் பயன்தரக் கூடியனவாக மன்னுயிர்கள் கண்டுபிடித்த பல ஒளிகளையும் நாம் இப்போது உரையாடினோமே! இவை அனைத்தையும்விட மிகச் சிறந்த மற்றுமோர் ஒளி உலகில் உண்டு. அந்த ஓர் ஒளி மட்டும் உலகில் இல்லையென்றால் எத்தனை கோடி ஞாயிறுகள் வானத்தில் எரிந்தாலும் சரி, நாம் திக்குத் திசை தெரியாமல் இருட்டில் அல்லலுற்றுத் தவிக்க வேண்டிவரும்!

**மகன் :** ஞாயிறு, திங்கள், உடுக்கள் ஆகிய இவற்றைவிட மிகச் சிறந்த ஒளி ஒன்று உலகத்தில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே அப்பா! அஃது என்ன?

**தந்தை :** மிக்க இழிவுடையதும் என்றும் அழியக்கூடிய இயல்புடையதுமான நம் உடம்புக்கு இடர் எதுவும் நேராமல் இருப்பதற்கு ஓர் ஒளி கட்டாயம் வேண்டுமென்பது நம் முன்னோரும் மூதறிவோரும் கண்ட மெய்ம்மை. உடம்பைக் காட்டிலும் ஆன்மா மிகவும் சிறந்தது. அஃது என்றும் அழிவதில்லை. இந்த மின்மினிப் பூச்சி ஒளியிழக்குமளவு மட்டுமன்று; ஞாயிறு, திங்கள், உடுக்கள் முதலிய வானத்திலுள்ள ஒளிகள் அழிந்துபோகும் காலத்திலும் ஆன்மா அழியாமல் இருக்கின்றது. அப்படிப்பட்ட ஆன்மாவுக்கு நல்வழி இது தீவழி இது, இச் செயல் செய்ய

லாம் அச் செயல் செய்தல் கூடாது என்பனவற்றை அறிந்துகொள்வதற்கு ஓர் ஒளி தேவை என உனக்குத் தோன்றவில்லையா?

**மகன்:** ஆம் அப்பா! தேவைதான். ஆயினும் அந்த ஒளி இன்னதென எனக்கு இன்னும் தெளிவாய் விளங்கவில்லை. நீங்கள் சொல்லிவருவதைப் பார்த்தால் கட்டாயம் தெரிந்துகொள்ள வேண்டும் என்று துடிப்பாக இருக்கின்றது.

**தந்தை:** சொல்கின்றேன், கேள். நம் அறிவுக்கு எட்டிய வரையில் எண்ணிப் பார்த்தால் அதுவே கடவுளறிவு – இறை ஞானம் என்பது. ஆன்மாவுக்கு ஒளி தருவது கடவுளறிவுதான். அது தெரியாதவர்களுக்கு இவ்வுலகம் இருண்டு கிடப்பதுவுமன்றி, நன்னிலை அடைவதற்குரிய வழியும் தோன்ருது. இறப்புக் காலத்தில் ஐம்புலன்களும் அறிவு மயங்கி ஒரே இருட்டாக ஒன்றும் தோன்ருமல் திக்குமுக்காடும்போது இறை ஞானமாகிய பெரும் பேரொளியைத் தவிர மற்ற ஞாயிறு, திங்கள் முதலிய ஒளிகளெல்லாம் ஒரு சிறிதும் துணையாகமாட்டா.

**மகன்:** ஆ! இப்போது எல்லாச் செய்திகளும் எனக்கு எவ்வளவு தெளிவாகத் தெரிகின்றன! இங்ஙனம் தாங்கள் எனக்கு இச் செய்திகளை விளக்கிக் காட்டுவதற்கு முன்னமேயே நானே தெரிந்துகொள்ள வல்லவனுக இருந்தால் எவ்வளவு பெருமையாக இருக்கும்? நான் ஓர் அறிவற்றவன் அப்பா!

**தந்தை:** இல்லை இல்லை மகனே! நீ அறிவற்றவனல்லன். நீ குழந்தைதானே! இதுபோன்ற செய்திகளைப் பெரியவர்கள் சொல்லிக்கொடுத்தால்தான் இளையவர்கள் தெரிந்துகொள்ள இயலும்.

**மகன்:** அப்பா! பெரியவர்களிலும் உங்களைப்போல் எடுத்துக்கொண்ட பொருளை இவ்வளவு இனிமையாகவும் எளிமையாகவும் தெளிவாகவும் உள்ளங்கை நெல்லிக் கனியென விளக்குவதில் வல்லவர்களாயிருந்தால்

என்னைவிட அறிவு குறைந்தவர்களுக்கும் அறிவு விரிவடையுமப்பா! இறப்புக் காலத்தில் நமக்கு இந்த அற்பமான மின்மினிப் பூச்சி எவ்வளவு தெளிவு உண்டாக்குமோ அதைவிட ஞாயிறும் திங்களும் உண்டாக்கமாட்டா என்று எனக்கு இப்போது தெளிவாயிற்று.

தந்தை : குழந்தாய்! இதை நீ அறிந்துகொண்டது எனக்கு மிகவும் மகிழ்ச்சி தருகின்றது. தன் உள்ளத்தைத் திருத்தி நல்வழியில் நடத்த இறைஞானம் எவனுக்கு இல்லையோ அவன் ஒருபோதும் செம்மையாக ஒழுக மாட்டான். இதனால், ஞாயிறு திங்கள் முதலிய இறைவனின் படைப்புப் பொருள்களைப் பொருட்படுத்தக் கூடாது என்று சொல்வதாக நினைக்கவேண்டாம். அந்த வியப்புப் பொருள்களைப் பார்த்து மகிழவேண்டும். எங்கும் நிறைந்த விண்ணும் மண்ணும், ஒளிப்பொருள்களும் பிற பொருள்களும் உயிர்களும் இறைவனின் பெருமையையும் அளவிலாற்றலையுமே நமக்கு விளக்குகின்றன. ஆயின் நான் இப்போது உனக்குத் தெரிவிக்க வந்தது யாதெனில், மன்னுயிர்களை நன்னிலையில் கொண்டு சேர்க்க நம் கண்ணுக்குப் புலப்படுகின்ற இப் பொருள்கள் உதவியாகமாட்டா என்பதே.

மகன் : அப்பா! எனக்குத் தாங்கள் பேருள்ளம் வைத்து இவ்வளவு அறிவுத் தெளிவுண்டாக்கியதற்காக நான் தங்களிடம் மிகவும் நன்றியுள்ளவனாகின்றேன். எனக்கு இவ்வளவு அறிவு உண்டாவதற்குக் காரணமாக இருந்தது இந்த மின்மினிப்பூச்சியே யாதலால் இனியும் இதை என் கையில் வைத்து வருத்தாமல் இந்தப் பசும்புல் தரையில் முன்போலவே உரிமையுடன் உலவ விட்டுவிடுகின்றேன். புல்தரையில் அது தனித்திருக்கும்போது அதற்கு இருக்கும் இன்பம் நமது வீட்டில் உண்டாகாது என்று கருதுகின்றேன். புல்தரையில் இது உலவும்போது எவ்வளவு பளபளப்பாய் மின்னுகின்றதோ அவ்வளவு பளபளப்பு என்

கையில் இருக்கும்போது அதற்கு இல்லை பார்த்தீர்களா?

**தந்தை:** அன்புக் குழந்தாய்! உனக்கு உயிர்களிடத்தில் இத்தனை பேரன்பும் பெருமதிப்பும் வந்தது கண்டு நான் மிகவும் மகிழ்கின்றேன். மனிதர்கள் வரையும் ஓவியம், சிற்பம் முதலிய கைத்திறன்களைக் கண்டு சிலர் அதன் அருமைப்பாடு உணர்ந்து அதனை மதித்துப் பாதுகாப்பார்கள். பழுதுபட விடமாட்டார்கள். ஆனால் இறைவனால் ஆக்கப்பட்ட பொருள்களைப் பொருட்படுத்த மாட்டார்கள்; பேண மாட்டார்கள்; போற்றமாட்டார்கள்! இறைவனுக்கு ஒப்பான கைவல்லார்களை நாம் காணவே முடியாது. இந்த மிகவும் அற்பமான மின்மினிப் பூச்சியையே பார்! இவ்வளவு நுட்பமும் வனப்பும் வியப்பும் உள்ள சிற்ப வேலையை இவ்வுலகில் எங்காவது காணமுடியுமா? இந்த மின்மினிப் பூச்சியாலேயே மற்றோர் உண்மையும் தெரிவிக்கின்றேன்.

**மகன்:** அஃது என்ன உண்மை அப்பா?

**தந்தை:** இப்பொழுது பளபள என மின்னும் இப்பூச்சியின் தோற்றமும் ஒளியும் காலையில் ஞாயிறு தோன்றும் பொழுது மறைந்து போகும். எவ்வளவு சிறப்புற்றவையானாலும் இவ்வுலகத்துப் பொருள்களும் இத்தன்மையுடையவையே. நம்முடைய ஆற்றலும், செல்வமும், முயற்சியும், பெருமையும் எல்லாம் ஒரு காலத்தில் எவ்வளவு மாட்சிமையோடு விளங்கினாலும், நாளடைவில் அழிந்துபடும் தன்மையனவேயாம். ஆதலால் அறிவுடையவர்கள் அழிந்துபடும் இந்த உலக இன்பத்தையே நாடாமல், என்றும் அழியாத பேரின்பத்தையே நாடுவார்கள்; நாடுகின்றார்கள். நீயும் அங்ஙனமே நடத்தல் வேண்டும்.

**மகன்:** அப்படியே செய்கின்றேன் அப்பா!

*(இருவரும் மகிழ்வுடன் வீடு சேர்கின்றனர்.)*

# எ. தமிழ் இலக்கியத்திற் கண்ட அரசு

[டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை]

தமிழ்நாடு பலவகை நலங்களும் படைத்த நாடு. இந் நாட்டில் போதிய நீர்வளமும் நிலவளமும் உண்டு; நல்ல மலைவளமும் கடல் வளமும் உண்டு. இவ்வளங்கள் எல்லாம் அமைந்திருப்பினும் நாட்டிலுள்ளார் நலமுற்று வாழ்வதற்கு நல்லரசு வேண்டும் என்பது தமிழ்நாட்டார் கொள்கை. நாட்டில் வாழும் குடிகளுக்கு அரசனே உயிர் என்னும் கருத்தைப் பழைய தமிழ் நூல்களிற் காணலாம்.

*"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்*
*அதனால், யான்உயிர் என்ப தறிகை*
*வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே."*

என்ற புறப்பாட்டு, மன்னன் நிலைமையையும் கடமையையும் நன்கு விளக்குகின்றது.

தமிழ்நாட்டில் அரசாங்கம் நினைப்பிற்கு எட்டாத நெடுங்காலமாக நடைபெற்று வருகின்றது. ஆதியில் சேர சோழ பாண்டியர்கள் அரசு புரிந்தார்கள். அவர்கள் படைப்புக் காலமுதல் அரசாள்கின்றார்கள் என்று தமிழ்ப் புலவர் கூறுவாராயினர். இவ்வாறு தமிழ் நாட்டில் சிறப்பு வாய்ந்து விளங்கிய மூவேந்தரும் பெரும்பாலும் பொறுப்பு உணர்ந்தவர்களாகவே அரசு புரிந்தனர்.

நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீக்கிக் குடிகளைப் பாதுகாக்கும் பொறுப்புடையவன் அரசனே. பசிநோய் ஒழிய வேண்டுமாயின் உணவுப்பொருள்கள் போதிய அளவு நாட்டிலே விளைதல் வேண்டும். உணவுப் பொருள்கள் விளைவதற்கு மழை உரிய காலத்தில் பெய்யவேண்டும். பருவத்தில் மழை பெய்யாதொழிந்தால் உயிர்கள் எல்லாம் பசியால் நலிந்து வருந்தும்.

*"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்(து)*
*உண்ணின்(று) உடற்றும் பசி."*

என்றார் திருவள்ளுவர். அரசன் அறநெறி தவறாமல் ஆண்டு வந்தால் மழை தப்பாமல் பெய்யும் என்பது தமிழ்நாட்டார் கொள்கை. எனவே, மழை பெய்து, நாடு செழித்தால் குடிகள் மன்னனைப் போற்றுவர்; மழை பெய்யாதொழிந் தால் மன்னனைத் தூற்றுவர். இவ்வுண்மை,

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கணகன் ஞாலம்."

என்னும் புறநானூற்று அடிகளால் அறியப்படும். இங்ஙனம் பசிநோயை நீக்கும் பொறுப்புடைய அரசன், பகைவரால் குடிகள் வருந்தாமலும் பாதுகாக்கும் கடமை யுடையவன். குடிகளைத் துன்புறுத்தும் பகைவர் நாட்டின் உள்ளேயும் இருப்பர்; வெளியேயும் இருப்பர். நாட்டின் உள்ளே இருந்துகொண்டு கொலையும் கொள்ளையும் கொடுமையும் புரிவோரை அடியோடு அழித்தல் அரசன் கடமை.

"கொலையிற் கொடியாரை வேந்(து)ஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

என்று திருக்குறள் கூறுகின்றது. பசும்பயிர் செழித்து வளர் வதற்காக அதனிடையே முளைக்கும் களையைப் பறித் தெறிதல் போன்று, நாட்டிலே குடிகள் நலமுற்று வாழ் வதற்காக அரசன் கொடியவர்களைக் கொன்று ஒழித்தல் வேண்டும் என்பது இக் குறளின் கருத்து. குடிகளைத் துன்புறுத்தும் கொடியவர்கள் இல்லாத நாடே நாடாகும்.

முற்காலத் தமிழரசர்கள் கள்வருக்குக் கடுந்தண்டம் விதித்தார்கள். களவு செய்தவனுக்குக் கொலைத் தண்டனை விதித்தல் முறையாகக் கருதப்பட்டது. சிலப்பதிகாரம் இதற்குச் சான்று தருகின்றது. அரண்மனைச் சிலம்பைக் களவு செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட கோவலனுக்குப் பாண்டியன் கொலைத் தண்டனை விதித்தான். கொலை யுண்டிறந்த கோவலன் மனைவி, மாளிகையிற் போந்து மனந்துடித்துக் கண்ணீர் வடித்தாள். அதைக் கண்ட மன்னவன், 'மாதே, நின் கணவன் களவு செய்தான். அக் குற்றத்திற்காகக் கொல்லப்பட்டான். இதில் கொடுமை யொன்றும் இல்லையே.'

"கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று
வெள்வேற் கொற்றம் காண்."

என்று நீதி முறையை எடுத்துரைத்தான். இவ்வாறு கள்வருக்குக் கடுந்தண்டனை விதித்தமையாலேயே முற்காலத்தில் களவு குறைந்திருந்தது போலும். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த ஸ்ட்ராபோ (Strabo) என்னும் யவன ஆசிரியர் பாரத நாட்டில் களவாடுவோர் இல்லை என்று எழுதியுள்ளார். இதனைப் பார்க்கும் பொழுது,

"கள்வார் இலாமைப் பொருள்காவலும் இல்லை யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ."

என்று கம்பர் புனைந்துரையாகக் கூறிஞரல்லர்: உண்மையை உரைத்தார் எனக் கொள்ளலாகும்.

இன்னும் நாட்டின் தலைவனாகிய அரசன் மாற்றரசர்களால் குடிகளுக்குத் துன்பம் நேராதவண்ணம் காக்கும் கடமையும் உடையவன். மண்ணாசை கொண்டு மாற்றரசர் படை எடுப்பாராயின் அவர் படையை வென்றழித்தல் மன்னவன் கடமை முற்காலத்தில் மாற்றரசர் படை எடுப்புப் பெரும்பாலும் தரை வழியாகவே நிகழ்ந்தது. சில வேளைகளில் கடல் வழியாகவும் ஆகாய வழியாகவும் பகைவர் தாக்கியதாகத் தெரிகின்றது.

இவ்விதம் பசி நோயாலும் பகைவர் கொடுமையாலும் குடிகள் வருந்தாமல் பாதுகாப்பவன் அரசனே யாதலால் காவலன் என்னும் பெயர் அவனுக்கு அமைவதாயிற்று. காவலன் என்ற சொல்லின் பொருளைத் திருத்தொண்டர் புராணம் இயற்றிய சேக்கிழார் தெளிவுற விளக்கிப் போந்தனர்.

"மாநிலங்கா வலன்ஆவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த்(து) அறங்காப்பான் அல்லனோ."

என்பது சேக்கிழார் பாட்டு. காவலன் ஆகிய அரசன் அறத்தைக் காக்கின்றான் என்பது இப் பாட்டால் விளங்கு

கின்றது. மறப் பகையைப் போக்கி அறப் பயனை நாட்டில் விளைப்பவனே காவலன் என்னும் பெயருக்கு உரியவன். இதனாலன்றோ 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்ற வாசகம் எழுந்தது? 'அரசன் அன்று கேட்பான், தெய்வம் நின்று கேட்கும்' என்பது இந்நாட்டில் நெடு மொழியாக வழங்குகின்றது. நாட்டில் குற்றம் நிகழ்ந்தால் அரசன் உடனே அதனை விசாரணை செய்வான். குற்றம் சாட்டப்பட்டவன் இன்னான் இனியான் என்று பார்ப்ப தில்லை; அவனுடைய குலத்தையும் குடியையும் கருதுவ தில்லை. உற்றார் உறவினர் ஆயினும் மற்றோராயினும் நீதி செலுத்தும் முறையில் வேற்றுமையில்லை. சோழ நாட்டை ஆண்ட அரசன் ஒரு பசுவின் கன்றைக் கொன்ற அரசிளங் குமரனை ஒறுத்து, நீதியின் செம்மையை நிலை நிறுத்தினான். தவறு செய்தவன் தன் மைந்தன் என்று சிறிதும் திகைத்தானல்லன்; தன் பெருங்குலத்திற்கு ஒரு மைந்தனே உள்ளான் என்றும் எண்ணினானல்லன்; நீதி நெறி வழுவாமல் குற்றம் செய்தவனை ஒறுத்தலே கடன் எனத் துணிந்தான். இங்ஙனம் நேர்மை குன்றாது மகனை முறைசெய்து அறத்தினைக் காத்த மன்னன் பெருமையைத் தமிழ் இலக்கியம் வியந்து போற்றுகின்றது.

*"ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதும்உணரான்*
*தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்*
*மருமந்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்*
*அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்."*

என்று சேக்கிழார் இம்மன்னன் செம்மையை வியந்தனர்.

இச்சோழனைப் போலவே பாண்டியன் நெடுஞ்செழி யனும் நீதி பரிபாலனம் செய்து வந்தான். நீதி முறைக்கு மாறாக இப் பாண்டியன் கண்ணகியின் கணவனாகிய கோவல னுக்குக் கொலைத் தண்டனை விதித்துவிட்டான். தண்டனை யும் நிறைவேறி விட்டது. பின்பு கண்ணகி வழக்காடிய பொழுது நீதி தவறியது என்று நெடுஞ்செழியன் அறிந் தான்; அந் நிலையிலேயே தள்ளரிய துயரத்தால் உள்ளம் உடைந்து உயிர் துறந்தான்; தான் செய்த பிழையைத் தீர்ப்பதற்குத் தன்னுயிரையே கொடுத்தான். இதனை

யறிந்த அயல் நாட்டு வேந்தரும் பாண்டியனைப் பாராட்டினர். சேர மன்னனாகிய செங்குட்டுவன் மனம் வருந்தி,

"செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
வெவ்வினை விளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது."

என்று பாண்டியனைப் புகழ்ந்தான். எனவே, தவறு செய்தவர் யாவரேயாயினும், தமிழ் வேந்தர் நீதி செலுத்தத் தயங்கவில்லை என்பது நன்கு விளங்குகின்றது.

நாட்டில் நிகழ்ந்த குற்றங்களை விசாரணை செய்து நீதி செலுத்தியது போலவே, அரசர், குடிகளுக்குள் நேர்ந்த வழக்குகளையும் தீர்த்து முடிவு செய்தார்கள். அரசன் நீதி மன்றத்தில் அமர்ந்துஇருதிறத்தார் கூறும் வழக்கையும் நன்றாக மனத்தில் ஏற்று நீதி வழங்கினான். நீதிமன்றத்திற் சென்று வழக்காடுதலை மன்றாடுதல் என்பர். இப்பொழுது மன்றாடி வேண்டிக்கொள்கிறேன் என்ற வாசகம் வழங்கக் காணலாம். கரிகாற்சோழன் காலத்தில் நிகழ்ந்த ஒரு வழக்கைக் குறித்துத் தமிழ் நாட்டில் நெடுங்காலமாக ஒரு கதை வழங்கி வருகின்றது. கரிகாற்சோழன் இளமையிலேயே அரசனாய்விட்டான். அவனிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தார்கள் இரண்டு கிழவர்கள். வழக்கே மிகச் சிக்கலானது. மன்றாட வந்த முதியோர் இருவரும் மனம் தளர்ந்து ஊரம்பலத்திலே இரவில் தங்கியிருந்தார்கள். வழக்கைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். இளைஞனாகிய நம் அரசன் இவ் வழக்கை மனத்தில் வாங்கிக்கொள்ள வேண்டுமே! முறை தவறாமல் தீர்ப்புச் சொல்லவேண்டுமே! எப்படியாகுமோ என்று உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப் பேச்சு மாறுகோலம் புனைந்து அவ்வழியாக வந்த மன்னன் செவியில் விழுந்தது. கவலையோடு அரண்மனையை அடைந்தான் அரசன்; மறுநாள் நீதிமன்றத்திற்குச் செல்லும்போது பெரிய அங்கியொன்றை அணிந்தான். தலையில் அமைந்த கருமுடியை நரைமுடியால் மறைத்தான்; இவ்வாறு முதுமைக் கோலம் புனைந்து கொண்டு நீதிமன்றத்திற் சென்று ஆசனத்தில் அமர்ந்தான். வழக்காளர் இருவரும் மன்றத்தில் புகுந்தார்கள். அரசன் திருமுகத்தை நோக்கி

ஞர்கள்; முகத்தில் இளமையிருப்பினும் அரசன் தலை முதிர்ந்திருக்கக் கண்டு ஆனந்தமடைந்தார்கள்: ஆண்டில் இளையவனாயினும் அறிவில் முதியவன் நம் அரசன் என்று மனந்தேறித் தம் வழக்கை எடுத்துரைத்தார்கள். இரு திறத்தார் வாய்மொழியும் அமைதியாகக் கேட்டுத் தீர்ப் புரைத்தான் அரசன். அதுவே முறையான தீர்ப்பென்று வழக்காளர் இருவரும் மனமகிழ்ந்து சென்றார்கள். இக் கதை பழமொழி என்ற தமிழ் நூலிற் குறிக்கப்படுகின்றது.

> "உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
> நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
> சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
> கல்லாமற் பாகம் படும்."

என்பது பழமொழிப் பாட்டு.

இவ்வண்ணம் முறைசெய்து குடிகளைக் காப்பாற்றும் மன்னரைக் கடவுளுக்கு ஒப்பாகக் கருதினர் தமிழ்நாட்டார். இறைவன் என்ற சொல் கடவுளையும் குறிக்கும்; அரசனை யும் குறிக்கும். "முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு, இறையென்று வைக்கப்படும்," என்பது திருவள்ளு வர் வாக்கு.

நாடாளும் அரசனிடம் தெய்வ ஒளிவிளங்கும் என்று திருவள்ளுவர் அருளினர். உலகத்தைக் காப்பது அவ் வொளியே என்பது தமிழ்நாட்டார் கொள்கை.

> "உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி
> கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்."

என்று சிந்தாமணி கூறுகின்றது. அரசனிடம் தெய்வத் தன்மை அமைந்திருத்தலால் அன்றோ திருவாய்மொழி யுடையார்,

> "திருவுடை மன்னரைக் காணின்
> திருமாலைக் கண்டேனே என்னும்."

என்று திருவாய் மலர்ந்தருளினார்? ஆகவே, அரசனே அச்சந் தீர்ப்பவன்; அறங்காப்பவன்; முறை செய்பவன்; குறை தீர்ப்பவன். அவனே இறைவனாகும் என்பது தமிழ் இலக்கியத்திற் கண்ட கருத்து.

## அ. பாரதநாட்டுச் சிற்பக்கலை

[திருமதி, ஆர். எஸ். ருக்மணி, எம். ஏ.]

வரி வடிவங்களும் சிற்ப ஓவியங்களும்

பழங்காலத்தில் மனிதன் ஆக்கிய மட்கலன்களிலும் கல்தூண்களிலும் காண்கின்ற அலங்காரங்கள் யாவும், அவன் இயற்கையை ஆய்ந்து கற்ற வரிவடிவ அலங்காரங் களேயாம். இவ்வரிவடிவங்கள் உண்மை அளவிலே அமையாவிடினும், உண்மையின் சாயலைக் காட்டுகின்ற அளவிலே தோன்றுவனவாகக் காணலாம். இயற்கைப் பொருள்களின் மாண்புமிக்க அழகுகளே மனிதனது உள் ளத்தைத் தொட்டு அசைத்தன; சட்டி பானைகளின் மீது நேர்கோடு வளைவுக்கோடுகளால் தம் அழகுகளை வகுத்துக் காட்டும் முயற்சிக்கு அவனுடைய உள்ளத்தை ஊக்கி விட்டன. இயற்கையின் கண் விளங்கும் மாண்புமிக்க அவ் வழகுகளே அன்றுமுதல் இன்றளவும் அவனுள்ளத்தில் அழகுணர்ச்சியை வளர்த்து வருகின்றன. இயற்கையழகு களே தம்மை வெளியிட முயன்ற ஆதிகாலத்து மனிதனின் அற்ப முயற்சிகளுக்கும், இந்நாள் மனிதனின் வியத்தகு முயற்சிகளுக்கும் தூண்டுகோல்களாக விளங்குகின்றன. அன்று ஒருவன் சட்டி பானைகளை நேர்கோடு வளைவுக்கோடு களால் ஒப்பனை செய்தான். இன்று ஒருவன், சிற்ப ஓவியக் கல்லூரியில் தேர்ந்தவனே ஆயினும், சுவரில் ஒட்டுகின்ற காகிதம் செய்வதற்காக அளவில் நீண்டு குறுகிய பல நேர் கோடு வளைவுக்கோடுகளைத் தெரிந்து கொண்டு, அவற்றை ஒருமுறை அமைத்தவண்ணமே திரும்பத் திரும்ப மடங்கி வருமாறு ஒரு காகிதத்தில் படம் எழுதுகிறான். அன்று நாகரிகத்தின மிகவும் தாழ்ந்த நிலையிலேயே நின்ற சிற்பி யின் உள்ளம் இயற்கை வாழ்க்கையிற் கண்ட அழகுணர்ச்சி யையும் நெஞ்சத்துடிப்பையும் இதயப் படபடப்பையுமே நாகரிக ஏணியின் உச்சிப்படியில் நிற்கின்ற சிற்பக் கலை ஞனது உள்ளமும் அனுபவிக்கின்றது. அவன் வரைந்த நேர்கோடுகளையும் வளைவுக்கோடுகளையுமே இவனும் எழுது

கின்றான்; எனினும், அவனுடைய கோடுகளின் அமைப்பு முறைகளில் காணாத-மாய அமைப்பு முறைகள் இவனுடைய ஓவியங்களிற் காணப்படுகின்றன. அழகுணர்ச்சிகளை வெளியிட்ட பழங்காலச் சிற்பியும் நேர்கோடு வளைவுக்கோடுகளையே கையாண்டனன்; அவன் கையாண்ட கோடுகளையே நவீனச் சிற்பக் கலைஞனும் கையாளுகின்றான். அதே கோடுகள் அன்றுமுதல் இன்றளவும் திரும்பத் திரும்ப வருகின்றன. சிற்பக்கலைகள் எல்லாம் கோடுகளின் மடக்கால் அழகை வகுக்கின்றன. ஓவியக்கலைகள் யாவும் கோடுகளின் மடக்கால் அழகிய படங்களாக அமைகின்றன.

அழகே இறைவன்! இறைவனின் அழகே இயற்கை! இயற்கையின் அழகே ஆன்மா! ஆன்மாவின் அழகே சிற்ப ஓவியம் முதலிய நற்கலைகளின் வாயிலாக வெளிப்படுகின்றது.

பாரதநாட்டுச் சிற்பங்களின் தனிப்பண்பு

பாரத நாட்டார் வழிபடுகின்ற தெய்வங்களின் உடலுறுப்புக்களின் இலக்கணங்கள் கிரேக்கர், எகிப்தியர் முதலான பிறநாட்டினர் வணங்குகின்ற தெய்வங்ளின் உடலுறுப்பிலக்கணங்களினின்று முற்றிலும் வேறுபட்டன; அந் நாடுகளில் மனிதர் வழிபடும் தெய்வங்கள் மனித உடற்கூறுகளையே பெரிதும் தழுவியுள்ளன. இரு கரங்களும், இரு கால்களும், ஒரு தலையும், இரு கண்களும் உடைய தெய்வங்களையே அவர்கள் வணங்கி வந்தனர். அத்தெய்வங்களின் உருவங்கள் மானிட அழகின் முற்றிய நிலையைப் பெற்று விளங்கின. பாரத நாட்டுப் பண்பாடு, வழிபடும் தெய்வங்களைப் பேராற்றல் உடையவர்களாகவும் பேரறிஞர்களாகவும் காட்டுகின்ற இயல்பைப் பெற்றுள்ளது. ஆயிரம் தலைகளும், ஆயிரம் கண்களும், ஆயிரம் அடிகளும், ஆயிரம் கைகளும் உடைய மூல புருஷனைப் பாடுகின்ற வேத வாக்கியங்களைப் பாரத நாட்டார் இன்றளவும் இசைத்து வருகின்றனர். உலக குருவாக விளங்குகின்ற முழுமுதற் கடவுளின் திரு உருவில் பல்லுயிர்களும், பலவுலகங்களும் படிந்தியங்குகின்ற தோற்றத்தைத் தியானிக்கின்ற பண்பிலே பாரத

நாட்டின் நாகரிகம் உருவாகி இருக்கின்றது. ஆதலால், நான்கு கைகளை உடைய தெய்வமும், பன்னிரு கையும் ஆறுமுகமு முடைய தெய்வமும், நான்கு முகமும் எண் கைகளுமுடைய தெய்வமும், இன்னும் பல்வேறு உடலுறுப்புக்களோடு விளங்குகின்ற தெய்வங்களும் பாரத நாட்டின் தனிப் பண்புகளாக விளங்குகின்றன.

பாரத நாட்டுச் சிற்பக்கலை

பாரத நாட்டின் சிற்பக்கலை வெகு புராதனமானது. மரத்திலேனும் கல்லிலேனும் வெகு நுண்ணிய சிற்ப வேலைப்பாடு துலங்கச் செய்வதில் இந்தியச் சிற்பியை மற்றெந்த நாட்டினரும் வெல்லுதல் அரிது. மாந்தரின் உருவத்தைப் படம் பிடிக்கின்ற பாவனையாகச் சிலையுருச் செதுக்குதலைச் சிறந்த தொழிலெனப் பாரத தேசச் சிற்பக்கலை மதித்திலது; தேவதேவியரின் உடலுறுப்புக்களின் இலக்கணங்களைச் சிலையில் படைப்பதையே பெரும் பேருகக் கருதியது.

பாரத நாட்டுச் சிற்பி

பாரத நாட்டுச் சிற்பி ஒருவன் முருகக்கடவுளின் திருவுருவைச் சிலையிற் செதுக்குமுன் அக்கடவுளின் உடலுறுப்பிலக்கணங்களை வருணிக்கின்ற பாடல்களைச் சில ஆண்டுகளாகத் தியானம் செய்வான். கண், புருவம், இமை, நெற்றி, கன்னம், நாசி, இதழ் என்றிவ்வாறே முருகக்கடவுளின் உடலுறுப்புக்களைத் தனித்தனியாகவும், அவை யாவும் ஒன்ருய் இசைந்த திருக்கோலமாகவும் தியானிப்பான். அவனுடைய உள்ளம் முருகனது திரு அழகிலே இரண்டறக் கலக்கும். இங்ஙனம் தியானத்தில் மூழ்கிய சிற்பி உளியைக் கையில் எடுப்பான்; அவனறியாமலே உளி செதுக்கிச் செல்லும்; வெகு விரைவிற் சிலையிலே முருகனது திருமேனி உருவாகிவிடும்.

கோயில்களும் குகைகளும்

அக்காலத்துச் சிற்பிகள் தத்தம் வழிபடு தெய்வத்தின் சிலையுருவத்தைச் செய்வதிலேயே வாணளெல்லாஞ் செல

விட்டனர். நடராச விக்கிரகத்தைச் செய்து ஆன்மசாந்தியைத் தேடும் கலைவிநோதன் அக்கடவுளின் சிலையுருவைச் செய்தற்கண்ணே சொல்லவொணாத் திறமை வாய்ந்திருப்பான். அச்சிற்பிக்குப் பிற சிற்ப நுணுக்கங்களில் ஆற்றல் இருப்பினும் அவற்றுள் அவனது கருத்திறங்காது. இக்காரணம் பற்றியே, அந்நாட்களிற் கோயிற்றிருப்பணியில் பல சிற்பிகள் ஈடுபட்டு முனைந்து பணி ஆற்றலாயினர். இறைவனது அழகைத் தியானித்த சிற்பிகள் அவனது அழகிற்கே ஆலயமாய்ப் பல கோயில்களை அழகுக் கலைகளால் அழகாக எழுப்பிவிட்டனர்.

### சிற்பக் கலைக்குப் பேராதரவு

அக்காலத்தில் பாரத தேசத்தில் இருந்த மன்னர்கள் சிற்பிகளைக் கலை விநோதர்களாகப் போற்றி ஆதரித்து வந்தனர். சிற்பக் கலையில் தேர்ந்தவர்கள் வடமொழி தென்மொழிகளிற் புலமை வாய்ந்த புலவர்களாக விளங்கினர். அரசர்கள் அவர்க்குப் பொன்னும் நிலமும் வழங்கி, அவர்தம் பெண்டிரும் மக்களும் முட்டின்றி வாழ்ந்திருக்கச் செய்தனர். ஆதலால், சிற்பிகள் இல்லறத் தொல்லைகளின்றி முற்றத் துறந்த மாதவர்போல வாழ்ந்து, எல்லாம் வல்ல இறைவர்க்கமைந்த கோயில்களை எழுப்பி வைக்கும் திருப்பணியிலே வாணாளைக் கழித்துக் கழிபேருவகை எய்தினர்.

### சிற்பக் கலையின் சீரழிவு

இங்ஙனம் இருக்க, விக்கிரக வணக்கத்திற்கு மாறான சமயக்கொள்கைகளைக் கடைப்பிடித்தொழுகும் அயல்நாட்டினர் பாரத தேசத்திற் புகுவாராயினர். இவர்கள் மத வெறியால் சிற்பிகள் செய்த அழகிய படிமங்களை உடைத்துக் கோயில்களை இடித்தனர். சிற்பக் கலைஞரைக் குலமுறை தெரியாதவாறு கொன்று வேரறுக்கலாயினர்; சிற்ப சாத்திர ஏடுகளை எரித்தனர்; இடித்த கோயிற் கற்களால் தத்தம் மதக் கொள்கைகட் கமைந்தவாறு வெற்றித் தூண்களும், நினைவுக் குறிக்கான கட்டிடங்களும் எழுப்பலாயினர். பழைய நாகரிகநிலை குலைந்தது; படிமந்தாக்கிகளால்

பழைய கோயில்கள் தகர்ந்தன; தகர்த்தெறிய வொண்ணுத வாறு கல் மலைகளைக் குடைந்தாக்கிய குகைக் கோயில்களின் இடையே சிற்ப வல்லுநர் செதுக்கி வைத்திருந்த விக்கிரகங் களின் மூக்கை உடைத்தனர். கண்ணைக் குடைந்தனர்; காலை முறித்தனர். சிற்பிகள் எண்ணத் தொலையாத அழகை எண்ணி யெண்ணி அழகுருவாய்ச் செய்த அணி யார் கோயில்கள் பல படிமந் தாக்கிகளின் கொடிய கைகளால் தகர்ந்தனவாயினும், அவர்தம் கருங்கைக்கு அகப்படாது எஞ்சியவை இன்றளவும் நமது நாட்டிற் பல இடங்களில் அரும்பெருஞ் செல்வங்களாகத் திகழ்கின்றன. பகைவரது கைக்கு அகப்படாமல் தப்பியோடிய சிற்பிகள் கானகமே புகலிடமாய் வாழலாயினர். அரும்பெருஞ் செல்வமாகக் கருதிய சிற்ப நூல்களை முழைகளிலும் குகைக்கோயில்களி லும் மறைத்து வைத்துக் காத்து வரலாயினர்.

நம் நாட்டுச் சிற்பங்களின் பழமையும் பெருமையும்

கால வெள்ளம் கொள்ளை கொண்டவை போக, எஞ்சி யிருக்கும் பாரதநாட்டுச் சிற்ப ஓவியங்களில் சில கி. மு. மூன் ருவது நூற்ருண்டுக்கு முற்பட்டவை எனலாம். பெரும் பான்மைச் சிற்ப ஓவியங்கள் கி. மு. மூன்ருவது நூற்ருண் டுக்குப் பிற்பட்டவையேயாம். இங்ஙனம் எஞ்சி நின்ற சிற்ப ஓவியங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தவற்றைப் பிற நாட்டார் கொள்ளையிட்டும், களவாடியும், நயவஞ்சனையாக விலைக்கு வாங்கியும் கொண்டுபோய் விட்டனர். இங்ஙனம் கொண்டு போன சிற்ப ஓவியங்கள், இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காத்லாந்து, பாரிஸ், ஜெர்மனி முதலான நகரங்களில் உள்ள பல பொருட்காட்சிச் சாலைகளையும், பிரபுக்களின் மாளிகைகளையும் அழகு செய்யும் பொருள்களாக இன்றைக் கும் இருக்கின்றன.

அந்நிய நாட்டார் கவர்ந்து சென்றவை போக, படை யெடுத்து வந்த யவனர், சிந்தியர், ஹூணர் முதலிய சாதியாராலும், இஸ்லாமியர், பரங்கியர் முதலிய மேற்கு நாட்டினராலும், அழிந்துபோன சிற்ப ஓவியங்கள் பல. அன்றியும், சிற்ப ஓவியக் கலையை மதிக்கத் தெரியாத நமது

நாட்டினர்தம் புறக்கணிப்பால் பாழானவை பல. இவ்வாறு பல காரணங்களால் அழிந்தவை போக எஞ்சிய சிற்பங்களும், ஓவியங்களும், பாரதநாட்டின் சில பாகங்களில் அரிய பெரிய கருவூலங்களாக இன்றளவும் இருக்கின்றன. இவற்றுள் மண்மேடிட்டுப் புதைபடாமலும், அழியாமலும் எஞ்சிய குகைக் கோயில்கள் சில. இவற்றுள் உலகம் எங்கும் புகழ் பெற்று விளங்குவன மகாபலிபுரத்திலுள்ள பல்லவச் சிற்பங்கள், காரலிக் குகைகள், வாணபுரத் தீவின் சிற்பங்கள், தஞ்சைப் பெரிய கோவில், அஜாந்தா, எல்லோராக் குகைக் கோயில்கள், தாஜ்மஹால் முதலியனவாம்.

பாரத நாட்டுச் சிற்பக்கலையை விளக்க எத்தனை புத்தகங்கள் எழுதினும் போதாது. இவை கண்ணிற்கண்டு மகிழவேண்டிய அழகுகளேயாம்.

## ௧௦. சுவிட்சர்லந்து

[திரு. சோம. இலக்குமணச் செட்டியார்]

சுவிட்சர்லந்து என்று சொன்னவுடனே, இயற்கைக் காட்சிகள் பலரின் மனக்கண்ணெதிரில் தோன்றும்; நம் முதலமைச்சரின் வாழ்க்கைத் துணைவி கமலாநேரு உயிர் நீத்த நாடு என்ற நினைவு சிலருக்கு ஏற்படும்; கொந்தளிப்பான உலகில், அமைதிக்கு அடையாளமாக விளங்கும் சிறு நாடு என்று சிலர் அதனைக் கருதுவர். ஆனால், எல்லோருமே தாம் அணிந்திருப்பது சுவிஸ் நாட்டில் செய்யப்பெற்ற கடிகாரந்தானு என்பதைக் கவனிப்பார்கள்.

சுவிட்சர்லந்து பூலோக சுவர்க்கம் போன்றது, அந்த நாட்டில் அழகு நடமாடுகிறது; நீர்மட்டுமன்று, இலக்கிய மும் விஞ்ஞானமும்கூட அங்கே வெள்ளமாகப் பெருகியிருக் கின்றன.

### சுகாதாரம்

சுவிஸ் மக்கள் மிகத் தூய்மையானவர்கள்; அகத் தூய்மை மட்டுமன்று, புறத்தூய்மையையும் அவர்களிடம் மிகுதியாகக் காணலாம். உடலையும் உணவையும் சுற்றுப் புறங்களையும் சிறப்பாக வைத்திருப்பது அவர்களுக்கு உடன் பிறந்த குணம். 11,523 அடி உயரத்தில், உலகிலேயே உயர்ந்த மலை, ரயில் உள்ள ஜுவங் பிராவோச், மற்றும் கஸ்டாட், மாண்ட்ரீவக்ஸ், இண்டர்லேகன் போன்ற பல நல வாழ்விடங்களை இந் நாட்டினர் மிகவும் பேணி வருகின் றனர். சுவிஸ் மக்களுக்கு முதிர்ந்த வயதில் செலவுக்குப் பொருள் கிடைக்கவும், நோயைக் குணப்படுத்திக் கொள் ளவும் அந்த அரசியலார் திட்டங்கள் வகுத்துள்ளனர்.

உலகில் சிறந்த வைத்தியரில் பலர் சுவிஸ்காரர்கள்; சுவிஸ்காரருள் எழுவரில் ஒருவர் இத்தொழிலில் ஈடுபட் டுள்ளனர் அந்நாட்டுப் பல்கலைக் கழகங்கள் அனைத்துக்கும் பொதுவாக ஒரு துப்புரவு நிலையம் (Sanitorium) உண்டு. மிகச் சிக்கனமான செலவில் மாணவர்கள் உடல்நலம்

பெறுவதற்கான வாய்ப்புக்கள் இங்கே உண்டு. சிறுவர் சிறுமியரின் சுகாதாரத்தைப் பேணுவதற்காகக் குர்சால் என்னும் பொழுதுபோக்கு இடங்களை, இயற்கையழகு நிறைந்த இடங்களில், நகராண்மைக் கழகங்கள் நிருவகிக்கின்றன. கோடை மாதங்களில் கால் நடைகளையும், மலைப் பகுதிகளுக்கு அழைத்துச் செல்வது நான் சுவிட்சர் லந்தில் கண்டு வியந்தவற்றுள் ஒன்று. எனவே, சுவிஸ் மக்கள் சுகாதார மேம்பாடு அடைந்திருப்பது இயற்கையே; விளையாட்டுக்கு அவர்கள் கொடுக்கும் சிறப்பும் இத்தன்மையானதே.

விளையாட்டுகள்

சுவிஸ் நாடு முழுவதுமே ஒரு பெரிய விளையாட்டு மைதானமாக இருக்கிறது என்று கூறுவது பொருந்தும். பிரிட்டன், ஹாலந்து போன்ற சில நாட்டினர் உறைந்த பனிக்கட்டியின்மீது ஓடும் போட்டிப் பந்தயங்களை சுவிஸ் நாட்டில்தான் நடத்துகின்றனர். இதனால் இந்த நாட்டுக்கு "ஐரோப்பாவின் விளையாட்டு மைதானம்" எனப் பெயர் ஏற்பட்டுள்ளது. உறைந்த பனிக்கட்டியின்மீது ஹாக்கி விளையாடுவது, மலைமீது ஏறிச் செல்வது, மீன் பிடிப்பது, படகோட்டுவது, நீந்துவது, கோல்ப் (Golf) விளையாடுவது ஆகியவற்றிலும் இந் நாட்டினருக்கு விருப்பம் மிகுதியாக உண்டு. ஆனால், இவர்களுடைய தேசீய விளையாட்டு என்று சொல்லக்கூடியது துப்பாக்கியால் குறிபார்த்துச் சுடுவதாகும். இப்பயிற்சியில் இவர்கட்கு மிக்காரில்லை என்பதோடு ஒப்பாரும் இல்லை எனலாம். வில்லியம் டெல் என்ற சுவிஸ்காரர், தம் மகன் தலைமீது இருந்த ஓர் ஆப்பிள் பழத்தைப் பையனுக்குச் சிறிதும் காயமின்றி எய்த நிகழ்ச்சி பள்ளி மாணவர் அறிந்ததே. நம் நாட்டில் இராமாயண மகாபாரதக் கதைகள் போல, சுவிஸ் நாட்டில் "டெல்" லின் புகழ் தலைமுறை தலைமுறையாக வழங்கி வருகிறது. இந் நிகழ்ச்சி நட ்த இடத்தை வெளிநாட்டினருக்குக் காட்டுவதிலும் சுவிஸ் மக்கள் மகிழ்ச்சியடைகின்றனர். இவ்விளையாட்டுக்கான உலகப் போட்டிகளில், (ஓராண்டு நீங்கலாக)

முப்பது ஆண்டுகளாக ஒலிம்பிக் தங்கப் பரிசுகளை இந் நாட்டினரே பெற்றுள்ளனர். கி. பி. 1928 இல் பரிசு பெற்ற வர் ஷர்டாக் என்ற அமெரிக்கர்; அவருடைய பெற்றோர்கள் அமெரிக்காவுக்குச் சுவிஸ் நாட்டிலிருந்துதான் குடியேறிச் சென்றனராம்.

படை

சுவிட்சர்லந்தின் குதிரைப் படையும் காலாட் படையும் புகழ் பெற்றவை. ஆனால் காலாட்படை என்று நிரந்தரமாக அங்கே இல்லை. இதற்குக் காரணம் மக்கள் எல்லோருமே போர் வீரராக இருப்பதுதான். இருபதாம் வயதில் அந் நாட்டினர் எல்லோரும் நான்கு மாதகாலம் கட்டாயமாகப் படைப்பயிற்சி பெறவேண்டும். இதன் பிறகு அறுபது வயதுவரை ஆண்டுதோறும் மூன்று வாரங்களுக்குப் படையில் பணியாற்ற வேண்டும்; இந்தத் திட்டத்தின்படி நாட்டுக்கு அபாயம் நேரிட்டால் 72 மணி நேரத்தில், 9 லட்சம் போர்வீரரைத் திரட்ட இயலுமாம். போர்க்கருவி களும், உடையும் பயிற்சிக் காலத்தில் கொடுக்கப்படுகின்றன; மரணம்வரை இவை அவரவரைச் சேர்ந்தவை.

வியத்தகு நிகழ்ச்சிகள்

நிரந்தரப் படையின்றி யிருப்பது போல, வேறு பல விந்தைகளும் அந் நாட்டில் உண்டு. இவற்றில் ஒன்று, பெண்மக்களுக்கு இன்னும் வாக்குரிமை வழங்கப் படாமல் இருப்பதாம். இதனால், அங்கே பெண்பாலருக்கு உரிமை களோ, செல்வாக்கோ, சலுகைகளோ, சமூக வாழ்க்கையில் அவர்களுடைய நிலைகளோ குறைவானவை என்று கருதி விடக்கூடாது.

உலகிலேயே மிகப் பழமையான குடியரசு சுவிட்சர் லந்தே; 700 ஆண்டுகளாக அங்கே மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட ஒரு தலைவரையுடைய குடியாட்சி அரசியல் முறை செவ்வையாகவும் சிறப்பாகவும் நடந்து வருகிறது. ஐக்கிய நாடுகள் சபையில் சுவிஸ் நாடு ஓர் உறுப்பாகச் சேரலாமா கூடாதா என்பதும் அந்த நாட்டு மக்களின்

முடிவுக்கு விடப்பட்டது ; அச்சபையில் சேரக்கூடாது என்று அம்மக்கள் பொது வாக்கெடுப்பில் முடிவு செய்தனர்.

நாட்டின் நிருவாகம் பற்றிய எல்லா அதிகாரங்களும் பொது அரசியலாரிடமே இருக்கவேண்டும் என்ற கருத்து சுவிட்சர்லந்தில் கிடையாது. மிகுதியான அதிகாரங்களைக் காண்டன் என்னும் இராச்சிய அரசியலாரே செலுத்துகின்றனர். நாட்டின் எல்லாப் பகுதியினருக்கும் திருப்தியாக, அரசியல் தலைநகராகப் பெர்ன் (Berne) நகரும், நீதிமன்றங்களுக்கு லாசேன் (Laussane) நகரும், பொருளாதாரத் துறைக்குச் சூரிக் (Zurich) நகரும், அயல்நாட்டு விவகாரங்களுக்கு ஜினிவா நகரும், வணிக வாயிலாகப் பால் (Basle) நகரும், கடிகாரத் தொழிலின் தலைநகராகப் பியன் நகரும் அமைந்திருக்கின்றன.

போரில் ஈடுபடாததாலும், போரிட்ட நாடுகளுக்குப் பொருள்களை விற்று ஊதியம் அடைந்ததாலும் சுவிஸ் நாடு பொருளாதாரத் துறையில் நன்னிலையில் இருக்கிறது ; இந்த நாட்டிலேயே அமெரிக்கரும் மற்றவர்களும் தங்களுடைய சேமிப்புக்களை முதலீடு செய்துள்ளனர்.

சுவிஸ் மக்களுள் பிரெஞ்சு, ஜெர்மன், இத்தாலிய இனங்களைச் சேர்ந்தவர் உண்டு. அந்த நாடுகள் ஒன்றோடொன்று போர் புரிந்த போதுங்கூட பிரெஞ்சு சுவிஸ்காரர்களும், ஜெர்மன் சுவிஸ்காரர்களும் இரண்டறக் கலந்து வாழ்வது வேறுநாட்டில் காண இயலாததோர் அரிய நிகழ்ச்சி. பல வேற்றுமைகளுக்கிடையே நிலவும் இந்த ஐக்கிய மனப்பான்மைதான் சுவிஸ் நாட்டின்—ஏன், எந்த நாட்டுக்கும் மதிப்பிட முடியாத செல்வம்.

ஒரே கிறிஸ்துவ ஆலயத்தில் கத்தோலிக்கரும் சற்று நேரத்திற்குப் பின்னர்ப் பிராடஸ்டண்டுகளும் இறைவனை வழிபடுவது சுவிட்சர்லந்து தவிர வேறு எங்கும் நிகழாத தொன்று.

சுவிஸ் என்று ஒரு மொழி கிடையாது. சுவிஸ் என்ற பெயரோடு தனித்த மொழி ஒன்று இருப்பதாக நம் நாட்டில் சிலர் நினைப்பது இந்தியன் என்று ஒரு மொழி இருப்ப

தாயும், அதையே எல்லா இந்தியரும் பேசுவதாயும், வெளி நாடுகளில் சிலர் தவருகக் கருதுவதைப் போன்றதாகும். ஜெர்மன், பிரஞ்சு, இத்தாலியன், ரொமான்ச் ஆகிய மொழி களை முறையே சுவிஸ் மக்களில் 72, 20, 5, 1 சதவீதத்தினர் பேசுகின்றனர். இந் நான்குமே அரசியலார் மொழிகளாக உள்ளன. சட்டசபையில் இந்த மொழிகளில், எதை வேண்டுமானுலும் உறுப்பினர் பேசுவதைக் கண்டு இன் புற்றேன்; நீதி மன்றங்களிலும் இக் காட்சிகளைக் காண இயலுமென்று அன்பர்கள் தெரிவித்தனர். ஜெர்மன் சுவிஸ் வழக்கறிஞர் ஜெர்மன் மொழியில் எழுதும் நிருபத்திற்குப் பிரெஞ்சுச் சுவிஸ் வழக்கறிஞர் பிரெஞ்சு மொழியில் பதில் அனுப்புவதும், இருவரும் தாமே பிறர் உதவியின்றி அச் செய்திகளை அறிந்து கொள்வதும் சுவிட்சர்லந்தில் நாள் தோறும் நிகழும் வியத்தகு நிகழ்ச்சிகளில் ஒன்று.

சுவிட்சர்லந்து தொலைபேச்சுக் (Telephone) கம்பெனி யார் அவ்வப்போது, நேரத்தைத் தெரிவிப்பதற்காக, அறி விப்பாளர் பேசுவதைப்போல, மணி, நிமிஷம், விஞடி இவற்றைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருப்பதற்கு ஒலிப்பதிவு செய்த சுருள்களை வைத்திருக்கின்றனர். எப் போது, யார், நேரம் என்ன? என்று கேட்டாலும், அந்த இயந்திர மனிதர் உடனுக்குடன் நேரத்தைச் சொல்லுகிருர்.

## மக்களின் பண்பாடும் குணங்களும்

சுவிஸ் மக்கள் மிகவும் வேகமாக எந்தக் காரியத்தையும் செய்கின்றனர். வாடகைக் கார்கள்கூட அந்த நாட்டில் மணிக்கு 100 கிலோமீட்டர், அதாவது 65 மைல் வேகத்தில் செல்லுகின்றன. தந்தி, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட கடிதம் ஆகியவற்றை அனுப்ப நேரமாகிவிடும் என்பதற்காக, அவர்கள் ரசீது கொடுப்பதில்லை. தனிக் கட்டணம் கட்டி, ரசீது கேட்பவர்களுக்குமட்டுமே அதைக் கொடுப்பது வழக்கம். ஆனுல், ரசீது பெற்றுக்கொண்டாலும், பெற்றுக் கொள்ளாவிட்டாலும் தந்தி, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட தபால்கள் உறுதியாக உரியவர்க்குக் கிடைத்துவிடும். என்னே, அவர்களுடைய நாணயம். சுணக்கமின்றித்

தபால்களை அனுப்புவதற்கு உதவியாக, எல்லா ஊர்களிலும் ரயில் நிலையத்துக்கு எதிரிலேயே தபால் நிலையத்தை அமைத்திருப்பதும் அந்த நாட்டில் மற்றொரு சிறப்பு.

1945இல் ஜப்பானியர் சரணடைவதாகச் சுவிஸ் அரசியலாரிடம் தெரிவித்தபோது, அச்செய்தியைப் பதினொரு நிமிடங்களில், அவர்கள் அமெரிக்க அரசியலாருக்கு அனுப்பிப் போரை நிறுத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்தனராம். எனது டைப்ரைட்டர் கருவியில் சில எழுத்துக்களை ஒரு சுவிஸ்காரர் ஐந்து நிமிடங்களில் மாற்றிக் கொடுத்தார்.

அங்கே அலுவலகங்கள் அனைத்தும் முற்பகல் 8 மணிக்கே வேலை தொடங்கிவிடுகின்றன; கடைகள் பெரும்பாலும் முற்பகலில் 8 முதல் 12 வரையும், பிற்பகலில் 2 முதல் 6-30 வரையும் திறந்திருக்கின்றன. தொழிலாளர் சனிக்கிழமைகளிலும் மற்ற நாட்களைப் போலவே, நாள் முழுவதும் வேலைசெய்கின்றனர்; ஏனைய நாடுகளைப் போலவே, அங்கேயும் ஞாயிறு விடுமுறை நாளாகும்.

தமிழ் மக்களைப் போலவே, சுவிஸ் மக்களும், ஒரு சிறு பகுதி நீங்கலாக, அனைவரும் கிராமங்களில் வாழ்கின்றனர். கற்பனை, நகைச்சுவையுணர்ச்சி, விருந்தினரை ஓம்புதல், இசைஞானம், கலைப்பற்று முதலிய பண்பாடுகளை அவர்களிடமும் கண்டேன். மேலும், பண்டைத் தமிழரைப் போலவே, இன்றைய சுவிஸ் மக்கள் சிறபக்கலையில் பேரார்வமுடையவர்களாக விருப்பது குறிப்பிடத் தக்கது

சிறிய குடும்பமே வாழ்க்கையை இன்பமயமாக்கும் என்ற அடிப்படை இரகசியத்தைச் சுவிஸ் மக்கள் உணர்ந்திருக்கின்றனர். ஒரு சுவிஸ் அன்பர் மற்றொருவரைப்பற்றிக் குறிப்பிடும்போது, "அவர் குடும்பம் பெரியது," என்றார்; "எத்தனை குழந்தைகள் ?" என்று யான் ஆவலோடு கேட்க, "மூன்று" என்று அவர் குறிப்பிட்டார்; "இது பெரிய குடும்பமா?" என்று யான் மேலும் கேட்டபோது, "இரண்டு குழந்தைகள் இருப்பதே சுவிட்சர்லந்தில் அரிது" என்று அந்த அன்பர் பதிலளித்தார்.

## ௧௦. கண்மூரக்கோப் பெருநள்ளி

[திரு. சிவ. குப்புசாமி பிள்ளை]

### இயல் - ௩

#### காட்சி - ௧

**உறுப்பினர்:** *இளஞ்சேய், வன்பரணர், இளநங்கை, கண்மூரக்கோப் பெருநள்ளி.*

**இடம்:** *நடுக்காடு.*

**காலம்:** *வேனில் நடுப்பகல்.*

*[வறுமையுற்றுத் தம்மவருடன் கான்போந்த வன்பரணன், நள்ளியால் போற்றப்பெறுதல்.]*

**இளநங்கை:** (*மிகுந்த சோர்வுடன்*) தந்தாய்! நாம் போகுமிடம் சேர இன்னும் எவ்வளவு தொலைவு நடக்க வேண்டும்? விடிந்தது முதல் பதினைந்து நாழிகைக்கு மேல் இதுவரையிலாகியும் தாங்கள் இன்னும் எங்களைக் கால்கடுக்க நடக்க விடலாமா? அண்ணல்! நெருநல் பகற்பொழுதில் உணவு கொண்ட எங்கட்கு, இன்று பகல்வேளை பாதி கழிந்தும், கால்வயிற்றுக் கஞ்சி கிடைக்கும் வழிகூடக் கிட்டவில்லையே? எனது வயிறு மிகவும் வாடிக் குழைகின்றது: கால்கள் நடுங்குகின்றன; காதுகள் அடைக்கின்றன; கண்களோ, மயக்கம் மேலிட இருளுகின்றன. அம்மம்ம! இனி என்னால் காலெடுத்துவைக்க முடியவே முடியாது.

*[துவண்டு நிற்றல்.]*

**வன்பரணர்:** இளநங்காய்! என் கண்ணே, சிறுபொழுது தாங்கிக்கொள்; கலங்கவேண்டாம். என் செய்வது? இதோ வந்துவிட்டோம். விரைவில், நாம் சேரும் இடத்தையும் அடைவோம். (*கவலையுடன்*)ஆ, இறைவ! எனது அறிவின்றிறனை யுணரவியலா வேற்றுநாடு சென்றமையாலன்றோ, இன்று, யான், இத்துணைத் துயரமும் எய்தலாயினேன். என் கைப்பொருள்களும் செலவழிந்தன; வயிற்றுப்பசி நீங்கச் சிறுவுணவு பெறுதற்கும் இங்கு வழியில்லை............என் மகளே! எவ்வா

ருயினும் நின் துன்பத்தைத் தாங்கிக்கொண்டு வருக. இன்னும் சின்னேரத்துள் நாமனைவரும் நள்ளியின் நல் விருந்தினரா யமையலாம்.

**இளஞ்சேய் :** அண்ணல், அண்ணல்! நான் கூறுவதைக் கேட்டருள்க: என்னை நோக்குங்கள். எனக்குக் களைப்பு மிகுதியாகின்றது. என் முகத்தைக் கேட்டாலும் அஃதுரைக்குமே. ஐயகோ! எனக்கு நா வறட்சி எடுக்கின்றது; என் உடம்பும் களைப்பு மிகுதியால் நைந்து வருகின்றது. எனது வயிற்றை நோக்குங்கள்; பசியினால் அஃது எப்படிக் குழைகின்றதெனத் தெரியுமே. எனக்கு நெஞ்சு படபடக்கின்றது; கைகால்களிலுள்ள நரம்புகள் தசைகளை வலித்து இழுக்கின்றன; தந்தாய்! என்னால் மூச்சுவிடக்கூட இயலவில்லை; இதோ, கீழே சாய்வேன்போலுள்ளேன்; ஓரடியும் எடுத்துவைக்க வலிமையும் எனக்கில்லை, ஆ! என் செய்வேன்.

*[தளர்ந்து கீழிருத்தல்.]*

**வன்பரணர் :** அந்தோ! யான் என்செய்வேன்? எனக்குற்ற இத்துன்பத்தினை எவர்பாற் சென்று கூறுவேன்? ஆ, கடவுளே! எனக்கிவ்வாறு வரலாகுமா? பரிசில்கள் பல பெற்று வரிசைகள் மிக, யான் வாழ்ந்த அந்நாளில், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக, வளனும் நலனும் பொருந்த வாழ்வுடன் கூடி மகிழ்ந்த என் செல்வ மக்கள், இன்று, இந்நடுக்கானில், வயிற்றுப் பசியால் வாடி, நடக்கவும் நிற்கவும் இயலாமல் நைந்து குழையுமாறு, என்னை இடர்ப்படுத்தல் நன்றோ! எளியவர்க்கிரங்கும் இன்னருட்செல்வமே! 'வறியார்க் கொன் றீவதே யீகை' எனும் முதுமொழி இன்று பொய்த்ததோ? எட்டுணைச் சார்புமின்றி வறுமையின் எல்லையுற்று வாடி வருந்தும் எம்பாலன்றோ நின்னருட் பெருக்குச் சுரக்கவேண்டும்! அஃதவ்வாறில்லா திருத்தல் என்னை?....ஆம், ஆம். எய்தவனிருக்க அம்பை நோவதால் ஆவது என்? என் ஊழ்வலியே என்னைக் கொடுமைக்காளாக்கியது போலும்! நன்று....என் செல்

வங்காள், வருந்தற்க. இங்ஙன் நீவிர் அமர்க; சற்று அலுப்பு நீங்கியதும் நாம் செல்வோம்

*[யாவரும் இருத்தல்.]*

*[அப்பொழுது பெருநள்ளி அங்கு வர, வன்பரணர் அவனைக் கண்டு எழுதல்.]*

**கண்டீரக்கோப் பெருநள்ளி:** பெரும, எழுதல் வேண்டாம். அப்படியே வீற்றிருங்கள். அந்தோ, மிகவும் இளைத்துள்ளீர்களே. நெடுந் தொலைவிலிருந்து வந்திருக்கின்றீர்கள்போலும். மிகுந்த வாட்டமும் களைப்புக் குறியும் நும்பால் தோன்றுகின்றன. மலர் முகம் பெற்ற இவ்விளைய மக்களும் மிகவும் சோர்வுற்றுப் பசித்துள்ளனர்போல் காணப்படுகின்றனர். இடையீடின்றி, நும் உயிர் வாடாது, விரைவினில், இன்னே வேண்டுவன புரிவேன்; (சூழ நோக்குதல்) யாண்டோ போயுள்ளனர் வழி தப்பி, என் துணைவர்கள்: எனினும் இங்கு இடர்ப்பாடின்று. ஒரு நொடிப்பொழுது பொறுத்தருள்க. (*தீ யெழுப்பி உணவு அடுதல்*) பெரும! இவ்வுணவு மிக்க சுவை பொருந்தியது; மென்மையும் கொழுமையும் மிக்கதாயிருப்பதால் நும் களையை உடனே போக்கும். இதனை நும் மக்களுடன் உண்டு பசிப்பிணியை ஒருவாறு நீக்குக.

*[புலவர், தமருடன் உண்டு, அருவி நீர் அருந்தல்.]*

**வன்பரணர்:** ஆண்தகையே! களைகணின்றி வாடிய எம்மை, இக்கடிய கானில் வலியவந்து காத்து, உணவளித்து மகிழ்ந்த நினது இச்செயல், எம் அன்புகெழுமிய உள்ளத்தை நின்பால் என்றும் வணங்கச் செய்வித்தது. நின் அருட்செயலால் யாங்கள் எம்மை வாட்டிய பசி தவிர்ந்தோம். எம் உயிர் இன்பத்தில் திளைக்கப் பெற்றேம். அருட்செல்வ! நினக்கு, என்றும் குன்றா வாழ்வும் பெருநலனும் ஓங்கிப் பெருகுக! அன்புடையோய்! வணக்கம்; சென்று வருகின்றேம், (*கைகூப்பி*) விடையளிப்பாயாக.

**கண்டீரக்கோப் பெருநள்ளி:** புலவர்பெரும! இதுபோது, யான் இக்காட்டினிடமாக இருக்கின்றேன். ஆகையால் விரைவினிற் போந்து, தங்களது வறுமை நீங்குமாறு,

பெறுதற்கரிய பெருமைமிக்க அணிகலன் கொடுத்தற்கு இவ்விடத்தில் என்னிடம் வேறொன்றுமின்று. எனினும் (*முத்துமாலை, கடகம் இவற்றைக் கழற்றி வழங்கி*) இவற்றைப் பெற்று மகிழ்ந்து, செல்க.

**வன்பரணர் :** (*வியப்புடன் பெற்று*) எம் வறுமை நோய் களைய, உளம்பற்றிய வள்ளால்! கொடைப் பெருங் குன்றே! யான் நின்னைப்பற்றிக் கேட்பதற்காக வெகுளாது, எம்மைப் பொறுத்தருள்க. அன்ப, நீவிர் யாவிர்? எளியேன் நும் பெயரும் உறைவிடமும் அறியலாகுமா?

**கண்டீரக்கோப் பெருநள்ளி :** (*புன்னகை பூத்து*) சான்றோய்! அவற்றை அறிவதால் நுமக்காவதென்னை? யான் இன்று கொடுத்தனகொண்டு, இனிதே நும் மக்களுடன் கவலையின்றி வாழுமின். யான் சென்று வருகின்றேன்.

[*சென்று மறைதல்.*]

**வன்பரணர் :** ஈதென்ன விந்தை! பெயரும் கூறுது, ஊரும் நவிலாது, பெறுதற்கரிய பெரும் பொருளைத் தந்து, எம்மைப்பற்றி எதுவும் உசாவி யுணராது செல்லுகின்ற இப்பெருமகன் யாவனோ?....முழுமுதற் றலைவ, எம்குறை தவிர் முருக! இதுவும் நினது விளையாட்டுப் போலும்.

[*கை கூப்பித் தொழுதல்.*]

(*காட்சி முடிவு*)

காட்சி உ

**உறுப்பினர் :** *மாடலன் (ஒரு காவலன்;) வன்பரணர்; இளநங்கை.*

**இடம் :** *நடுக்காடு.*

**காலம் :** *மாலைப்பொழுது.*

[*கண்டீரக்கோப் பெருநள்ளியே தமக்கருளினன் எனக் காவலனலறிந்து வன்பரணர் மகிழ்தல்.*]

**மாடலன் :** (*மிகுந்த சோர்வுற நின்று*) அடேயப்பா; என்ன பாய்ச்சல், என்ன வோட்டம்! மூச்சுத் திக்கு முக்காடி விட்டது. என் வாணளில் இன்று வெருண்டு

ஓடியது போல என்றும் யான் ஓடியதே யில்லை. எம் தோட்டிமலை நாடு இன்று வரையில் எத்தனையோ வீரர்களைப் பெற்றது: அவ் வீரருள் ஒரு சிலர் உளத்தினுல் மறக்கவியலாத அத்துணைப் பெரிய செயல்களையெல்லாம் மிக எளிதில் முடிப்பார்கள் என்று கூறுவர்; அச் சிலருள் ஒரு திறத்தவர்க்கு 'வில்லி' முதலிய சிறப்புப் பெயர்களும் வழங்கி வந்துள்ளன; எனினும், அவரனைவரும் எம்பெருமாற்கு ஈடாகார்; வில்திறன் பெற்ற எம் நள்ளியையொத்த வில்லியை, எவரும் அறிந்திரார் என்பது திண்ணம்....

வன்பரணர்: ஐயா, ஐயா!

மாடலன்: (திரும்பி நோக்காது) மிக விரைந்து செல்வது குதிரை என்பர்; பாய்ந்தோடித் தாவிச் செல்வதில் வன்மையுற்றது மான், என எவர்க்கும் தெரியும். இவையாவும் எம்பெருமான் நள்ளியின் ஓட்டத்தினை யும் தாவிப் பாயும் விரைந்த செலவையும் கண்டன வாயின், அம்மம்ம! தம் சிறுமைக்கு வெட்கி, ஆண்டே தலைகுனிந்து நாணுறும் என்பது திண்ணம்....

வன்பரணர்: இளநங்காய்! இவன் நள்ளியின் காவலன் போற் காணப்படுகிருன். மறுபடியும் நான் அழைக் கின்றேன். ஐயா! காவல!

மாடலன்: (வேறுதிசை நோக்கி) ஆம், ஆம். அப்படித் தான் தோன்றுகிறது. நன்று; ஆனல்....மானைப் பின் தொடர்ந்து சென்றவர், யாண்டுதான் செல்லக்கூடும்? ஒருகால், நாம் சென்றவழி தெரியாது, நகர் நோக்கித் திரும்பினரோ? அன்றி எங்களைத் தேடி யலைகின் ருரோ? இதற்கென் செய்வது? பொழுதும் போகத் தலைபடுகின்றது; புள்ளினங்களும் தத்தம் பெடை யோடு இருக்கை யடைகின்றன. கங்குற் பறவையாம் ஆந்தையும் கிளைகூட்டி அலறுகின்றது. என்னே? மாலைப்போது வந்துற்றும் மான்பின் சென்றவரது வரவு கிட்டவில்லையே. "தேடிப் பார்க்கின்ருேம்" எனச் சொல்லிப்போன அந்த எயினனும் காடனும்

கூட, நான் தனித்திருப்பேன் என்றுணர்ந்திருந்தும் இன்னும் திரும்பவில்லையே. நான் எங்குச் செல்வது!

இளநங்கை: அண்ணல், நானழைக்கிறேன். நீங்கள் மறுபடி கூப்பிட்டாலும் அஃதவன் காதில் விழாது. ஐயா! (மிக எழுப்பிய குரலில்) ஏ ஏ, ஐயா!

[கையைத் தட்டல்]

மாடலன்: (விரைவில் திரும்பி) யாரது? நீவிர் யாவிர்? இங்கு ஏன் வந்தீர்? எப்படி வந்தீர்?

வன்பரணர்: கானவ! யான் ஒரு தமிழ்ப் புலவன்; கிழக்கு நாட்டினன்; என்னேடு இவணுள்ள இவர், என் குடும்பத்தவராகும். ஐயா! யாங்கள் மிகுந்த தொலைவிலிருந்து வருகின்றேமாதலால் எம் கைப்பொருள்கள் யாவுங் கழிந்தன: மிக்க வறியநிலையில் நல்லுணர்வற்று, மாசு மடிந்த இவ்வாடையோடு இக் கான் வந்தடைந்தோம். ஈண்டு, எங்களைப் பசிப்பிணி மிகவும் வருத்தலுற்றது. உணவு பெறும் வகையோ எங்கட்குத் தெரிந்திலது. பசி நோயால் வாடிக் களைப்புற்று, மயங்கி, யாது செய்வதென வுணராது, நெட்டுயிர்ப்புக்கொண்டு, ஒரு பலாமரத்தின் நீழலிற் றங்கியிருந்தபோது எங்கட் குற்றதனை என்னென் றியம்புவேம்?

மாடலன்: என்னை? புலவரே! நும்மை எவரேனும் துன்புறுத்தினரோ? அன்றிக் கொடிய விலங்குகளால் அச்சுறுத்தப் பெற்றீரோ? இனிக் கவலை கொள்ளாது என்பாற் கூறுமின், வேண்டுவன இன்னே ஆற்றுவேன்.

வன்பரணர்: இனிய காவல! அவ்வாறு எங்கட்குத் துன்பம் நேர்ந்திலது; இன்பமே விளைந்தது.

மாடலன்: ஆ! அப்படியா! நன்று. பின்னர் என் நிகழ்ந்தது?

வன்பரணர்: அன்பே! நாங்கள் பலாவின் நீழலில் பரிவுற்றிருந்தபோது, ஓர் ஆண்டகை, வேடுவன் போலுள்ளார், எம்மை மகிழ்வுடன் அணுகினர்; நாங்கள்

இருந்த நிலையினைக் கண்டு பெரிதும் வருந்தி யிரங்கினார்; தம்முடனிருந்த பச்சையுணவுப் பொருளைத் தம்முடைய கைகளினாலேயே, தீயெழுப்பிச் சுட்டுச் சுவையுள்ள உணவாக்கி எங்குட்குத் தந்தார். யாங்கள் அவற்றை யுண்டுமகிழ்ந்ததும், எம்மிடத்துச் சில அணி கலன்களைப் பரிசிற் பொருளாக அளித்து, 'நீவிர் செல்க' என எம்மை விடுத்தார். யான் மிகவேண்டியும் ஊர் பெயர் முதலிய எவையுங் கூறாது எம்மினின்றும் விரைவாக நீங்கிக் கிழக்குத்திசை நோக்கிச் சென்று விட்டார். ஐயா! நீவிர், அவர் யாவர் என எமக்கு விளம்பலாகுமா ?

**மாடலன் :** பெரும! அவரே எம் தலைவர் : இத் தோட்டிமலை நாடாளும் மன்னவர்; வரையாது வழங்கும் வள்ளல்— கண்டீரக்கோப்பெருநள்ளியென எவரும் புகழ்ந்து கூறும் ஏந்தல். அவரைத் தேடியே யான் இந்நேரமளவும் ஈண்டுக் காத்திருந்தேன். இதற்குள்ளாக, எம்பெருமானும் ஊரை நண்ணியிருப்பினும் இருப்பர். யான் விரைந்து செல்லல்வேண்டும்; பொறுத்தருள்க. புலவர் பெரும! யான் சென்றுவருகின்றேன்...ஆனால் ஒன்று ஐய! தங்கள் பெயர் என்னவோ?

**வன்பரணர் :** காவல! 'வன்பரணன்' என்பது என் பெயராகும்.

**மாடலன் :** நன்று, பெரியோய்! வணக்கம். விடை பெறுகின்றேன்.

*[கைதொழுது மாடலன் மறைய, புலவர் அசைவற்று நிற்றல்.]*

(காட்சி முடிவு)

# கக. மின்னலும் இடியும்

[திரு. என். கே. வேலன், பி. ஏ.]

'மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை' என்னும் பழமொழி ஒன்று வழங்கி வருகின்றது. மின்னலுக்கும் மழைக்கும் அல்லது மேகத்திற்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்பது ஈண்டு ஆராயப்படும். வானத்திற் கரிய மேகங்களின் இடையே பளிச்சுப் பளிச்சென்று மின்னல் தோன்றிக் கண்ணைப் பறிக்கின்றது. கண்ணை மூடித் திறப்ப தற்குள் வானமும் நிலமும் கிடுகிடுக்கும் வண்ணம் இடி யோசை கேட்கின்றது. சில வேளைகளில் மின்னல் தோன்றி மறைந்தவுடன் மரங்கள் ஒடிந்து சாய்வதையும் கரிந்து போவதையும் காணலாம். இடியினுல் ஆடுமாடுகளுக்கும் ஏனைய உயிர்களுக்கும் சேதம் ஏற்படுவதும் உண்டு.

மின்னல் இடி இவற்றின் தன்மைகளை நன்கு ஆராய்ச்சி செய்வதற்கு முன்னர் மக்கள் இவ் வியத்தகு நிகழ்ச்சிகளைப் பற்றிப் பலவேறு கதைகளைக் கட்டியிருந்தனர். மின்னற் கொடி என்னும் தேவ அணங்கினை இடி என்னும் அசுரன் துரத்திச் செல்வதாகச் சிலர் எண்ணி இருந்தனர். மற்றும் சிலர் மேகங்களை இந்திரன் வருணன் முதலிய தேவர்களின் ஊர்திகளென்றும், மின்னல்கள் அவர்கள் வீசி யெறியும் வாள்களென்றும் கூறிப் போந்தனர். மேகங்களுக்கு அரச னை இந்திரனுக்குப் பிள்ளையெனக் கூறப்படும் அருச்சுன னுடைய பெயரைச் சொன்னுல் இடி நிலத்தில் விழாதெனச் சிலர் நம்பி வந்தனர். இதனுலேதான் இடி இடிக்கும் பொழுது 'அருச்சுனு அருச்சுனு' என்று சொல்வது இன்னும் சில இடங்களில் வழக்கமாக இருக்கின்றது.

மின்னல், இடி இவற்றின் தன்மைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர் பெஞ்சமின் பிராங்க்ளின் (Benjamin Franklin) என்னும் அமெரிக்க நாட்டு அறிஞர். மின்சாரக் கருவியில் உண்டாகும் நீளமான சுடர்கள் எல்லா வகையி லும் மின்னலை ஒத்திருப்பதை அவர் கண்டார். மின்னல்

என்பது மிகப் பெரிய மின்சாரச் சுடராக இருக்கலாம் என்பது அவருக்குத் தோன்றிற்று.

மின்சாரச் சுடர் நேராய்ப் பாய்வதில்லை. அது நெளிந்து நெளிந்து ஓடும். மின்னலும் இங்ஙனமே பாய்கின்றது. கூரிய முனையுடைய பொருள்கள் மின் ஆற்றலைத் தம்மிடம் இழுக்கின்றன. இங்ஙனமே மின்னலும் மலை, மரம், கோபுரம், புகைபோக்கி இவற்றின் உச்சிகளைத் தாக்குகின்றது.

தனது ஆற்றலை எளிதில் கடத்தும் பொருள்களையே மின்சாரம் தேடிச் செல்கின்றது. மின்சாரம் போதிய ஆற்றலுடையதாக இருந்தால் உயிர்களைக் கொன்றுவிடும். மின்னலும் ஆடுமாடு முதலிய உயிர்களைக் கொல்லுந் தன்மையதாக இருக்கின்றது. மின்சாரச் சுடரில் சடசட வென்னும் ஓசையுண்டாகும். மின்னல் தோன்றும்போது உண்டாகும் இடியோசையும் இதைப் போன்றதே. மின்னலும் இடியோசையும் ஒரே இடத்தில் தோன்றினாலும் மின்னலின் ஒளியை முதலில் காணுகின்றோம். சற்றுப் பின்னரே இடியோசை நமக்குக் கேட்கின்றது. ஒலி அலைகளை விட வெளிச்சம் விரைந்து செல்லும் தன்மையுடையது. இதனாலேதான் மின்னலின் ஒளி இடியோசைக்கு முன் விரைந்து வந்து நம்மைச் சேர்கின்றது.

மேகங்களில் மின் ஆற்றல் நிறைந்திருக்க வேண்டுமென்றும் இல்லையேல் அவற்றின் இடையில் மின்னல் தோன்றுவதற்கு வழியில்லை என்றும் பெஞ்சமினுக்குத் தோன்றியது. இவர் மேகங்களிலுள்ள மின் ஆற்றலைக் கீழே இறக்குவதற்குப் பல வழிகளைத் தேடினார். முடிவில் ஒரு காற்றாடியைப் பறக்கவிட்டு அதன் வழியாக மின்னலைப் பூமிக்குக் கொண்டுவர இவர் முயன்றார்; பட்டுத் துணியினால் ஒரு காற்றாடி செய்து அதில் கூர்மையான இரும்புக் கம்பி ஒன்றை வைத்துப் பொருத்தினார். இக் காற்றாடியைச் சணற் கயிற்றால் கட்டி மின்னலும் இடியும் தோன்றும் வேளை பார்த்து உயரத்தில் பறக்க விட்டார்; சணற் கயிற்றின் மற்றொரு முனையில் இரும்புச் சாவி ஒன்றைக் கோத்தார்; மின்

ஆற்றல் பூமியில் ஒழுகிவிடாது இருக்கும்பொருட்டுச் சணற் கயிற்றில் ஒரு பட்டு நாடாவைக் கட்டி அதனைப் பிடித்துக் கொண்டார். ஏனெனில் பட்டுத் துணியில் மின் ஆற்றல் எளிதிற் பாய்வதில்லை. காற்றாடியின் அருகில் ஒரு மேகம் வந்தது. உடனே அதன் வாலும் கயிறும் விறைத்து நின்றன. பெஞ்சமின் ஒரு கையில் பட்டு நாடாவைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையை இருப்புச் சாவியின் அருகில் கொண்டு போனார். சாவியிலிருந்து மின் ஆற்றல் சுருக்கென்று அவர் கையில் பாய்ந்தது. ஆகவே மேகத்தில் மின் ஆற்றல் நிறைந்திருப்பது உறுதியாயிற்று. மின்னலும் மின்சாரச் சுடரும் ஒரே தன்மையுடையன என்பது இதனால் விளங்கும்.

மின்னலின் சுடர் மேகத்திலிருந்து நிலத்திற் பாய்ந்தால், அதனையே இடிவிழுந்தது எனக் கூறுகின்றோம். இது மரத்தின்மேல் பாய்ந்தால் மரம் பட்டுப் போகும். கட்டடங்கள்மீது விழுந்தால் அவை இடிந்துபோம். பொருள்களை இடிப்பதால் இதனை இடி என்று சொல்லுகிறோம். உயிர்களின்மேல் விழுந்தால் அவ்வுயிர்கள் இறந்துபடுகின்றன. இங்ஙனம் விழும் இடி தனித்து நிற்கும் பொருள்களையே நாடிச் செல்கின்றது. அடர்ந்த காடுகளையும், நெருக்கமாய்க் கட்டப்பட்ட கட்டடங்களையும் இடி தாக்குவதில்லை. மின்னல் உண்டாவதற்கு நேர் மின்சாரம் (Positive Electricity) எதிர் மின்சாரம் (Negative Electricity) என்னும் இருவகை மின்சாரம் வேண்டும். மின்சார அழுத்தம் மிகுதியாக இருந்தால் மட்டுமே மின்சாரம் வெள்ளம்போலப் பாயும். அடர்ந்த காடுகளில் ஆயிரக்கணக்கான மரங்கள் இருப்பதால் மேகத்திலுள்ள மின் ஆற்றல் ஒவ்வொரு மரத்தின் வழியாகவும் சிறிது சிறிதாக ஒழுகி நிலத்திற்போய்ச் சேர்ந்து விடுகின்றது. வீடுகள் நெருங்கிய பட்டணங்களிலும் இங்ஙனமே நேர்கின்றது. தனித்த கோபுரங்களையும், தனித்த மரங்களையுமே மின்னல் தேடிச்சென்று அழிக்கின்றது.

கட்டடங்களின்மேல் இடி விழாமல் பாதுகாப்பதற்கு 'இடிதாங்கிகள்' உதவுகின்றன. செம்பினாலாகிய கம்பி அல்லது பட்டையை இடிதாங்கி எனக் கூறுவர். இக் கம்பியின்

ஒரு முனை கட்டடத்திற்குமேல் கூர்மையாக நீட்டிக்கொண்டிருக்கும். கம்பியைச் சுவரின் வெளிப்புறமாகக் கீழே இறக்கி அதன் மற்றொரு முனையைத் தரையில் ஆழமாகப் புதைத்துவிட வேண்டும். இக் கம்பி தன் கூரிய முனையின் வழியாய் மின் ஆற்றலைச் சிறிது சிறிதாய் இழுத்து அதன் அழுத்தத்தைக் குறைத்துவிடும். இதனால் அக் கட்டடத்தில் மின்னல் பாய்வதில்லை. அப்படிப் பாய்ந்தாலும் மின் ஆற்றல் கம்பியின் வழியாய் நேரே நிலத்திற்குள் போய்விடுகின்றது. ஆகவே இடியினால் அக் கட்டடத்திற்காவது சுற்றுப் பக்கங்களிலுள்ள பிற கட்டடங்களுக்காவது யாதொரு தீங்கும் நேருவதில்லை.

இயற்கையில் மின் ஆற்றல் எங்கும் மலர்ந்து கிடக்கின்றது. பொருள்கள் ஒன்றோடொன்று உராய்வதால் மின் ஆற்றல் உண்டாகின்றது. அரக்குக் கோலைக் கம்பளித் துணியில் தேய்த்து அதனைக் கிழிந்த மெல்லிய காகிதத் துண்டுகளின் அருகில் கொண்டுவந்தால் அத் துண்டுகள் குதித்து அரக்குக் கோலிற்போய் ஒட்டிக்கொள்ளுகின்றன. அரக்குக் கோலைத் தேய்ப்பதனால் உண்டாகும் மின் ஆற்றலே காகிதத் துண்டுகளைக் கவர்கின்றது. இங்ஙனமே கண்ணாடிக் கோலைப் பட்டுத் துணியில் தேய்த்தால் கண்ணாடிக் கோலில் மின் ஆற்றல் ஏறுகின்றது. பெரிய அளவில் மின் ஆற்றலை உண்டாக்குவதற்கு இரண்டு முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. பெட்ரோல் எண்ணெயை ஆவியாக மாற்றி அதனை வெடிக்கச் செய்து அதன் உதவியால் மின்சாரப் பொறியைச் சுழலும்படி செய்வார்கள். சில இடங்களில் நீர்வீழ்ச்சியின் உதவியால் உருளைகளைச் சுழற்றி மின்சாரம் எடுக்கப்படுகின்றன.

மின்சாரம் கரந்துறைவதாகவும், எங்கும் நிறைந்ததாகவும் ஆற்றல் மிகுந்ததாகவும் இருக்கின்றது. இதன் தன்மையை முற்றும் அறிந்தவர் எவருமில்லை.

## கஉ. அரசர் அண்ணுமலை வள்ளல்

[பண்டித, திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்]

பெருங்கொடை வள்ளல் டாக்டர் செட்டிநாட்டு ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்கள், இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள கானுடுகாத்தான் என்னும் நகரில், தனவணிகர் மரபில், 30 – 9 – 1881இல் பிறந்தார்கள். இவர்கள் தந்தையார் பெயர், முத்தைய செட்டியார், தாயார் பெயர் மீனுட்சி ஆச்சி. அரசர் அவர்கள், தம் முப்பதாம் ஆண்டுவரை உள்நாட்டிலும், வெளி நாடுகளிலும் பலதிறப் பட்ட தொழில் துறைகள் வாயிலாகப் பெரும் பொருளை ஈட்டினுர்கள்.

### பொதுநலப் பணிகள்

'பொருளைத் தேடுதலும், சேர்த்துவைத்தலும், பாதுகாத் தலும், அறவழியில் செலவிடுதலும் ஆகிய செயல்களில் வல்லவரே அரசர்' என்ற அருமறைக்கு ஏற்பத் தாம் வாழ்தல் வேண்டும் என இவர்கள் எண்ணினுர்கள். நாட்டு மக்களுக்குத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்தல் வேண்டும் என விரும்பினுர்கள்; விரும்பியதற்கு ஏற்பக் காரைக்குடி நகராண்மைக் கழகத் தலைமைப் பதவி இவர்களை நாடி வந்தது. மூன்று ஆண்டுகள் தலைவராக இருந்தபோது பொதுமக்கள் இவர்களின் ஆட்சித் திறனையும் அருந் தொண்டுகளையும் வியந்து பாராட்டினர்.

இவர்கள், கானுடுகாத்தானில், மகளிர் மருத்துவச்சாலை ஒன்றை மூன்றுலட்சம் ரூபாய் செலவுசெய்து அமைத்திருக் கிருர்கள். கானுடுகாத்தானுக்கு அண்மையில் செட்டிநாடு என்னும் அழகிய நகர் ஒன்றை உண்டாக்கியுள்ளார்கள். பெண்கள் நலங்கருதிச் சென்னையில் இரண்டு லட்சம் ரூபாய் செலவில் 'வெல்லிங்டன் கிளப்' என்ற நிலையத்தை யும், தில்லையம்பதியில், அந் நகர மக்கள் கலந்து பழக, நகர மண்டபம் (Town Hall) ஒன்றையும் நிறுவி வழங்கி யுள்ளார்கள். பல திருக்கோயில் திருப்பணிகளுக்குப் பொருள் உதவி செய்துள்ளார்கள்.

மதுரை, திருச்சிராப்பள்ளி, சென்னை, டேராடன், டில்லி முதலிய இடங்களில் உள்ள பல கல்வி நிலையங்களுக்கும், பர்மாவிலும் கொழும்பிலும் உள்ள பல பள்ளிகளுக்கும் தளராது பொருள் உதவியுள்ளார்கள். இன்னும் எத்தனையோ அறநிலையங்களுக்கு இவர்கள் வழங்கியிருக்கும் தொகைகளைக் கணக்கிட்டால், அக்கால மதிப்பு ஒன்றரைக் கோடி ரூபாய்க்குமேல் ஆகும். இவ்வாருக இவர்கள் செய்த பலவகை அறங்களை எண்ணும்போது "மறத்தினுல் ஆகிய மன்னரைப்போலாது, அறத்தினுல் ஆய அரசே" என்று யான் இவர்களைப் பற்றி ஒருமுறை பாடியது நினைவில் வருகின்றது.

## மீனாட்சி கல்லூரி

நம் அரசர் அவர்களுக்குக் கல்வியில் மிகுந்த ஆர்வம் உண்டு. இவர்கள், தம் தமையனுர் இராமசாமிச் செட்டியார் நிறுவிய சிதம்பரம் உயர்நிலைப் பள்ளிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதுமுதல் ஒரு கல்லூரி நிறுவ வேண்டும் என்ற எண்ணம் கொண்டார்கள். முதலில், மதுரைக் கல்லூரிக்குப் பொருள்உதவி, அதனை உயர் நிலைக்குக் கொண்டுவர நினைத்தார்கள். கல்லூரிக்கு நிலம் வாங்கினுர்கள். பின்னர் உண்டான மனமாற்றத்தால் சிதம்பரமே கல்லூரி நிறுவத்தக்க இடம் என்று துணிந்தார்கள்.

தம் தமையனுர் அமைத்த உயர்நிலைப்பள்ளிக் கட்டடத்திலேயே கல்லூரி தொடங்க முடிவுசெய்தார்கள். அதற்குத் தம் அருமைத் தாயார் பெயரை வைத்து, மீனாட்சி கல்லூரி என வழங்கினுர்கள். மீனாட்சி கல்லூரி, 24–6–1920 இல் தொடங்கப் பெற்றது. அதனை ஒரு முதல் தரக் கல்லூரியாக்கிப் புதிய இடத்தில் பெரியதாக அமைக்க வேண்டும் என்று அரசர் அவர்கள் கருதினுர்கள். அதற்குரிய இடமாகச் சிதம்பரம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே ஏறத்தாழ ஒன்றரைக் கல் தொலைவில் உள்ள திருவேட்களம் என்னும் சிற்றூரைத் தேர்ந்தெடுத்தார்கள். அங்கே வேண்டிய கட்டடங்களும் அமைப்புக்களும் விரைவில் எழுந்தன; மாணவர் தொகை பெருகியது.

## அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

அரசர் அவர்கள், ஐரோப்பிய நாடுகளுக்கும், அமெரிக்காவுக்கும் சென்று வந்தவர்கள்; ஆங்காங்குள்ள பல்கலைக் கழகங்களைக் கண்டதுமுதல் தமிழ்நாட்டில் ஓர் உடனுறை பல்கலைக் கழகம் நிறுவவேண்டும் என எண்ணினர்கள்; அதற்கேற்பத் தமது மீனுட்சி கல்லூரியையே பல்கலைக் கழகமாக வளர்த்தார்கள். தமிழ்நாடு செய்த தவப்பயனுக 1929ஆம் ஆண்டுமுதல் மீனுட்சி கல்லூரி, அண்ணுமலைப் பல்கலைக் கழகமாகப் பொலிவுற்றது. அரசர் அவர்களின் பெயரால் அண்ணுமலைநகர் என ஒரு நகரமும் தோன்றியது. பல்கலைக் கழகத்திற்குப் பல வகைகளில் அரசர் அவர்கள் வழங்கிய நிதியின் அக்கால மதிப்பு அரைக்கோடி ரூபாய்க்குக் குறையாது. இதனை நிறுவுதற்கும், இதன் வளர்ச்சிக்கும் இவர்கள் மேற்கொண்ட பேருழைப்பு, விலை மதிக்க இயலாதது. இவர்களுக்கு முன்னும், இவர்களுக்குப் பின் இன்று வரையும் ஆசிய நாடுகளில் தனியாக ஒருவர் பல்கலைக் கழகம் நிறுவியதில்லை. உலகம் போற்றும் இப் பல்கலைக் கழகம், இவர்களின் பெருவண்மைக்கும் பெரும்புகழுக்கும் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. இவர்களின் பெயரைப் பொன் எழுத்துக்களால் பொறித்து நாடு என்றும் போற்றும் என்பதில் ஐயமில்லை.

## பல்கலைக் கழக வெள்ளி விழா

இப்பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழா, 9-2-1955இல் மைசூர் மாநில மன்னர் மாண்புமிகு ஜெயசாமராஜ உடையார் பகதூர் அவர்கள் தலைமையில், பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடியிருக்க மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ் வமயம் அண்ணுமலை அரசரின் உருவச் சிலையை மைசூர் மாநில மன்னர் அவர்களும், இராணி சீதை ஆச்சி மாணவர் இல்லத்தைச் சென்னை மாநில முதல் அமைச்சர் காமராசர் அவர்களும் திறந்து வைத்தார்கள். வெள்ளிவிழாப் பேருரையை டாக்டர் சர். ஏ. இலக்குமணசாமி முதலியார் அவர்கள் நிகழ்த்தினுர்கள். சிறப்புப் பட்டமளிப்பு விழாவும், சென்னைக் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களால், டாக்டர் சர்

இராமசாமி ஐயர் நூல்நிலையத்திற்குக் கல்நாட்டு விழாவுட அப்போது நடைபெற்றன.

இப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இப்போது இருந்து இதனை வளர்த்து வருகின்றவர்கள், அறிவாற்றல் களும், நற்குணங்களும், பலதுறை அனுபவமும் நிறைந்த திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் ஆவர் இப்பொழுது பெற்றிருப்பதைப் போலவே இதற்கு முன்னும் புகழ் சான்ற துணைவேந்தர் எழுவ ரைப் பெற்ற பெருமையை இப் பல்கலைக் கழகம் உடையது.

## தாய்மொழிப் பற்று

தமிழ்மொழி வளர்த்தல் சிறப்பு நோக்கமாக இருத்தல் வேண்டும் என்று, அரசர் அவர்கள் நிறுவிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், தமிழ்த்தாய் தனிச் சிறப்புற்று விளங்கு கின்றாள்.

அரசர் அவர்கள், நாட்டிற் பெரும்புகழ் பெற்றிருந்த தமிழ்ப் புலவர்களைத் தம் பல்கலைக் கழகத்தில் ஆசிரியர்களாக அமர்த்தினர். தமிழ் ஆராய்ச்சிக் கூடம் அமைத்துப் பெயர் பெற்ற அறிஞர்களை ஆராய்ச்சியாளர்களாக நியமித்தனர். தமிழுக்குப் பேராசிரியர் பதவியை முதலில் வழங்கினார்கள். தமிழில் புலவர் வகுப்பு, ஆசிரியப் பயிற்சி வகுப்பு, பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பு, எம். ஓ. எல். வகுப்பு ஆகியவற்றை முதலில் தொடங்கிக் கற்பித்த பெருமை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கே உரியது. இன்று நாட்டில் பல இடங்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் பயின்று பட்டம் பெற்றவர்களைக் காண்கின்றோம்.

தமிழ்நாட்டின் இரு பெரும்புலவர் மணிகளாக விளங் கிய மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களுக்கும், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கும் அரசர் அவர்கள், பொன்னுடை போர்த்துப் பெருமைப்படுத்தினார்கள். இது, இவர்களுக் குத் தமிழ்ப்பெரும் புலவர்கள்பால் உள்ள பெருமதிப்புக்குச் சான்றாகும்.

## தமிழ் இசைத் தொண்டு

தமிழிசை, தமிழர்களால் நன்கு பேணப்படாமல் நலிவுற்றது. தமிழ்நாட்டில் பெரும்பாலும் வேற்று மொழிப் பாடல்களே பாடப்பட்டன; பயிலப்பட்டன. அரசர் அவர்கள் இந்த இழிநிலையைக் கண்டார்கள்; "தமிழில் பாடிஞல் அல்லவா தமிழ்மக்கள் பொருள் உணர்ந்து பாக்களைச் சுவைப்பர்" என்று எண்ணிஞர்கள். 1941 ஆம் ஆண்டு அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில், தமிழிசை நூல்கள் வெளியிடப் பதிஞயிரம் ரூபாய் நன்கொடை அளித்தார்கள். அதன் பின்னரும் பல பதிஞயிரங்கள் உதவியிருக்கிருர்கள். இவர்களுடைய இடையருத முயற்சியாலும், ஆதரவாலும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில், 21 தமிழிசை நூல்கள் வெளிவந்தன.

14-8-1941 இல், அண்ணுமலே நகரில், முதல் தமிழிசை மாநாடு கூடியது. பின்னர் எங்கும் தமிழ்இசை மாநாடுகள் நடைபெற்றன. இவ் இயக்கத்தின் உண்மை நோக்கத்தை அரசர் அவர்கள் பல கூட்டங்களில் விளக்கமாகக் கூறிஞர்கள். இவர்கள் தலைமை தாங்கி நடத்திய தமிழ் இசை இயக்கத்திற்கு எங்கும் ஆதரவு பெருகியது. ஆங்காங்குத் தமிழ் இசைக் கழகங்களும், கல்லூரிகளும் தோன்றின. புகழ் பெற்ற இசைவாணர்கள், இசை அரங்குகளில் பெரும்பாலும் தமிழ்ப் பாடல்களையே பாடினர். எதிர்ப்புக்கள் தோன்றி அடங்கின.

அரசர் அவர்களின் உதவியாலும், முயற்சியாலும், டாக்டர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் முதலாய தமிழ்ப் பெருமக்களின் ஆதரவாலும் பெரும் மூலதனத்துடன் சென்னையில் ஒரு தமிழ் இசைச் சங்கம் நிறுவப்பெற்றது. அதன் சார்பில் ஆண்டுதோறும் தமிழ் இசைவிழா மிகச் சிறப்பாக நடைபெறுவதை அறியாத தமிழர் இரார். அச் சங்கம், 1943 ஆம் ஆண்டுமுதல் இசைக் கல்லூரி ஒன்றையும், 1949 ஆம் ஆண்டுமுதல் பண் ஆராய்ச்சியையும் நடத்தி வருகின்றது. அண்ணுமலே அரசர் அவர்களுக்குப் பின் அவர்களுடைய குமாரர்களாகிய

டாக்டர் ராஜா சர். முத்தைய செட்டியார் அவர்களும், திரு. சிதம்பரம் செட்டியார் அவர்களும் மேற்கொண்ட பெரு முயற்சியின் பயனாகத் தமிழ் இசைச் சங்கத்துக்குச் சொந்தப் புதுப் பெருங் கட்டடம் ராஜா அண்ணாமலை மன்றம் என்னும் பெயருடன் சென்னையில் தோன்றியுள்ளது. இம் மன்றம், சென்னை நகருக்கே அணி செய்கின்றது என்னலாம்.

## பட்டங்களும் பதவிகளும்

அரசர் அவர்களின் அரிய பணிகளைப் பாராட்டி, அரசாங்கத்தார், ராவ்பகதூர், திவான்பகதூர், சர் என்னும் பட்டங்களையும், பரம்பரை ராஜா பட்டத்தையும் இவர்களுக்கு வழங்கினர்; சென்னைப் பல்கலைக் கழகம், எல். எல். டி. என்னும் டாக்டர் பட்டத்தையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், டி. லிட். என்னும் டாக்டர் பட்டத்தையும் அளித்தன.

இவர்கள், மூன்று ஆண்டுகள் சென்னைச் சட்டமன்ற உறுப்பினராகவும், தொடர்ச்சியாகப் பதினைந்து ஆண்டுகள் டில்லி அரசாங்கசபை உறுப்பினராகவும் இருந்து, மக்களாலும் அரசாங்கத்தாராலும் பெரிதும் பாராட்டப் பெற்றார்கள்; இந்திய இம்பீரியல் பேங்கின் கவர்னராகப் பத்து ஆண்டுகள் பணிபுரிந்துள்ளார்கள்.

## 61 ஆம் ஆண்டு விழா

அரசர் அவர்களின் 61 ஆம் ஆண்டு விழா, செட்டி நாட்டிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அப்போது பல்கலைக் கழகம், 1200 பக்க அளவில் நினைவு மலர் ஒன்றை அரசர் அவர்களுக்கு வழங்கியது. அரசர் அவர்கள் அந் நன்னாளில் பல்வகை அறங்களுக்கும் வழங்கிய தொகை, மூன்றரை லட்சம் ரூபாயாகும்.

## பெரும்பிரிவு

இவ்வாறு மக்கள் பெறத்தக்க எல்லாப் பேறுகளும் பெற்று நல்வாழ்வு வாழ்ந்தவர்களும், பல செயற்கரும் செயல்கள் செய்த தீரரும் ஆகிய தன்னேரில்லாத் தலைவர்

நம் அண்ணுமலை வள்ளல் அவர்கள், தமது அறுபத்தேழாம் ஆண்டில் (15 – 6 – 1948 இல்) இறைவன் திருவடியை அடைந்தார்கள். இவர்களின் பூதவுடல் அழியினும் புகழுடல் என்றும் நின்று நிலவும்.

உலகப் பெருமக்களுள் ஒருவராகிய இவர்களின் பண்புகளையும், குறிக்கோள்களையும் அறிந்து பின்பற்றுதல், நல்வாழ்வு வாழ்வார்க்கு இன்றியமையாதது.

## பண்புகளும் குறிக்கோள்களும்

அரசர் அவர்கள், கருமமே கண்ணுக இருந்து கடமைகளைச் செய்து முடிப்பார்கள். குறிப்பேடும் எழுதுகோலும் இவர்களிடம் எப்போதும் இருக்கும். உறங்கும்போதும் அவை பக்கத்தில் இருக்கும். தமிழிலும் ஆங்கிலத்திலும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எழுதுவதிலும் பேசுவதிலும் இவர்கள் வல்லவர்கள். இவர்களின் வாழ்நாளில் ஒரு நொடிப் பொழுதும் வீணுகக் கழிந்ததில்லை. மறவாமைக் குணம், இவர்கள்பால் சிறப்பாக அமைந்திருந்தது. இவர்கள் ஒரு செயலைச் செய்வதாக எளிதில் சொல்லமாட்டார்கள். சொன்ஞல், அது எத்துணை அரியதாயினும் அதனைச் செய்து முடிக்காமல் விடமாட்டார்கள். விருந்தினரை வரவேற்று உபசரிப்பதில் இவர்களுக்கு மிகுந்த ஆர்வம் உண்டு. தம் தந்தையார் செல்வத்திலிருந்து சில நூருயிரம் ரூபாய்களைப் பிரித்துக்கொண்ட நம் அரசர், பல கோடியளவினதாகிய பெருஞ் செல்வத்தைத் திரட்டியதற்குக் காரணம், வாணிகத்துறையில் இவர்கள் மேற்கொண்ட அயரா உழைப்பேயாகும். “உழப்பின் வாரா உறுதிகள் உளவோ” என்பது ஆன்ருேர் வாக்கன்ருே? அரசர் அவர்கள் திருக்குறளில் மிகுந்த ஈடுபாடு உடையவர்கள்.

இவர்களது வாழ்க்கையின் குறிக்கோள், பின்வருமாறு இவர்கள் எழுதியிருப்பதால் புலஞகும்.

“ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தினந்தோறும் வணங்குவேன். அண்ணுமலைச் சர்வகலாசாலையின் வளர்ச்சியை ஒவ்வொரு நாளும் சிந்திப்பேன். தமிழ்நாடெங்கும் தமிழிசை

முழங்கவேண்டும் என்பது எனது ஆவல். ஈட்டலும் காத்தலும் வகுத்தலும் என் வாழ்க்கையின் கொள்கை.''

## அரச குடும்பம்

நம் அண்ணுமலை அரசர் அவர்களுக்கு மூன்று ஆண் மக்களும் நான்கு பெண்மக்களும் உள்ளனர். இவர்களுள் மூத்த குமாரரான டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களை நாடு நன்கு அறியும். பல்கலைக் கழகத்தை உருவாக்குவதில் இவர்கள் தம் தந்தையாருக்கு மிகவும் உதவியாக இருந்தவர்கள்; மாசு மறுவற்ற உள்ளம் உடையவர்கள்; எண்ணிய எண்ணியாங்கு நிறைவேற்றும் அறிவாற்றல் படைத்தவர்கள்; ராஜா அண்ணுமலைபுரத்தில் தம் பெயராலும், காந்தி நகரில் தம் வாழ்க்கைத் துணைவியார் இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் பெயராலும் இரண்டு உயர்நிலைப் பள்ளிகளை நிறுவியும், செட்டி நாட்டில் அண்ணுமலைப் பொறியியற் பல்கலைப் பள்ளியும் (polytechnic) அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் முத்தையா பொறியியற் பல்கலைப் பள்ளியும் நிறுவியும் கலைவளர்த்து வருகின்ற வள்ளல்; சென்னை நகரின் முதல் மேயர் இவர்களே. இவர்கள், தம் தம்பியராகிய இராமநாதன் செட்டியார் எம். பி அவர்களையும், சிதம்பரம் செட்டியார் அவர்களையும் மேயராகவும், தம் குமாரராகிய குமாரராஜா முத்தைய செட்டியார் அவர்களை ஷெரிபாகவும் ஆக்கி மகிழ்ந்தவர்கள்; இருமுறை சென்னை மாநில அமைச்சராகப் பணியாற்றியவர்கள்; இடையறவின்றி 30 ஆண்டுகளாகச் சென்னை மாநிலச் சட்டசபை உறுப்பினராக இருக்கிருர்கள்; டில்லி அரசியல் நிர்ணயசபை உறுப்பினராகவும் அனைத்திந்திய வணிக சங்கத்தின் தலைவராகவும் இருந்தவர்கள். கல்வி, வாணிகம் முதலிய துறைகளில் இவர்களின் தொடர்பு கொண்ட பொதுநல நிலையங்கள் எத்துணையோ பல.

இவர்கள், தம் தந்தையாருக்குப் பின் அண்ணுமலைப் பல்கலைக் கழக இணைவேந்தராய்ப் பல்கலைக் கழக வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருக்கிருர்கள். இவர்கள் காலத்தில் பல்கலைக் கழகத்தில் புல கல்விப் பகுதிகள்

தோன்றியுள்ளன ; அழகிய பெரிய கட்டடங்கள் பல உருவெடுத்துள்ளன. பல்கலைக் கழக வெள்ளி விழா, அனைவரும் பாராட்டும் முறையில் தனிப்பெருஞ் சிறப்பாக நடைபெற்றதற்கு முதற்காரணம், இவர்களுடைய இடைவிடாப் பெருமுயற்சியே என்பது எல்லோரும் அறிந்த செய்தியாகும். பல்கலைக்கழகம், இவர்களின் அரிய தொண்டுகளைப் பாராட்டி, வெள்ளி விழாக் காலத்தில் இவர்களுக்கு டாக்டர் பட்டம் வழங்கித் தன் பெருமதிப்பைக் காட்டியது.

தமிழ்மொழி வளர்ச்சியில் சிறப்பாக இவர்கள் ஆர்வம் கொண்டிருப்பதற்கு அறிகுறியாகப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதி, மொழியியல் துறை உள்பட நான்கு பிரிவாக விரிந்து வளர்ந்து வருகின்றது. தமிழ் இசைச் சங்கத்தைப் போற்றி வளர்த்து வருகின்ற இவர்கள், தமிழ் இசை வளர்ச்சிக்கு இடையறாது செய்துவரும் தொண்டுகள் என்றும் போற்றுதற்கு உரியனவாகும். நாடகத்துறை வளர்ச்சியிலும் இவர்கள் பெருவிருப்புக் கொண்டவர்கள். தமிழ் நூல்கள் வெளிவர உதவுதல், புலவர்களை உயர்ந்த பணிகளில் அமர்த்துதல், தமிழ் விழாக்களில் தலைமை பூண்டு அறிவுரை கூறி ஊக்குவித்தல், தமிழ் வளர்ச்சிக்கு நிதி வழங்குதல், புலவர்களுக்குப் பொன்னாடை போர்த்துப் பாராட்டுதல் முதலாக முத்தமிழ் வளர்ச்சிக்கு இவர்கள் செய்துவரும் தொண்டுகள் பற்பலவாகும். எனவே முத்தமிழ் வளர்ச்சி வரலாற்றில், இவர்களின் தொண்டு முதலிடம் பெறும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

தமிழ்நாட்டின் தனிப்பெருந் தவப் புதல்வராகிய இவர்களும், இவர்களின் குடும்பத்தாரும் மேலும் மேலும் அறம் பல புரிந்து, நீடூழி நல்வாழ்வு வாழ்க என வாழ்த்துவோமாக.

## கஅ. மனையியல்*

[டாக்டர், இராஜம்மாள் தேவதாஸ்]

இந்தியாவில் தொன்றுதொட்டு இல்லறம் பெண்களுக்கு இன்றியமையாத கலையாகவும், கடமையாகவும் இருந்துவருகிறது. பண்டைக் காலத்தில் பெண்கள் திருமணத்திற்கு முன்னரே அறுபத்து நான்கு கலைகளையும் கற்கவேண்டும் என்ற நியதி இருந்திருப்பது நம் முன்னோர் இல்லறம் நடத்துவதற்கு அறிவும், பயிற்சியும் தேவை என்பதனை நன்கு உணர்ந்திருந்தார்கள் என்று காட்டுகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே பெண்களுக்கு வீட்டில் தாய்மார், பாட்டிமார்களும், பிற உறவினர்களும் குடும்ப வாழ்க்கையில் சமயச் சடங்குகள், உறவினரைப் பேணுதல், சமூகக் கடமைகள், சமையல், விருந்தோம்பல், குழந்தை வளர்ப்பு, குடும்பம் நடத்துதல், தையல், எதிர்காலத்துக்காகச் சேமித்தல், நூல் நூற்றல் முதலிய பல பணிகளைக் கற்பித்து வந்தனர். இறை வழிபாடு, இசை, ஆன்மிக வளர்ச்சி ஆகியவை இன்ப வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்தன. அக்காலத்தில் பெண்கள் அறிவுரைகளைப் பெற்றும், தாமாகப் பார்த்துப் பழகியும், பெரியோரைப் பின்பற்றியும் கல்வியறிவு பெற்றனர்.

இத்தகைப் பழமையும் பெருமையும் வாய்ந்த மனையியற் கலை, இன்று கல்வித் துறையிலும், ஆரம்ப ஆதாரப்பள்ளி, பாலர் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரையிலும் சிறந்த இடம் பெற்றுள்ளது. முதியோர் கல்வித் திட்டங்களிலும், கிராம நல, தேசிய நலத் திட்டங்களிலும் அதற்குப் பெரிய வாய்ப்புக் கிடைத்துள்ளது. அனைத்திந்திய உயர்நிலைப் பள்ளிக் கல்விக் குழுவினர் செய்த சிபார்சின்பேரில் பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளில் மனையியல் சிறப்புப் பாடமாக்கப்பட்டுள்ளது. பதினைறுக்கு மேற்பட்ட பல்கலைக்

* இக் கட்டுரை, ஆசிரியர் திரு. G. R. தாமோதரம் அவர்களின் இசைவுபெற்றுக் 'கலைக்கதிர்' மனையியல் மலரிலிருந்து எடுக்கப்பட்டது.

கழகத்தினர் பல கல்லூரிகள் மூலமாக மனையியலில் பயிற்சி தந்து பி.ஏ., பி. எஸ்ஸி., எம். ஏ, எம். எஸ்ஸி. முதலிய பட்டங்களை வழங்குகின்றனர். கடந்த ஐந்து ஆறு ஆண்டு களில் மனையியல், கல்வித் துறையில் பெரிய வளர்ச்சி அடைந்திருக்கிறது. அண்மையில் கோவையில் திரு. அவிநாசிலிங்கம் மனையியல் கல்லூரி ஒன்று நிறுவப்பட் டிருக்கிறது. தமிழ், ஆங்கிலம், பொருளாதாரம், வரலாறு, உளவியல் முதலிய பல பாடங்களுடன் மனையியற்கலைப் படிப்பிற்கு இக்கல்லூரியில் சிறப்பிடம் கொடுக்கப்பட் டிருக்கிறது.

தொன்று தொட்டுப் பெருமையுடன் பரம்பரையாக வந்துள்ள மனைவாழ்க்கைமுறையை இப்பொழுது அறி வியல் முறையில் கற்றுக்கொடுக்கத் தேவை எழுந்துள்ளது. அவர்கள் இயல்பிற்கு ஏற்றபடியும், அவர்கள் தேவைகளை ஒட்டியும் பெண்களுக்குக் கல்வி தரவேண்டுமென்று பல நாட்டினர் பல ஆண்டுகளாக உணர்ந்துள்ளனர். அமெரிக்கா, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து முதலிய நாடுகளில் மனையியல், கல்வித்திட்டங்களில் இடம் பெற்றுள்ளது. சில நாடுகளில் ஆண்களுக்கும் குடிமைப் பயிற்சிக்காகவும், குடும்ப வாழ்க்கையின் வெற்றிக்காகவும் மனையியல் புகட்டப்படுகிறது. தென் ஆசிய நாடுகளில் கடந்த பத்து, இருபது ஆண்டுகளாகத்தான் பெண் கல்வியிலும், உழவு நலத் திட்டங்களிலும் மனையியலுக்குக் கவனம் செலுத்துகிறார்கள்.

1908 ஆம் ஆண்டில் அமெரிக்காவில் டாக்டர் எலன் எச் ரிச்சர்ட்ஸ் (Ellen H. Richarts) என்ற அம்மையார் இராசாயன நூல் துறையில் (Chemistry) பெரும்புலமை அடைந்திருந்தும், அது தம் குடும்ப வாழ்க்கைக்குப் பெரி தும் பயன்படவில்லை என்பதை உணர்ந்து பெண்கள் கூட்ட மொன்று கூட்டி 'அமெரிக்க மனையியல் கழகம்' (American Home Economics Association) என்ற நிலையத்திற்குக் கால்கோள் நாட்டினர்.

1932 ஆம் ஆண்டில் அனைத்திந்தியப் பெண்கள் கழகத் தினர் மனையியலின் இன்றியமையாமையை உணர்ந்து

டில்லியில் லேடி இர்வின் கல்லூரியை நிறுவினர். அது ஒன்றுதான் பல ஆண்டுகளாக மனையியல் கற்பிக்கும் கல்லூரியாக விளங்கியது. அதன் பிறகு சென்னைப் பல்கலைக் கழகம்தான் முதன் முதலாகப் பி.எஸ்ஸி. பட்டப் படிப்பில் மனையியலைச் சேர்த்தது.

மனை இயல் நிலையங்கள் எண்ணிக்கையிலும், ஆற்ற லிலும் வளர வளர அவற்றின் பாடுகளை (Problem) ஆராய வும், பாடத் திட்டங்களுக்குத் தகுதிகள் வரையறுக்கவும், ஆராய்ச்சி நடத்தவும், நூல்கள் வெளியிடவும், கூட்டங்கள் நிகழ்த்தவும் கருவியாக இருக்கக்கூடிய ஒரு நிலையத்தின் தேவை தோன்றியது. அதன் விளைவாக அனைத்திந்திய மனையியல் கழகம் 1952 ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது.

1954 ஆம் ஆண்டில் சமூக நலத் திட்டத்தில் தொண் டாற்றுவதற்குரிய கிராம நலப் பெண் ஊழியர்கள் பயிற்சி நிலையங்களை நிறுவ மத்திய சர்க்கார் தீர்மானித்தனர். அதற் காகத் தேசம் முழுவதும் இருபத்தேழு இடங்களில் கிராமப் பெண்களுக்கு மனையியல் பயற்சி அளிக்கப்படுகிறது. தமிழ் நாட்டில் மதுரை மாவட்டத்தில் கல்லுப்பட்டியிலும், கோவை மாவட்டத்தில் பவானிசாகரிலும் இப்பயிற்சி அளிக்கப்படு கிறது. அந்த ஓராண்டுப் பயிற்சியில் உணவு, உடை, தாய்மை, குழந்தை வளர்ப்பு, வீட்டமைப்பு, குடும்ப நிரு வாகம், சுகாதாரம், கைவேலை, உழவு, கூட்டுறவு, கல்வி முறைகள் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன.

ஐக்கிய நாடுகளின் நிலையத்தின் கிளையான, உழவு உணவுக் கழகம் 1955 ஆம் ஆண்டில் டோக்கியோ நகரில் கூட்டிய முதல் அனைத்துலக மனையியல் மகாநாட்டில் கிழக்கு ஆசிய நாடுகளாகிய இந்தோனேஷியா, இந்தியா, ஜப்பான், கொரியா, மலேயா, பிலிப்பைன் தீவுகள், தாய்லாந்து, வியட்நாம், ஆவாய் தீவுகள் முதலிய நாடுகளி லிருந்து பிரதிநிதிகள் தத்தம் பண்பாட்டிற்கும் தேவைகளுக் கும் ஏற்ற மனையியல் பாடத் திட்டங்களைத் தயாரித்தனர்.

மேற்கூறிய வளர்ச்சிகள் மூலமாக மனையியல் என்றால் என்ன, அதன் பொருள், தத்துவம், கல்வித் திட்டத்தில்

அதன் இடம் என்பன பற்றி அறிவதற்கு ஆர்வம் ஒருபுறம் தோன்றியுள்ளது. நேர்மாறாக, அத்துறையைப்பற்றிப் போதிய அறிவும் அனுபவமும் இல்லாதபடியால் பல தவறான கருத்துக்களும் நிலவி வருகின்றன. "வெறும் சமையலும், தையலும் தானே மனைக் கலை! அவற்றையும் குழந்தை வளர்ப்பைப் பற்றியும் தெரிந்து கொள்வதற்கு ஏன் ஒரு கல்லூரிக்குச் செல்லவேண்டும்? நம் தாய்மார் களும், பாட்டிமார்களும் புத்தகம், ஆசிரியர், பாடசாலைகள் இல்லாமலே, தாமாகவே அனுபவ வாயிலாகவும், பெண் ணின் நுண்ணறிவு மூலமாகவும் இவற்றை உணர்ந்து கொண்டு, இல்லறத்தை இனிது நடத்தி நமது பண் பாட்டை நிலைக்கச் செய்யவில்லையா?" என்று கேள்விகள் எழுகின்றன.

மனித நாகரிகம் துவங்கிய காலத்திலிருந்தே, சமூக நலத்திற்கும், வளர்ச்சிக்கும், பெருமைக்கும், இன்பத்திற்கும் அடிப்படையும் ஆதாரமுமாக இருந்துவந்திருப்பன வீடும் குடும்பமுமே யாகும். வீடே கோயில். அதிலுறையும் தாயே கண்கண்ட தெய்வம். மனிதனுக்குரிய நற்பண்புகளெல் லாம் தாயிட மிருந்தும், அவள் உருவாக்கும் சூழ்நிலையி லிருந்தும் வருகின்றன. தியாகம், அன்பு, அறம், அருள், அறிவு, பொறுமை ஆகிய உயர்ந்த பண்புகள் குடும்பத்தில் பிறக்கின்றன. குடும்பத்தின் குத்துவிளக்கு. அணையாத ஒளி, பெண். அன்றும் இன்றும் பெண்ணின் எண்ணமும், அவள் பெண்மையின் ஆதிக்கமும் வீட்டின்கண்ணே உள்ளன. சாவித்திரி, அருந்ததி, சுலோசனை, கண்ணகி, மங்கையர்க்கரசி போன்ற நம் நாட்டு அறமகளிர் மனைமாட்சி யால்தான் மட்டற்ற சக்தி பெற்று, அன்பால் அரிய செயல் கள் ஆற்றினர். இவ்வுண்மையைத் தெய்வப் புலவரும்,

> "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது."

என்னும் குறளால் உலகோர்க்கு உணர்த்தியிருக்கிறார்.

இவ்வளவு பழமையும் பெருமையும் வாய்ந்த வீட்டுக் கலையை இன்று அறிவியல் முறையில் கல்வி நிலையங்களில்

கற்பிக்கவேண்டிய இன்றியமையாமை என்ன? வேகமாக முன்னேறிச் செல்லும் இன்றைய நாகரிக வெள்ளத்தில் வீட்டு வாழ்க்கையின் அடிப்படையான பக்தி, தியாகம், முதலிய அருங்குணங்கள் அடிபட்டு ஒதுக்கப்படாவண்ணம் பாதுகாக்கவேண்டும். நமது பண்பாட்டிலும் ஆத்மிக வாழ்க்கையிலுமுள்ள உயர்ந்த கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு ஆண்மையும் ஆற்றலும் அளிக்கும் ஒரு கல்வித்திட்டம் அமையவேண்டும். மாறிக்கொண்டே வரும் வாழ்க்கைத் தரம், கல்விநிலை, மனித உள்ளப்போக்குகள், சமூகவாழ்க்கை முதலியனவற்றிற்கு ஏற்றாற்போல் குடும்பம் தாக்கப்படுகிறது. பழைய சம்பிரதாயங்கள், கட்டுப்பாடுகள், கடமைகள் முதலியவைகளில் பல, புதுமைப் பெண்களின் வாழ்க்கையில் இடம் பெறுவதில்லை. மின்சாரம், இயந்திரம், நவீனப் போக்குவரத்துச் சாதனங்கள், வெளிநாட்டுப் பண்பாடுகள், முன்பின் பார்த்திராத புதிய உணவுகள், ஆடைகளின் முறைகள், பொருளாதாரம் ஆகியவற்றைப்பற்றிய நன்மை தீமைகளை அறிந்து, நம் பண்பாட்டிற்கு ஏற்றபடி குடும்ப வாழ்க்கையை நடத்துவதற்கு மனையியல் கல்வி வேண்டற்பாலது. பல பெண்கள் சமூக நலத்திற்காகவும், தம் அவசியங்களுக்காகவும் வீட்டுக்கு வெளியே வேலை செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மக்கள் ஆட்சியில், அரசியலில் பெண்களுக்கு மிகுந்த வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. இத்தனை மாறுதல்களையும் பயன்படுமுறையில் சமாளிக்கவும் பெண்களுக்கு மனையியற் கல்வி வேண்டிய தொன்றுகிறது.

மனையியல் என்பது குடும்ப வாழ்க்கைக்கு இன்றியமையாத கல்வியை அளிப்பது. வீடும் குடும்பமும்தான் ஒரு தேசத்தின் சக்திகள்; நாட்டின் முன்னேற்றத்தை அளக்கும் அளவுகோல்கள். வாழ்க்கையின் குறிக்கோள்களை அமைப்பது வீடு. ஆத்மிக வாழ்க்கையைத் தருவது அதன் சூழ்நிலை. எதிர்கால மன்னர்களான குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவது வீடு. மாறாத இன்பத்தையும், சிதைக்க முடியாத குணத்தையும் அளிப்பது வீடு. தனி மனிதனுடைய வாழ்க்கைக்கும், சமூக வாழ்க்கைக்கும் இன்றியமையாத பல

அம்சங்களைக்கொண்ட குடும்பத்தைச் சீர்பெற நடத்தக் கற்பிப்பது மனையியல். கல்வியின் நோக்கங்களில் முக்கிய மான சமூக உணர்ச்சி, சீலம், மன நிறைவு, சுகம், ஒழுங் கான குடும்ப வாழ்க்கை, தொழில் திறமை, ஓய்வு நேரத்தை வளம்படப் பயன்படுத்தல் ஆகியவற்றை யெல்லாம் அடிப் படையாகக் கொண்டது மனையியல். ஆகவே மனையியலே உண்மையான கல்வியாகும்.

வாழ்க்கையின் உயர்ந்த இன்பமே மனையியலின் குறிக் கோள். அதைப் பெறுவதற்காக அது, பல கலைகள், அறி வியல்கள் ஆகியவற்றின் அறிவைப் பயன்படுத்தி, மனிதப் போக்கைச் சரிவர வகுக்கிறது. வாழ்க்கைக்குக் குறிக் கோளைத் தந்து, அக்குறிக்கோளைத் தெளிவாக்கி, அதை அடைய வழிகாட்டி, மனித உள்ளத்தைப் பண்படுத்தி, குடும் பத்தை மலரவைத்து, சமூகத்தை வளப்புறுத்துகிறது. ஆகவே அது எக்காலத்தினர்க்கும், எத்தேசத்தினர்க்கும் ஆண், பெண், இளைஞர், முதியோர் ஆகிய பலதரப்பட்ட வர்களுக்கும் பயன்படக்கூடிய செல்வமாவதுடன் மக்கள் நலத்தையே முதலில் வைப்பதால் கல்விக்கு உயிர்நாடி போலாகிறது.

வாழ்க்கையின் அன்றாடத் தேவைகளாகிய உணவு, உடை, வீடு, பணம், உடல் வளர்ச்சி, உடல் நலம், குழந்தை வளர்ப்பு, நோயில் பாதுகாப்பு, அணிசெய்தல், சமூகக் கடமைகள் ஆகிய பல துறைகளைக் கொண்டது மனையியல் அது இசை, வரலாறு, கலையழகு, பண்பாடு, இறைவழிபாடு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு வீட்டை அணி செய்யும் முறையையும் கற்பிக்கின்றது. "தென்புலத்தார் தெய்வம், விருந்து, ஒக்கல், தான்என்றாங்கு ஐம்புலத்(து) ஆறு ஓம்பல் தலை" என்ற கடமைகளை வேதமாகக் கொண்டது. மேற்கண்ட துறைகளைப் போதிப்பதற்கு அறி வியல் அவசியம். உணவு, உடை, வீட்டுப் பொருளாதாரம், சுகம் ஆகியவற்றை நன்கு அறிந்து ஆராய்வதற்காக, அவற்றிற்கு ஆதாரமான அறிவியற் கலைகள்—பொருளியல் கள் (physical Sciences), உயிர் உடற் கூற்றியல்கள் (Biological and Physiological Sciences), பொருளாதாரம்,

போன்ற சமூக இயல்கள் (Social), உளவியல் (Psychology), கலை (Art), கட்டிடவியல் (Architecture) முதலியன எல்லாம் மனையியல் கல்வித் திட்டங்களில் தலையாய இடம் பெறுபவை. இவ் வறிவியல் கலைகளால் ஆன அடிப்படையின்மேல் மனையியல் துறைகளான உணவு (Nutrition), உடை (Clothing), வீடு (Housing), சுகம் (Health), குழந்தை வளர்ப்பு (Child development), சமூக உறவுகள் (Human relationship) ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன.

உணவுத் துறையில், விஞ்ஞான முறையில் உணவின் தன்மை, அதன் இரசாயன அம்சங்கள், தேவைகள், உடல் வளர்ச்சிக்கேற்ற உணவுகள், நோய்வாய்ப்படும்போது என்ன தேவை போன்றவற்றைத் தெரிந்துகொள்ளலாம். உணவுக் குறை நோய்களை எங்ஙனம் தவிர்ப்பது? கிடைத்த உணவைச் சிறந்த வகையில் பயன்படுத்துவது எப்படி? உணவுக்கு உடலில் ஏற்படும் இரசாயன (Biochemical) மாறுதல்கள் என்ன என்பனவற்றையும் அறியலாம்.

உடையைப் பற்றிக் கல்லூரியில் படிப்பதற்கு என்ன இருக்கிறது என்று நினைக்கலாம். உடையின் தன்மை, இரசாயன அம்சங்கள், குணங்கள், நெசவு, நிறத்தின் வன்மை, சுருங்குவது, நீண்டு போவது முதலியன—பல விதமான பட்டு, கம்பளி, செயற்கைப் பட்டு, பருத்தி, லினன் முதலிய துணிகளின் சிறப்புக்கள், குறைவுகள், உடையை அமைப்பது, தைப்பது, அணிசெய்யும் தையல், அந்தந்த வயதினருக்கு ஏற்ற உடைகளை அமைப்பது, சுகத்திற்கும், மனநிறைவிற்கும், வயதிற்கும், தட்ப வெப்பத்திற்கும், அழகுக்கும் தகுந்தபடி உடுத்துவது, உடைகளைப் பேணுவது, அவைகளைச் சிறந்த முறையில் துவைப்பது, உலர்த்துவது, பெட்டி போடுவது, கம்பளி, பட்டு முதலியவற்றைப் பூச்சிகள் அரிக்காவண்ணம் பாதுகாப்பது, கிழிந்த துணிகளைப் புதுப்பிப்பது முதலியன அறிய வேண்டியவையாம்.

வீட்டமைப்பில்—சுகாதாரம், வெளிச்சம், நடமாட்ட வசதி, அழகுத்தொழில் முதலியவற்றை மனத்தில் கொண்டு

புதிதாகக் கட்டுவதாகில், வீட்டைக் கட்டுவது, ஏற்கெனவே கட்டியதாகில் வாடகைக்குள்ள வீட்டை வசதிக்கேற்ப ஒழுங்கு செய்து கொள்வது, வீட்டுக்கும் பணத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்ற பொருள்கள், மேசை நாற்காலி முதலியன வாங்குவது, அழகுக்கும் உணவுத் தேவைக்கும் ஏற்பத் தோட்டம் போடுவது முதலியன ;

வீட்டுப் பொருளாதாரத்தில்—வரவுக்குத் தக்க செலவு செய்வது, எல்லாச் செல்வங்களையும் பெருக்குவது, தேவைகளின் அவசரத்திற்கேற்பச் செலவு செய்வது, எதிர்காலத்திற்குப் பொருள் சேர்த்து வைப்பது, வீட்டைச் சாமர்த்தியமாக நடத்திப் பலவிதச் சுருக்கு முறைகளைக் (Short cuts in work and labur saving devices) கண்டு பிடித்துக் கையாண்டு நிறைவு பெறுவது;

*"அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து*
*தீதின்றி வந்த பொருள்."*

என்பதற்கு இலக்காக வாழ்வது.

சுகத்தைப்பற்றி நாம் படிக்க வேண்டியவை மிகுதியாக உள்ளன. உடல் நலமும், உள்ள நலமும் ஒன்றோடொன்று இயைந்து பொருந்தியவை. நலமுள்ள உடலில் தான் நலமுடைய உளம் வதியும் (A healthy mind in a healthy body). ஆகவே நலத்தைக் கெடுக்கும் பழக்க வழக்கங்கள், கொள்கைகள், உண்ணும் உணவு, நீர், உறையும் இடம், அணியும் ஆடை, நோய்க்குக் காரணமான அணுக்கள் (Bacteria) அவற்றைத் தவிர்க்கும் முறைகள், நோயுற்ற காலையில் எடுத்துக்கொள்ளவேண்டிய பாதுகாப்பு நடவடிக்கைகள், நோயுற்ருரைக் கண்காணிக்கும் முறைகள் ஆகியவை சிறந்த முறைகள்.

நம் குழந்தைகளை வீரத்துடன், ஆண்மையுடன், உண்மையுடன் வளர்க்க இளமையிலேயே அவர்களுக்கு நல்ல சூழ்நிலையை வீட்டில் அமைத்துத் தரவேண்டும். குழந்தைகள் உடல், உள்ளத்து வளர்ச்சியி லுள்ள பருவங்கள் (Physiological and Psychological growth) மாறுதல்கள், அவர்களுக்கேற்ற உணவு, உடை, உறைவிடம்,

நல்ல பழக்கங்களைக் கற்பித்தல், விளையாட்டு, கல்வி ஆகிய வற்றை எப்படித் தருவது என்பனபற்றிக் குழந்தை வளர்ப்புத் துறையில் புகட்ட வேண்டும்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்."

"தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்."

என்ற திருக்குறள்கள் குழந்தைகளை வளர்ப்பதில் உள்ள சிறந்த கடமைகளைக் காட்டுகின்றன அல்லவா?

மனிதன் என்றுமே தனியாக வாழ முடியாது. உலகத் தோடு ஒத்துச் சமூகத்தில் சுமுகமாகப் பழகி ஒன்றாகக் கூட் டுறவுடன் காரியங்களைச் செய்யப் பழகக் கல்வி நிலையங்கள் உதவவேண்டும். அதற்கு வேண்டிய அனுபவங்களைச் சமூக உறவுகள் (Human relationships) என்னும் துறை தருகிறது.

குடும்ப வாழ்க்கையில் வரக்கூடிய அவசரங்கள், அவசி யங்கள் அனைத்தையும் திறம்படச் சமாளிக்கத் துணிவையும், திறனையும் மனையியல் மூலமாகப் பெற முடியும்.

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை."

என்ற பொன்னுரையைத் தற்காலத்தில் நிரூபிக்கவும்,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்பதன்படி பெண்மையைக் காக்கவும் உதவுகிறது மனை யியற் கல்வி.

மனிதனை ஆக்குவதும் அழிப்பதும் அவன் சூழ்நிலை. அதனை ஆக்க முறையில் அமைத்துத் தருவது பெண்ணின் பெருங் கடமை. குழந்தை வளர்வதற்கும், அன்பு அரும்பி மலர்வதற்கும் முதுமையில் ஓய்வும் நலமும் கிடைப்பதற்கும், பக்தியும் பண்பாடும் சிறந்து ஓங்குவதற்கும் வீடே சிறந்த இடம். அதை அழகுடன் வைத்துப் பாதுகாக்க மனையியற் கல்வி இன்றியமையாதது.

## கச. காடு

[மறைத்திரு மறைமலையடிகள்]

மரங்கள் அடர்ந்த நிலப்பகுதியே பெரும்பாலுங் 'காடு' என வழங்கப்பட்டு வருகின்றது. காடுங் காடுசார்ந்த இடமும் 'முல்லை' யெனப் பெயர்பெறுமென்று தமிழ் நூல்கள் கூறுநிற்கும். பருத்துயர்ந்த மரங்கள் நெருங்கிய காட்டை 'வல்லை' என்றும்; சிறு மரங்கள் மிடைந்த காட்டை 'இறும்பு,' 'குறுங்காடு' என்றும்; சிறு தூறுகள் பம்பிய காட்டை 'அரில்,' 'அறல்,' 'பதுக்கை' என்றும், மிக முதிர்ந்து முற்றிப்போன மரங்களையுடைய காட்டை 'முதை' என்றும்; மரங்கள் கரிந்துபோன காட்டை 'பொச்சை,' 'சுரம்,' 'பொதி' என்றும்; அரசனது காவலிலுள்ள காட்டைக் 'கணையம்,' 'மிளை,' 'அரண்' என்றும் பண்டுதொட்டுத் தமிழ்மக்கள் வழங்கி வந்திருக்கின்றனர்.

இங்ஙனம் பலவகையால் வழங்கப்படுங் காடுகளிற் பெரும்பாலன, மலைகளின் மேலும் மலைகளின் கீழும் மலை சார்ந்த இடங்களிலுமே காணப்படுகின்றன. சிறுபான்மைய கடல்சார்ந்த இடங்களில் இருக்கின்றன. திருமறைக்காடு (வேதாரணியம்) என்னுஞ் சிவபிரான் திருக்கோவில் உள்ள ஊரையடுத்த காடு கடலடுத்த நிலத்தின்கண் உள்ளது. பனங்காடு, உடை வேலங்காடு முதலியன பாண்டி நாட்டின் இராமேசுவரம் திருச்செந்தூர் முதலியவைகட்கு அண்மைய வான கடல்சார்ந்த இடங்களில் மிகுதியாய் உள்ளன.

வான் அளாவிய மரங்கள் அடர்ந்து, தொலைவிலிருந்து நோக்குவார்க்குப் பசுந்தழைப் போர்வையுடன் தோன்றி, அவர்தங் கண்ணையுங் கருத்தையுங் கவர்வனவாய், அருகே சென்று தம்முள் நுழைந்து நோக்குவார்க்குப் பலவேறு வகையான பருத்துயர்ந்த மரங்களுஞ் செடி கொடிகளும் வாய்ந்தனவாய், உள்ளே செல்லச்செல்ல இருண்ட இடங் களும் இடையிடையே பகலவன்வெளிச்சம் படுஞ் சந்து வெளிகளுந் தம்மகத்து உடையனவாய், நீர் ஊற்றுகளுஞ் சிற்றருவிகளும் ஆங்காங்கு அமையப் பெற்று அவற்றை

யடுத்துள்ள மரஞ் செடி கொடிகளிற் பலவகைப் பறவைக் கூட்டங்களும் அவற்றின் ஒலிகளும் நிரம்பப் பெற்றன வாய்த், தம்முட் செல்வாரின் உள்ளத்தை அச்சுறுத்தும் யானை புலி கரடி பெரும்பாம்புகளின் அடிச்சுவடுகளும் உடற்பதிவுகளும் பொருந்தினவாய்ச், சருகுகள் பூக்கள் கனிகள் வித்துக்கள் இடங்கடோறும் உதிரப் பெற்றனவாய், இடையிடையே பட்டு வீழ்ந்து உள் இயங்குவாரின் வழிகளை மறிக்கும் உலர்ந்த மரங்களுங் கோடுகளும் வளார்களும் முட்களும் வேர்களுங் கொடிகளுந் துதைந்தனவாய் உள்ள பெருங்காடுகளைப் புனலூர், நீலமலை, திருக்குற்றாலமலை, அழகர்மலை, பாவநாசமலை, வெள்ளிமலை, மருதமலை, சேர்வ ராயன்மலை, இமயமலை முதலான மலைப்பாங்குகளுக்கு யாம் சென்ற காலங்களிற் கண்டு, முன்னறியாத ஒரு பெரு மகிழ்ச்சியும் இறும்பூதும் எய்தினேம். இத்தகைய பெருங் காடுகளைப் பாராதவர்களுக்கு, ஓரறிவு உயிர்களின் அமைப் பில் இறைவன் தோற்றுவித்திருக்கும் வனப்பும் உயர்ந்த காட்சியும் வியப்பும் பயனும் ஒரு சிறிதுமே விளங்கா.

கானகத்தின் கவினைக் கானகத்திலன்றி வேறெங்குங் காணல் இயலாது. எத்தனை வடிவான இலைகள்! எத்தனை நிறமான மலர்கள்! எத்தனை சுவையான காய்கள்! எத்தனை இனிப்பான பழங்கள்! எத்தனை வகையான மரங்கள் செடி கள் கொடிகள்! அம்மம்ம! இறைவன் படைப்பின் பல வேறு வகையான வியத்தகு அமைப்பும் அழகும் ஒருங்கு பொதுளிய அடவிகளின் விழுமிய தன்மையை எங்ஙனம் கூறுவேம்! எவ்வாறு காட்டுவேம்! கானகங்களின் அடர்ந் துயர்ந்த தோற்றத்தைக் காண்கையில் உள்ளமும் உணர் வும் மேலுயர்ந்து செல்கின்றன! வியப்பும் புதுமையும் கருத்தைக் கவர்ந்தெழுகின்றன!

அவைமட்டுமோ! நின்ற நிலையில் நிற்கும் மரஞ் செடி கொடிகளாகிய ஓரறிவுயிர்கள், இடம்விட்டுப் பெயரும் ஏனை உயிர்களுக்கு எத்தனை வகையிற் பயன்படுகின்றன! நீரும் நிழலும் உணவுந் தூய காற்றும் அவைகள் அனைத்துயிர் கட்கும் அளித்து வருகின்றன காண்மின்கள்! காடுகள் இல்லையாயின், வெய்யவன் சுடுகதிர்களால் வெதுப்பப்படும்

இந் நிலம் நீர்ப்பசையற வறண்டுவிடும் ; ஆவியாக மாறி வானின்கட் சென்ற நீர் குளிர்காற்று வீசுதற்கு வழியின்மையால், திரும்ப மழையாகக் கீழ் இறங்கா. இறங்காவாகவே, உணவுப் பண்டங்களைத் தரும் மரஞ் செடி கொடிகளும் ஏனைப் பயிர்களும் உண்டாகா. இவ் வுண்மை, காடுகளை அழித்துவிடும் இடங்களில் மழை அருகிப்போதலால் நன்கு தெளியப்படும்.

உணவேயன்றி, நமதுயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத தூய காற்றுங், காடுகளில் துவன்றிய மரஞ் செடி கொடிகளினுலேயே நாம் வரப் பெறுகின்ரேம். இவ் ஓரறிவுயிர்த் தொகுதிகள் மிகுந்தில்லாமல், ஏனை உயிர்த்தொகுதிகளே எங்கும் மிகுந்திருக்குமாயின் இவை வெளிவிடும் நச்சுக் காற்றை இவ்வுயிர்களே மீண்டும் மீண்டும் உட்கொண்டு, அதனுல் நோய்ப்பட்டுச் சில நாட்களில் இறந்தொழியும். மற்றுக் கானகங்களிலும் பிற இடங்களிலும் உள்ள மரஞ் செடி கொடிகள் பயிர்களோ ஈரறிவு முதல் ஆறறிவு ஈருக உடைய ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பனவாகிய சிற்றுயிர்கள், பறவைகள், விலங்குகள், மக்கள் முதலான இயங்குமுயிர்கள் வெளிவிடும் நச்சுக்காற்றை உள்ளிழுத்து, அதன் நச்சுத் தன்மையை நீக்கித் தூய காற்றை வெளியிட்டு அதனை எங்கும் பரவச்செய்கின்றன. இவ் வுண்மை, பயிர் பச்சைகள் இல்லாத நகரங்களில் இருப்பவர்கள் அடுத்தடுத்து நோய்களாற் பற்றப்பட்டு விரைவில் மாய்ந்துபோதலாலும், மரஞ் செடி கொடிகள் நிறைந்த நாட்டுப்புறங்களில் இருப்பவர்கள் நோயில்லா யாக்கையினராய் நீண்ட காலம் நன்கு உயிர் வாழ்தலாலும் இனிதறியப்படும்.

இனி உலகத்திலே மிகப் பெரிய காடுகள், வட அமெரிக்காப் பெருந்தேயத்தின் ஒரு பகுதியாகிய 'கனடா' நாட்டின் கண்ணேதான் இருக்கின்றன. இங்குள்ள காடுகளின் அளவு முந்நூற்று எழுபத்தைந்துகோடி காணிகளாகு மென்று கணக்கெடுத் திருக்கின்ருர்கள். தென்னமெரிக்கா தேயத்திலும் இத்துணைப் பெரிய காடுகள் இருந்தாலும், அவைகளில் மரங்கள் மிக அடர்ந்திருத்த

லாலுங் கொடிய காட்டு விலங்குகளும் நச்சுப் பெரும் பாம்பு களும் மிகுந்திருத்தலாலும் அவற்றினுள்ளே மக்கள் நுழைந்து சென்று பார்த்தலும் அவற்றை அளவெடுத்தலும் இயலவில்லையென்று ஆராய்ந்துபோய்க் காணும் ஆசிரியர் கள் அறிவிக்கின்றார்கள். ஐரோப்பாப் பெருந்தேயத்தின் வடபகுதியில் உளதாகிய உருசியா தேயத்திலும் மிகப் பெரிய காடுகள் இருக்கின்றன வென்றும், அவற்றின் அளவுஞ் சிறிதேறக்குறைய முந்நூற்றெழுபத்தைந்து கோடி காணிகளாகுமென்றும் இத்துறையில் வல்ல அறிஞர் கணக் கெடுத்துரைக்கின்றனர்.

இனி உயரத்திலும் பருமனிலுங் குறைந்த அளவின வான மரங்கள் நிறைந்த குறுங்காடுகள் பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. திரு மறைக் காட்டிற்குங் கோடியக்கரைக்கும் இடையிலுள்ள காட்டைக் குறுங்காடு என்றே கூறுதல் வேண்டும். இரா மேசுவரத்திற்கும் பாம்பனுக்கும் இடையிலுள்ள காடுங் குறுங்காடேயாகும். திருச்செந்தூரை யடுத்த நெய்தல் நிலப் பகுதிகளிலுள்ள பனங்காடு உடைவேலங் காடுகளுங் குறுங்காட்டிற் சேர்ந்தனவேயாகும்.

இனிச், சிறுதூறுகளுங் குறுஞ்செடிகளும் பம்பிய காடு களும் எங்கும் உண்டு. யாமிருக்கும் இப் பல்லவபுரத்திற்கு அருகாமையில் தூறுகளுஞ் சிறு செடிகளும் நிறைந்த ஒரு நீண்டகன்ற காடு உளது. இன்னோரன்ன சிறு காடுகள், மேற் கூறிய பெருங் குறுங்காடுகளைப்போற், காட்சிக்கு இனியனவாய் இல்லாவிடினும், நிலத்தின் வறட்சியைத் தணித்து, ஏழை யெளியவர்கள் விறகுவெட்டி விற்றுப் பிழைப்பதற்குப் பெரிதும் உதவியாகின்றன.

இனி, மிக முதிர்ந்து முற்றிப்போனமையால் அடர்ந் தில்லாமல் அலைசலாயிருக்கும் இலைகளையும், அவ்விலைகள் தாமும் இல்லாமல் வெறுங்கோடுகள் கொம்புகளையும் உடைய பரிய மரங்கள் நிறைந்த காட்டின் பகுதிகளைக் கோயம்புத்தூர்க்கடுத்த வெள்ளிமலைப் பெருங்காட்டில் இடையிடையே கண்டு வந்தேம். தழைந்த பசிய மரத்தொகு

திகளைக் கண்டுகளித்த கண்களுக்கு, வற்றலாய் நிற்கும் இம் மரங்களின் றோற்றம் வருத்தத்தை விளைவித்தது. செல்வத்தின் செழுமையாற் கிளைஞரும் நண்பருஞ் சூழ வாழ்ந்து வந்தவர் ஒரு சிலர் சிறிது காலத்தில் அச் செல்வத்தையிழந்து, சுற்றத்தார் எவருமின்றி, உடம்பின் ஒளியும் உள்ளக்கிளர்ச்சியும் அற்றுத் தனிநிற்றல்போலவும், இளமையும் அழகுந் துலங்கத் தலைமையில் வீற்றிநின்றார் பிறர் சிலர், அவ் விளமையும் அழகுந் தலைமையும் மாறி வற்றிய யாக்கையினராய் வருந்திநிற்றல்போலவும், பச்சென்று பொதுளிய இளந்தழைகள் உதிர்ந்து புட்களும் விலங்கினங்களும் அணுகப் பெறாமல் நீர்ப்பசையற்று வளார்களாகிய பழுத்த தலைமயிர்கள் காற்றில் அலையக் கோடுகளாகிய கைகளை நீட்டி விரித்துத் தமது வாட்டத்தைக் குறிப்பனவாய்க் காணப்பட்ட அம் மரங்களின் றோற்றம், உயர்நிலை விரைவில் மாறப்பெறும் மக்களின் இவ் வுலகவாழ்வின் நிலைமையைக் குறிப்பதொன்றாகவே எமக்குத் தோன்றியது.

இனிக், கரிந்த மரங்களையுடைய பொச்சைக் காடுகள் கதிரவன் வெப்பத்தாற் கனன்றுகொண்டிருக்கும் மணல் வெளிகளாகிய பாலை நிலங்களிலேதாம் அருமையாய்க் காணப்படும்.

இனி, முதலிற்கூறிய பெருங்காடுகளெல்லாம், பெரும்பாலும் ஆங்காங்கு அரசுசெலுத்தும் அரசர்களின் காவலில் வைக்கப்பட்டு, அவர்கட்குப் பலவகையில் ஏராளமான வருவாயைத் தந்து வருகின்றன. காடுகளில் மிகுதியாக வளருந் தேக்கு, பாலை, முதிரை, ஆச்சா முதலான மரங்கள் வீடுகள், தொழிற்சாலைகள், கப்பல்கள், படகுகள் முதலியன அமைப்பதற்கேற்ற வலிவுவாய்ந்து நீண்டகாலங் கெடாதிருப்பனவாதலால், அவற்றால் அரசர்கட்கு வரும் வருவாய் மிக்க அளவினது. மேல்பால் உள்ள சாலடி நாட்டில் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் நாகரிகத்திற் சிறந்து விளங்கிய அரசர்கள் அமைத்த பெரிய கோயில்களும் அரண்மனைகளும், நமது தமிழ்நாட்டின் மேல்கரை மலைகளில் வளராநின்ற தேக்குமரங்களைக் கொண்டே

கட்டப்பட்ட பான்மையினைப் பழைய வரலாற்று நூலாசிரியர்கள் கண்டறிந்திருக்கின்றார்கள். இம்மரங்களேயன்றி அகில் சந்தனம் முதலான மணங்கமழ் மரங்களும், விலையுயர்ந்த யானைகளும், யானைக் கொம்புகள் எலும்புகளும், மான்றோல் புலித்தோல்களும், மயிற்றோகைகளும், தேன், தேன்கூண்டுகளும், அரக்கும், நாவியும், பலவகைக் காய் கனி கிழங்குகள் வித்துக்களுங் காட்டின்க ணிருந்து நிரம்பப் பெறுதலின், இவைகளாலும் அரசர்கள் மிகுந்த வருவாயை அடைகின்றனர் என்பது.

# ௧௫. கல்லூரிப் பாடமொழி

(சொற்போர்)

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

**தலைவர் பாரி:** அன்புள்ள மாணவர்களே! கல்லூரிப் பாட மொழி ஆங்கிலத்தில் நடப்பது சிறந்ததா? தமிழில் நடப்பது சிறந்ததா? என்பதைப் பற்றிய உங்கள் உங்கள் கருத்துக்களைத் தனித்தனியே கூறலாம்.

**மாறன்:** தலைவரவர்களே! ஒரு நாட்டின் பெருமதிப்பு அந் நாட்டின் மொழிவளத்தைப் பொறுத்தே இருக்கின்றது. நம் தாய்மொழியாம் தொன்மைத் தமிழ்மொழிக்கு இப் பொழுது எல்லாவுலகினரும் நன்மதிப்புத் தருகின்ற னர். என்ன காரணம்? திருக்குறள் என்னும் சிறந்த நூல் நம்மொழியில் இருப்பதுதான் காரணம். அந்தநூல் முப்பாலாகவுள்ளது அறம் பொருள் இன்பங்களைத் தெளிய விளக்குவது. இதற்கு ஒப்பான நூல் உலகத் தில் எந்த மொழியிலும் இல்லை. வாழ்க்கை வழிகாட்டும் நூல் இஃதொன்றுமேயாம்.

இதுபோல் அறிவியல்—விஞ்ஞான நூல்கள் பல நம் தாய்மொழியில் தோன்றினால், அவைபற்றியும் நம் மொழி மிக்க சிறப்பெய்தும். இச்சிறப்புப் புதுமை பற்றி உண்டாவதாகும். அப்பொழுது தமிழ்மொழி யின் தனித்தியங்கும் ஆற்றலும் வெளிப்படும்.

ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு மேல் நம் நாடு அடிமையாகக் கிடந்தது. அதனால் தாய்மொழி வளர்ச்சி பெறவில்லை. அம்மொழியில் புதுநூல்களும் தோன்ற வில்லை. அம்மொழிக்கும் அதனை உயிரினும் சிறப்பாகப் பாதுகாத்து வரும் புலவர்களுக்கும் நன்மதிப்பு இல் லாமற் போயிற்று. அம்மொழியினை விரும்பிப் படிப் பாரும் இலராயினர். ஆங்கிலத்தையே எல்லாரும் விரும்பிக் கற்றனர். அரசியலிலும், பொதுப் பணிகளி லும் அவர்களுக்கே பெருமதிப்பு இருந்தது. பொருள்

வருவாயும் அவர்கட்கே மிகுந்து ஏற்பட்டது. அவர்கள் தமிழையும் தமிழ் கற்ருேரையும் புறக்கணித்து வந்தனர். அதனுல் தமிழ் வேற்றுமொழி போல் முடங்கிக் கிடந்தது.

ஆங்கிலங் கற்றவர்களுடைய நடையுடை பாவனைகள் ஆங்கிலமயமாக மாறிவிட்டன. அதனுல் ஆங்கில மொழிக்கும், ஆங்கில ஆட்சிக்கும் நன்மை ஏற்பட்டது. ஆங்கிலங் கற்றவர்கள் எண்ணுவதும் பேசுவதும் ஆங்கிலமே. அதனுல் அவர்கள் செய்கையும் ஆங்கிலமே ஆயிற்றெனக் கூறுவதில் வியப்பொன்றுமில்லை. இவர்கள் தமிழையே மறந்தனர். தமிழினைப் பேசவுங்கூடத் தெரியாதவராயினர். அவர்கள் தமிழ்நாட்டிற்கோ, தமிழ்மக்களுக்கோ தங்கள் புலமையினுல் எந்தவகையான நன்மையும் செய்ய இயலாதவராயினர். இதற்குக் காரணம் போதனுமொழி தமிழில் இல்லாமையல்லவா?

நாட்டுரிமை வந்தபின் நல்லறிஞர் பலர்க்கும் நாட்டின் நல்வளத்தின் மேல் நோக்கம் சென்றது. அவ்வளத்திற்கு உறுதுணையாக இருப்பது அவ்வந் நாட்டு மொழியே என்னும் உண்மை வெளிப்பட்டது. வெளிப்படவே, தாய்மொழியாம் தமிழ்மொழியினை ஆட்சிமொழியாகவும் கல்லூரிப் போதனு மொழியாகவும் அமைக்க விழைந்தனர். அரசியலார்க்கும், பல்கலைக் கழகத்தார்க்கும் முறையாக அறிவித்துத் தூண்டினர். அவர்களும் மனமார ஏற்று நடைமுறைக்குக் கொண்டு வருகின்றனர். இனிமேல் கல்லூரிகளில் எல்லாப் பாடங்களும் தமிழிலேயே போதிக்கப் படும். இது நாட்டுக்கும் மொழிக்கும் பெரு நன்மைதரும் அருஞ் செயலாகும். உலகப் பொது மொழியாக விளங்கும் ஆங்கிலமொழியை எவரும் கைவிடுதல் முடியாது. என்றும் அம்மொழியும் ஒருதுணை மொழியாக இருந்தே வரும். அதனுல் அம்மொழியினை மொழித்துறை அறிவு முதன்மையாகப்பெற உடன் கற்றுத் தேறுதல்

வேண்டும். அதற்கு வேண்டிய செவ்வையான திட்டமும் அமைக்கப் பட்டுள்ளது. இவ்வறிவு எல்லாவகையாலும் நம்மவர்க்கு நன்மை தருவதாகும்.

கல்லூரிகளில் அறிவியற் கல்வியாகிய விஞ்ஞானத் துறைப் பாடங்களும், வரலாறு, பொருளியல், மருத்துவம், பொறியியற் கல்வி முதலிய எல்லாப் பாடங்களும் தமிழிலேயே நடக்கும். இந்தநிலை இப்பொழுது மாணவர்களாக இருந்து கற்கும் நம்மனோர் தவம் தந்ததாகும். நமக்குக் கற்பிக்கும் ஆசிரியர்களும் பெரும் புண்ணியராவர். தமிழ்மொழியை விஞ்ஞானத்துறை வாயிலாக வளர்த்த பெரும் பெயர் அவரைச் சாரும். கல்லூரிப் படிப்பில் புகும் நம்மனோரும் தமிழ் போதனை மொழியாக அமைய வலியுறுத்தல் வேண்டும். முயன்று கற்று ஏனையோருக்கு ஊக்கந்தருதல் வேண்டும், அன்புள்ள மாணவர்கள் அனைவர்களும் இதற்கு இணங்குவீர்கள் என நம்புகின்றேன்.

தலைவர்: அன்புள்ள மாறன் தன் கருத்தைக் கூறிமுடித்தனன். இனி நம்பி தன் கருத்தைக் கூறலாம்.

நம்பி: தலைவரவர்களே! அன்பர்களே! நண்பர் மாறன் அவர்கள் தமிழ்ப் பற்றினால் நடைமுறைக்கு முடியாததொன்றைக் கூறுகின்றார். கல்லூரிப் பாடங்களைத் தமிழில் படித்தால் அவர் சொல்லுவதுபோல் படித்தவர்கள் செவ்வையாக ஆங்கிலம் பேசத் தெரியாமல் விழிப்பர். வெளிநாட்டுத் தொடர்புக்குத் தகுதியுடையவராகார். இந்தியாவிலும் மற்றைய மாநிலத்தாருடன் தொடர்புகொள்ளுதல் முடியாது. மேலும் அப்பாடங்களை யெல்லாம் படிக்கத் தமிழில் நூல்களில்லை. நூல்களை யுண்டாக்கப் போதிய கலைச் சொற்கள் கிடையா; கற்பிக்கும் ஆசிரியர்களும் இல்லை. இந்த நிலையில் தமிழ் போதனை மொழியாக வேண்டுமென்பது பகற்கனவேயாம்.

தலைவர்: அன்புள்ள மாறனே! நம்பி கூறிய தடைகளுக்கு விடைகூற விரும்பினால் கூறலாம்.

**மாறன் :** தலைவரவர்களின் ஆணையின்மேல் கூறுகின்றேன் கற்றுவல்ல அறிஞர்குழு நூலாக்கவும், கலைச் சொல் லமைக்கவும் அரசியலாரால் ஏற்படுத்தப்பட்டு நூல்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஏறத் தாழ இருபது ஆண்டுகளுக்கு முன் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழிலேயே எல்லாப் பாடங்களையும் போதித்தல் வேண்டுமென்று தொடங்கிய காலத்திலும் இப்படித் தான் எதிர்ப்புக்கள் இருந்தன. அவற்றையொருவாறு பொறுத்துக் கொண்டு அறிஞர்கள் முயன்று நூலாக்கியும் கற்பித்தும் வந்தனர். அதனால் எவ்வகையான இடர்ப்பாடுமின்றி நாமெல்லாம் கற்றுவந்தோம். இப்பொழுதும் கற்று வருகின்றனர். அதுபோல் கல்லூரிப் போதனை மொழியும் தமிழானால் நூல்களும் விரைவில் வெளிவரும்; கற்பிப்பாரும் எளிதாகக் கற்பிப்பர். கற்பிப்பார்க்குத் துணையாதற் பொருட்டுக் கலைச் சொற்களுக்குரிய ஆங்கிலச் சொற்களைக் கோடடைப்புக்குள் அமைத்தும், பல ஆங்கிலச் சொற்களை அப்படியே கொண்டும் பாடப் புத்தகங்கள் அமைக்கப்படுகின்றன. அதனால் ஆங்கில வாயிலாகக் கற்பித்துவரும் பேராசிரியர்களுக்குத் தாய்மொழி தமிழானதால் சிறுமுயற்சியில் எளிதாகத் தெரிந்து கொள்வர். சில தந்நயக்காரர்களும், தாய்மொழிப் பற்றில்லாதவர்களும் அங்ஙனங் கூறினும் உண்மையுணர்ந்தார் அங்ஙனம் கூறார். மேலும், ஆங்கிலத்தில் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் வருந்திக் கற்கும் அப்பாடங்களை இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குள் எளிதாகக் கற்றுக் கொள்ளலாம். தாய்மொழியும் வளம் பெறும். நாமும் நலம் பெறுவோம். நம் நாடும் முன்னேறும். பிற நாட்டார் நன்மதிப்பையும் பெறும்.

**தலைவர் :** அன்புள்ள நம்பியே! மாறன் கூறிய விடையைக் கேட்டீர். மேலும் ஏதுங்கூற விரும்பினால் கூறலாம்.

**நம்பி :** ஒருவகையாக இதுவரையும் கூறப்பட்டதை ஒப்புக் கொண்டாலும், நீக்கமுடியாத பேரிடர்ப்பாடுகள் முன்னிற்கின்றன. எவையெனில், பாடப் புத்தகங்கள்

தமிழில் ஆக்கப்பட்டாலும், பாடம் போதிப்பதற்கு உதவியாக அளவில்லாத துணை நூல்கள் ஆங்கிலத்திலிருக்கின்றன; அவற்றையெல்லாம் உடனடியாக மொழிபெயர்ப்பதும் முடியாத காரியம். மேலும் விஞ்ஞானம் முதலிய பல கலைத் துறைப் பாடங்களை வெளிநாடுகளிற் சென்று மேற்படிப்புப் படிக்க விரும்புவார்க்குத் தமிழில் படித்த பாடங்கள் ஒரு சிறிதும் பயன் பெறாது வீணாகப் போகும். வெளிநாடுகளிலோ, பிற மாநிலங்களிலோ பணிசெய்யப் போவார்க்கும் தமிழ்ப் படிப்புப் பயன்பெறாது. கிணற்றுத் தவளைபோல் நம் நாட்டில் சுற்றித் திரிவார்க்கு மட்டும் பயன் உண்டாவதால் அடையும் நன்மை யாது ?

**தலைவர் :** அன்புள்ள மாறனே! நம்பி கூறியதன்மேல் கூற விரும்பினால் கூறலாம்.

**மாறன் :** துணைநூல்களைப் பேராசிரியர்கள் ஆங்கிலத்தின் வாயிலாகக் கற்று அவற்றைத் தமிழின் வாயிலாக விளக்கிச் சொல்லத் துணையாக்கிக் கொள்வதில் வருத்தம் ஏதும் உண்டாகாது. மேலும் இன்றியமையாமை ஏற்படும்போது நூல்கள் விரைவில் வெளி வந்துவிடும். மேலும் மேற்படிப்பிற்காக வெளிநாடு செல்வோர் தொகை மிகச் சுருங்கிய அளவிலிருக்கும். அத்தகையோர் ஆயிரத்தில் ஒருவர் அல்லது இருவர் முன்வருவதும் அருமையாகும். மேலும் ஒருவர் எல்லாத் துறைப் படிப்பிற்கும் வெளிநாடு செல்வதில்லை. ஏதாவது ஒருதுறைக்கே கற்கச் செல்லுவர். அப்படிச் செல்லுவோரும் ஆங்கில மொழித்துறை அறிவு நிரம்பப் பெற்ற வல்லுநராவர். அதனால் அவர்கள் எளிதாக மேற்படிப்பினைப் படித்துக் கொள்ளுதலுங் கூடும். அல்லாவிட்டால் அவர்கள் மட்டும் தனியாக ஆறு திங்கள் அல்லது ஓராண்டு வரை முன்னூறு படிப்பாக இங்கேயே தமது துறைக்குரிய பாடங்களை ஆங்கிலவாயிலாகப் படித்துச் செல்லலாம். அயல் மாநிலப் பணித்துறைக்குப் போவோர்க்கும் அவர்கட்கு ஏற்பட்டுள்ள ஆங்கில மொழித்துறை

அறிவே போதுமானது. கல்லூரியில் போதனமொழி தமிழாயின், தமிழ் வளம் பெறுவதுடன் கற்பார்க்குக் காலமும் சுருங்கிய அளவிற் போதுமானதாகும்; முயற்சி யும் எளிமையாகும். கற்றவர்கட்கும் மற்றவர்கட்கும் மொழிவேறுபாடின்மையால், கற்றவர் அறிவு மற்றவர் கட்கு எளிதாகப் பயன்பெறும். அவர்களுடன் அள வளாவி ஒற்றுமையுறுவதற்கு எவ்வகைத் தடையும் இடையே குறுக்கிடாது. இனித் தலைவர்களின் நடுத் தீர்ப்பே எல்லாராலும் எதிர்பார்க்கப் படுவதாகும் என எண்ணுகின்றேன்.

தலைவர்: அன்புள்ள மாணவர்களே! நானும் நீங்களும் இருவர்தம் சொற்போரையும் நன்கு கேட்டோம். நன்குக எண்ணிப் பார்த்தால் அவரவர் தம் தம் தாய் மொழியில் கற்பதே பொருத்தமாகும் நம்நாட்டில் அல் லாமல் வேறு எந்தநாட்டிலும் எந்த மொழியில் படிப்ப தென்னும் வினவே எழுவதில்லை. அடிமை நீங்கியும் அடிமை மனப்பான்மை நம்மைவிட்டு அகலவில்லை. முதலில் அது முற்றும் ஒழியவேண்டும். அப்பொழுது போதனமொழி தமிழாக இருத்தல் வேண்டும் என ஒன்றுபோற் கூறுவர். எனவே திண்ணைப் பள்ளி முதல் பல்கலைக் கழகப் படிப்பு ஈருக எல்லாம் தமிழில் இருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலேயமையும். எந்தக் காரியமும் முயற்சியும் வருத்தமு மின்றி எளிதிற் கைகூடுவ தில்லை. கைகூடியபின் ஏற்படும் பயனை நோக்க இவை பெரிதாகா. ஆகவே தமிழாகவே இருத்தல் வேண்டுமென்பதை எல்லாரும் ஒருமனமாய் ஒப்புக்கொள்வீர்கள் என நம்புகிறேன். என்னுடைய கருத்தும் அதுவேயாகும்.

# கசு. சுவாமி இருக்கிறார்

[மகாமகோபாத்தியாய, டாக்டர் உ. வே. சாமிநாதையர்]

ஏறக்குறைய நாற்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு கும்பகோணத்தில் அரசாங்கக் கலாசாலையில் உள்ள ஆசிரியர்களும் மாணுக்கர்களும் தாகந் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்க ஒரு பிராமணர் நியமிக்கப்பட்டிருந்தார். அவர் காவிரியில் தண்ணீர் உள்ள காலத்தில் அந்தத் தண்ணீரை எடுத்து வந்தும், தண்ணீர் இல்லாத காலத்தில் ஊற்றுப்போட்டு இறைத்துத் தண்ணீர் கொணர்ந்தும் சால்களிற் கொட்டி விளாமிச்சைவேர் முதலியன போட்டு வைப்பார். தினந்தோறும் முதல் நாளில் எஞ்சியிருந்த தண்ணீரை வெளியே கொட்டிப் பானைகளை நன்ருக அலசிச் சுத்தம் செய்துவிட்டு அவற்றிலே புதிய தண்ணீரை ஊற்றிவைப்பார். பானைகளின் கீழே நல்ல மணலை நிறையப் பரப்பி வைப்பார். தமக்குக் கிடைக்கும் வருவாயை நினைந்தே அவர் அங்ஙனம் செய்து வந்தார்.

அவர் முகத்தில் ஒருநாளும் சந்தோஷத்தைக் காண முடியாது; எப்பொழுதும் கடுகடுத்த முகத்தோடே இருப்பார். அவருடைய உடம்போ மிக மெலிந்திருக்கும். அவருக்கு எப்போதும் உள்ள வயிற்றுவலியினுல் அது பின்னும் மெலிந்து வந்தது. அவருக்கு யாருடனும் பேசுவதில் விருப்ப மிருப்பதில்லை. பேசினுற் கடுமையாகவே இருக்கும். ஆனுல் தவறின்றி ஒழுங்காகவே தம்முடைய வேலையைப் பார்த்து வந்தார்

இப்படி இருந்துவரும் போது ஒரு வருடம் கோடைக் காலத்தில் ஒருநாள், அந்தக் கல்லூரியில் தத்துவ சாத்திர ஆசிரியராக இருந்த கள்ளிக்கோட்டை நாராயணசாமி ஐயரென்பவர் அந்தப் பிராமணரிடத்தில் தண்ணீர் வாங்கி உண்டபோது அதில் ஒருவகையான கெட்ட நாற்றம் உண்டாயிற்று. உடனே அவர் தண்ணீர் கொட்டுபவரைப் பார்த்து, "என்ன இந்தத் தண்ணீரில் ஏதோ நாற்றம் அடிக் கிறதே," என்று கேட்டார்.

தண்ணீர் கொடுப்பவர்: "நான் என்ன செய்வேன், சுவாமி இருக்கிறார்", என்றார்.

நாராயணசாமி ஐயர் கும்பகோணம் வந்து சில காலமே ஆயிற்று; ஆகலின் தம்மை அவர் அவமதிப்பதாக நினைத்தார். தாம் கேட்டதற்கும் அவர் கூறியதற்கும் என்ன சம்பந்தமென்பது அவருக்கு விளங்கவில்லை. அவர் "நாம் கேட்கிறோம்; இந்த வயிற்றுவலிக்காரர், 'நான் சரியாகத் தான் பார்த்துக் கொட்டி வருகிறேன்; அநியாயமாக நீங்கள் பழிகூறுகிறீர்கள்; சுவாமி இருக்கிறார்; அவர் இப்படிப் பழி கூறுபவர்களைக் கவனித்துக்கொள்வார்' என்று பொருள் படும்படி பேசுகிறார்," என்று எண்ணினார். உடனே சற்றுச் சினம் அடைந்து, "என்ன ஐயா! தண்ணீர் நாற்றம் நாறுகிறதென்றால் சுவாமி இருக்கிறாரென்று சொல்கிறீரே, நல்ல தண்ணீராக நீர் கொட்டக்கூடாதா?" என்று சிறிது கடுமையாகக் கேட்டார்.

மீண்டும் அவர் "என்னால் முடிந்ததை நான் செய்கிறேன். சுவாமி இருக்கிறார்; என்மேல் தப்பு ஏது?" என்றார்.

நாராயணசாமி ஐயருக்கோ கோபம் அதிகரித்தது. மீண்டும் ஏதோ கேட்க அப்பிராமணர், "சுவாமி இருக்கிறார்," என்றே கடுமையான தோற்றத்தோடு சொல்லி வந்தார். இந்த வாக்குவாதம் நடந்துகொண்டிருக்கையில் நான் அங்கே வந்து, "என்ன சமாசாரம்?" என்று நாராயணசாமி ஐயரைக் கேட்டேன். அவர் பொங்குகின்ற கோபத்தோடு, "இந்தத் தண்ணீர் ஒரு கெட்ட நாற்றம் அடிக்கிறது. நான் ஏன் இப்படியிருக்கிறதென்று கேட்டேன். இந்த மனிதர் சுவாமி இருக்கிறார் என்று சாபமிடுகிறார். இவரை இன்றைக்கே விலக்கிவிடவேண்டும்," என்று உரத்த குரலிற் சொன்னார். இருவருக்குமிடையில் நிகழும் வாக்குவாதத்திற்குக் காரணமான செய்தி இன்னதென்று எனக்கு முற்றிலும் விளங்கிவிட்டது. அவ்விருவர் மீதும் குற்றமில்லையென்பதை நான் உணர்ந்தேன். தத்துவ சாத்திர ஆசிரியரை மெல்ல நோக்கிக், "கோபித்துக்கொள்ள வேண்டா;

காவேரியிற் சில இடத்தில் மணலுக்கு அடியே களி இருக்கும். அங்கே ஊற்றுப் போட்டுத் தண்ணீர் எடுத்தால் அது கும்பி நாற்றம் நாறும். இந்த ஊரில் முக்கியமான கோவில் கும்பேசுவரர் கோயிலல்லவா? கும்பி என்பதற்கும் கும்பேசுவரர் என்பதற்கும் சிறிதளவு ஒற்றுமை இருப்பதால் சிலர் கும்பியைக் கும்பேசுவரரென்று சங்கேதமாகச் சொல்வார்கள்; சுவாமியென்றும் சொல்வதுண்டு. இந்த ஊரிற் பலர் இப்படியே சொல்வார்கள். இவர் கும்பி இருக்கிறது; அதற்கு நானென்ன செய்வேன் என்ற கருத்தோடு சுவாமி இருக்கிருரென்று சொன்ஞரேயொழிய உங்களை அசட்டை செய்யவில்லை. தெய்வம் தண்டிக்க வேண்டுமென்பது இவர் கருத்தன்று'', என்று விளக்கிச் சொன்னேன். நாராயண சாமி ஐயருடைய கோபமெல்லாம் மாறிவிட்டது. அடக்க முடியாத சிரிப்பு உண்டாயிற்று. தண்ணீர் கொடுப்பவரை ஏற இறங்கப் பார்த்தார். ''அட பாவி! ஈசுவரனுடைய அழகிய பெயரை இப்படியா உபயோகப்படுத்துவது? உன்னுடைய வார்த்தைக்கு இதுவா அர்த்தம்?'' என்று சிரித்துக் கொண்டே கூறிஞர்.

''எல்லாருந்தான் சொல்லுகிருர்கள்; நான் சொல்லக் கூடாதா?'' என்று அந்தப் பிராமணர் சமாதானம் சொன்ஞர்.

''சரி சரி; கும்பியில்லாத இடமாகப் பார்த்து நாளை முதல் தண்ணீர் கொண்டு வந்து கொட்டும்,'' என்று சொல்லிவிட்டு நாங்கள் இருவரும் சென்ருேம்.

## கஎ. பாசனம்*

அணைகட்டி ஆறுகளைத் தேக்கிப் பாசனத்துக்கு வகை செய்யும் கலை நமது நாட்டுக்குப் புதியது அன்று. ஆறுகள், நீரோடைகளுக்கு அணைகள் கட்டுவது இங்குச் சரித்திர காலத்திலேயே ஆரம்பமாகி விட்டது. இக் கால விஞ்ஞான அறிவின் உதவியுடன் மிகப்பெரிய அணைகளைக் கட்ட முற்பட்டோம்.

பிரிட்டிஷார் நமது நாட்டில் காலடி எடுத்து வைத்ததும், ஏற்கெனவே உள்ள உள்நாட்டுப் பாசனவசதிகளை அபிவிருத்தி செய்ய முற்பட்டனர். பின்னர், பல்வேறு நீரோடைகளுக்குக் குறுக்கே அணைகளும், தேக்கங்களும் கட்டிப் பாசனத்துக்காக நீர் திருப்பப்பட்டது. நீரைத் தேக்கவும், பாசனத்துக்கு ஒழுங்காக நீர் கிடைக்கச் செய்யவும் பெரியாறு, பாபநாசம், மேட்டூர் ஆகிய அணைகள் கட்டப்பட்டன. நாடு விடுதலையடைந்த பிறகு பாசன அபிவிருத்திக்கு முனைப்பான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. மாநிலத்தில், அனேகமாக ஒவ்வொரு மாவட்டத்திலுமே பாசனம் சம்பந்தப்பட்ட கட்டுமான வேலைகள் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டன. பெரிய திட்டங்களும் சிறிய பாசனத் திட்ட வேலைகளும் மேற்கொள்ளப்பட்டன.

1951 இல் தொடங்கப்பட்ட முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் ரூபாய் 37 கோடி செலவில் கீழ்க்கண்ட 12 திட்ட வேலைகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் மூலம் அனுகூலமடைந்த நிலப்பரப்பு, 5·24 லட்சம் ஏக்கர்.

மேற்கொள்ளப்பட்ட 12 திட்டங்கள் பின்வருமாறு:

(1) கீழ்ப்பவானித் திட்டம், (2) மலம்புழா, (3) மேட்டூர்க் கால்வாய்த் திட்டம், (4) காவேரி டெல்டா வடிகால் அபிவிருத்தித் திட்டம், (5) மணிமுத்தாறு, (6) ஆரணியாறு, (7) வாளையாறு, (8) மங்களம், (9) அமராவதி, (10) வைகை, (11) சாத்தனூர், (12) கிருஷ்ணகிரி.

* இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்பற்றிய சென்னை அரசாங்கச் செய்தித்துறை வெளியீட்டினின்று எடுக்கப்பட்டது.

இந்தப் பன்னிரண்டு திட்டங்களில் காவேரி டெல்டா வடிகால் அபிவிருத்தித் திட்டம், கீழ்ப்பவானித் திட்டம், மலம்புழாத் திட்டம் ஆகியன முதல் திட்டக்கால முடிவுக்குள் ஏறக்குறையக் கட்டி முடிக்கப்பட்டன. மற்றத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. முதல் திட்டக்காலத்தில் கீழ்ப்பவானித் திட்டம், மலம்புழா, மேட்டூர்க் கால்வாய்த் திட்டங்களின் கீழ் மொத்தம் 2,35,000 ஏக்கருக்கு நீர் விடப் பட்டது. பன்னிரண்டு திட்டங்களுக்குமாக முதல் ஐந்தாண் டுத் திட்டக்காலத்தில் ஆன மொத்தச் செலவு சுமார் 20 கோடி ரூபாய். இரண்டாவது திட்டக்காலத்தில், முதல் திட்டக்காலத் திற் பாக்கி நின்ற வேலைகளைத் தொடர்ந்து நடத்துவதுடன், கீழ்க்கண்ட புதிய திட்டங்களும் சேர்க்கப்பட்டன:

(1) புதிய கட்டளை உயர்மட்டக் கால்வாய்த் திட்டம்.

(2) புள்ளம்பாடிக் கால்வாய்த் திட்டம்.

(3) வீடூர்த் தேக்கத் திட்டம்.

(4) மீன்கராத் தேக்கத் திட்டம்;

(5) மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகளைத் திருப்பும் திட்டம் (பரம்பிக் குளம், ஆளியாறு தேக்கத் திட்டம்).

மாநிலச் சீரமைப்பின் விளைவாக மலம்புழா, மங்களம், வாளையாறு, மீன்கராத் தேக்கத் திட்டங்கள் 1-11-1956 இல் இருந்து கேரள மாநிலத்துக்குச் சேர்ந்துவிட்டன.

1957–58 இல் கீழ்ப்பவானித் திட்டத்திலிருந்து 195,000 ஏக்கருக்குத் தண்ணீர் விடப்பட்டது. ஆரணியாறு திட்டத்தின்கீழ் 5,700 ஏக்கருக்கு முதல் போகத்திற்குத் தண்ணீர் விடப்பட்டது. சாத்தனூர்த் தேக்கத் திட்டத்தின் கீழ் 3,137 ஏக்கரில் பாசனத்துக்கு நீர் விடப்பட்டது. மேட்டூர்க் கால்வாய்த் திட்டத்தில் இடதுகரைக் கால்வாய் மூலம் மொத்த ஆயக்கட்டு 18,000 ஏக்கருக்கும், வலது கரைக் கால்வாய் மூலம் 17,016 ஏக்கருக்கும் நீர் விடப்பட் டது. அமராவதித் திட்டத்தின் கீழ் 4,027 ஏக்கருக்குத் தண் ணீர் விடப்பட்டது. இது போக ஏற்கெனவே பாசனமுள்ள 32,000 ஏக்கருக்குப் பாசன வசதி உறுதிப்படுத்தப்பட்டது.

மணிமுத்தாறு தேக்கத்தில் நீர் நல்லபடியாகத் தேங்கியது காரணமாகத் திட்டத்தின்கீழ் உள்ள எல்லா ஏரி குளங்களுக்கும் தண்ணீர் விடப்பட்டது. அதன் மூலம் 17,5000 ஏக்கர் புதிதாகப் பாசனம் பெறவும், ஏற்கெனவே பாசனமுள்ள 83,000 ஏக்கர் நீர் வசதி பெற்று வரவும் வழி ஏற்பட்டது. முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பாக்கி நின்ற திட்டங்களில் வைகைத் திட்டம் தவிர மற்ற எல்லாம் 1958–1959 இல் முடிவுபெறும் என்றும், நீர்ப்பாசனத்துக்குக் கிடைக்குமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

பாசனத் திட்டங்களின் விவரம், 1957–58 இல் ஏற்பட்டுள்ள முன்னேற்றம், 1958-59 க்கு வேலைத் திட்டம் ஆகியவை கீழே தரப்படுகிறது :

**மணிமுத்தாறு தேக்கத் திட்டம்:** தாம்பிரபரணியின் உபநதியான மணிமுத்தாறுக்குக் குறுக்கே திருநெல்வேலி மாவட்டத்தில் ஓர் அணை கட்டுவதே இந்தத் திட்டமாகும். இந்த அணைக்கட்டின் மொத்த நீளம் 9,605 அடி. இந்தத் தேக்கம் 550 கோடி கன அடி நீரைத் தேக்கும். வலது புறத்தில் ஏரி குளங்களுக்கு நீர் வரும்படி செய்ய 28½ மைல் நீளத்துக்கு ஒரு புதிய கால்வாய் வெட்டப்படும். அந்த ஏரி குளங்கள் மூலம் 20,000 ஏக்கர் பாசனம் பெறும். தாம்பிரபரணி பாசன முறையின் கீழ்த் தற்போது பாசனம் பெற்று வரும் 83,000 ஏக்கருக்கும் இந்தத் தேக்கம் அனுகூலமளிக்கும். இந்தத் திட்டத்துக்குச் செலவு மதிப்பு 505 லட்சம் ரூபாய்.

மதகுவாயில் அமைப்புக்கள் தவிர அணைக்கட்டு வேலை முடிந்துவிட்டது. மதகுவாயில் மற்றும் சம்பந்தப்பட்ட வேலைகள் 1958-59 இல் முடிவு பெறும். தாம்பிரபரணி பாசன முறையின்கீழ் உள்ள ஆயக்கட்டு 83,000 ஏக்கருக்குப் பாசனம் உறுதிப்படுத்துவதோடு 20,000 ஏக்கர் முழுமைக்கும் பாசனத்துக்கு நீர் கிடைக்கும்.

**மேட்டூர்க் கால்வாய்த் திட்டம்:** மேட்டூர்த் தேக்கத்தின் உயர் மட்டக் கால்வாயிலிருந்து ஒரு கால்வாய் தோண்டுவதற்கான திட்டம் இது. கீழ்மட்ட மதகிலிருந்து நீர் எடுக்க

வும் இதில் வகையுண்டு. மேட்டூர் ஏரி நீர் மட்டத்தைப் பொறுத்து, எந்த மதகிலிருந்து வேண்டுமானாலும் நீர் எடுக்க இதன் மூலம் வசதி கிடைக்கிறது. பிரதான கால்வாய் 4 மைல் 2 பர்லாங் தூரத்துக்கு மலை அடிவாரத்திலேயே செல்லுகிறது. அதன்பின் கால்வாய் இரண்டாகப் பிரிந்து ஒரு கால்வாய் காவேரியின் வலது புறத்தில் 22¾ மைல் தூரம் சென்று சேலம், கோவை மாவட்டங்களில் 18,000 ஏக்கருக்குப் பாசனமளிக்கும். இடதுபுறக் கால்வாய் விசை அழுத்த (Pressure acqueduct) அமைப்பு மூலம் காவேரியைக் கடந்து, சேலம் மாவட்டத்தில் 27,000 ஏக்கருக்குப் பாசனமளிக்கும். இந்தக் கால்வாயின் நீளம் சுமார் 40 மைல்கள். இந்தத் திட்டத்துக்குத் திருத்தப்பட்ட செலவு மதிப்பீடு 183 லட்சம் ரூபாய்.

இத்திட்ட வேலை முடிவடையும் தறுவாயிலிருக்கிறது. பாக்கி நிற்கும் வேலைகள் 1958–59 இல் முடிவுபெறும். மேற்குக்கரைக் கால்வாய் மூலமான ஆயக்கட்டுப் பிரதேசமான 18,000 ஏக்கரும், கிழக்குக்கரைக் கால்வாய் மூலம் 27,000 ஏச்கரும் 1958–59 இல் பாசனம் பெறும்.

**ஆரணியாறு தேக்கத் திட்டம்:** செங்கற்பட்டு மாவட்டம், திருவள்ளூர் வட்டத்தில் நாகலாபுரம் கிராமத்துக்கு மேற்கே 4 ஆவது மைலில் ஆரணியாற்றுக்கு அமைக்கப்பட்ட தேக்கமும் கீழே 11ஆவது மைலில் ஒரு சிற்றணையும் இந்தத் திட்டத்திலிருந்து சேர்ந்தவையாகும். இந்தத் தேக்கம் 186·3 கோடி கன அடி நீரைத் தேக்க வல்லது. இந்தத் தேக்கம் 2,530 ஏக்கருக்குப் புதிதாகப் பாசன வசதி ஏற்படுத்தும். 8,670 ஏக்கரில் பாசன வசதி உறுதிப்படும். ஒரு பகுதியில் இரண்டாம் போகம் எடுக்கவும் வகை செய்யும். இத்திட்டத்திற்குச் செலவு மதிப்பு 104 லட்சம் ரூபாய்.

இந்தத் தேக்க வமைப்பு வேலை ஏற்கெனவே முடிந்துவிட்டது. ஆந்திர மாநிலத்தில் நீர் பரவும் இடத்தை அரசாங்கம் மேற்கொள்வதில் தாமதம் காரணமாக, இந்தத் தேக்கத்தைப் பயன்படுத்த முடியாமல் இருக்கிறது. நிலத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் வேலை

முடிந்துவிட்டால் 1958–59 இல் இந்த நீர்த்தேக்கத்தைப் பூரணமாகப் பயன்படுத்தலாம்.

அமராவதித் தேக்கத் திட்டம்: கோவை மாவட்டத்தில் உடுமலைப்பேட்டை நகரத்துக்குத் தெற்கே 14 ஆவது மைலில் அமராவதியில் 400 கோடி கன அடி நீர் தேங்கும்படியாகத் தேக்கம் அமைப்பதே இந்தத் திட்டம். இந்த அணை, கட்டிடப் பகுதி, மண் அணைப் பகுதி இரண்டும் கொண்டதாகும். இடதுபுறக் கால்வாய் சுமார் 40 மைல் சென்று 21,000 ஏக்கருக்குப் பாசனமளிக்கும். தற்போதைய பாசனப் பகுதி 32,000 ஏக்கருக்குத் தண்ணீர் கட்டுப்பாடு காலங்களில் நீர் உதவப்படும். இத் திட்டத்துக்குச் செலவு மதிப்பு 297 லட்சம் ரூபாய்.

அணைக் கட்டிட வேலைப்பகுதி மண்அணைப்பகுதி பூரணமாக முடிவடைந்து விட்டது. மதகு முதலிய பாக்கியுள்ள வேலைகள் 1958–59 இல் முடிக்கப்படும். 1958–59 இல் 19,350 ஏக்கருக்கு நீர் விடப்படும் .

வைகைத் தேக்கத் திட்டம்: பெரியாறு ஏரியிலிருந்து வரும் உபரி நீரைத் தேக்கிப் பயன்படுத்துவதற்காக, மதுரை மாவட்டம், பெரியகுளம் வட்டம், நரசிங்கபுரம் கிராமத்தில் வைகை நதிக்குக் குறுக்கே 680 கோடி கன அடி திறனுள்ள தேக்கத்தை அமைப்பதே இந்தத் திட்டம். இந்த அணையிலும் கட்டுமானப் பகுதி, மண் அணைப்பகுதி ஆகிய இரண்டும் உண்டு. இந்தத் திட்டத்தினுல் 20,000 ஏக்கர் புதிதாகப் பாசனம் பெறும். 10,000 ஏக்கருக்குப் பாசனமளிப்பதற்காகப் பேரணை ரெகுலேட்டர் வலப்புறத்தில் 17 மைல் 6 பர்லாங் நீளமுள்ள புதிய கால்வாய் அமைக்கப்படும். பாக்கிப்பிரதேசம் பெரியாறு டெல்டா ஓரத்திலும், சிவகங்கை வட்டத்திலும் இருப்பவையாகும். ஏற்கெனவே உள்ள பெரியாறு கால்வாய்களை அபிவிருத்தி செய்வது மூலம் இதற்குப் பாசன வசதி செய்யலாம். இந்தத் திட்டத்துக்குச் செலவு மதிப்பு 330 லட்சம் ரூபாய்.

அணைக்கட்டிட வேலைப் பகுதி 1957–58 இல் கட்டி முடிக்கப்பட்டது. மண் அணை வேலை முடிந்து வருகிறது.

1958-59 இல் மதகு முதலிய வேலைகள் முடிவடையும். மண் அணைக்கு முன்புறத்திலும் பின்புறத்திலும் பாதுகாப்பு வேலைகள் 1958–59 இல் முடிவடையும். 1958–59 இல் சுமார் 10,000 ஏக்கருக்கு நீர் விடப்படும்.

சாத்தனூர்த் தேக்கத் திட்டம்: வட ஆர்க்காடு மாவட்டம் சாத்தனூர்க் கிராமத்தருகில் பொன்னியாற்றுக்குக் குறுக்கே 460 கோடி கன அடி நீரைத் தேக்கும் திறனுள்ளதாக அமைப்பதே இந்தத் திட்டமாகும். முடிவுக் கட்டத்தில் 810 கோடி கன அடி நீரைத் தேக்கவல்லதாக இந்தத் தேக்கம் இருக்கும். இதுவும் கட்டிட அணையும், மண் அணையும் சேர்ந்த அணைக்கட்டு ஆகும். தேக்கத்துக்குக் கீழே $4\frac{1}{2}$ மைலில் அணைக்கட்டுக்கு இடப் புறத்தில் 22 மைல் நீளக் கால்வாய் மூலம் பாசன வசதி செய்யப்படும். 20,000 ஏக்கர் பாசனம் பெறும். வட ஆர்க்காடு மாவட்டம் (திருவண்ணமலை வட்டத்தில் 8,500 ஏக்கர், செங்கம் வட்டத்தில், 6,800 ஏக்கர், தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோயிலூர் வட்டத்தில் 4,700 ஏக்கர்). ஏற்கெனவே உள்ள 3,300 ஏக்கர் நன்செய் நிலம் இதில் உள்ளடங்கியதாகும். இந்தத் திட்டத்துக்குச் செலவு மதிப்பு 289 லட்சம் ரூபாய்.

கிருஷ்ணகிரி தேக்கத் திட்டம்:—சேலம் மாவட்டம், கிருஷ்ணகிரி வட்டத்தில் பொன்னியாற்றுக்குக் குறுக்கே 240 கோடி கன அடி தேக்கும் திறனுள்ள அணை அமைப்பே இந்தத் திட்டமாகும். கட்டிடப்பகுதி, மண் அணைப்பகுதி இரண்டும் இதில் உண்டு. வலப்புறக்கால்வாய் இடப்புறக் கால்வாய் ஆகிய இரண்டும் சேர்ந்து சுமார் 9,000 ஏக்கருக்குப் பாசனமளிக்கும். அதில் 2,460 ஏக்கர் ஏற்கெனவே உள்ள நன்செய் ஆகும். இந்தத் திட்டத்துக்குச் செலவு மதிப்பு 202·43 லட்சம் ரூபாய்.

அணையின் கட்டிடவேலைப்பகுதி கட்டி முடிந்தது. மதகு, பூங்கா அமைப்பு, கால்வாய் வேலைகளை முடித்தல் முதலியன 1958–59 இல் முற்றுப்பெறும். இத்திட்டத்தின் கீழ் முழுப் பகுதியிலும்1958–59 இல் பாசனத்துக்கு நீர் விடப்படும்.

---

# கஅ. மணிபத்திரன்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

சூழ்ச்சிக்காரன்

முன் காலத்தில் சண்பகாபுரம் என்னும் பட்டணத்தில் மணிபத்திரன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். அவன் ஏதோ ஓர் அலுவலை முன்னிட்டுத் தன்னூரை விட்டுத் தொலை நாட்டிற்குப் போய்ச் சிலகாலம் தங்கிவர வேண்டியவனாக இருந்தான். அவனிடத்தில் பதினாயிரம் வராகன் பொருள் இருந்தது. தொலை நாட்டிற்குப் போகும் போது அப் பொருளை என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. அந்நாளில் இந் நாளைப் போலப் பொருட்காப்பு நிலையங்கள் இல்லை. பொருள் வைத்திருப்பவர்கள் அதை நிலத்தில் புதைத்து வைப்பது தான் பெரும்பாலான வழக்கம். மேலும் அக்காலத்தில் பொருள் பொன்னும் வெள்ளியுமாக இருந்ததே யல்லாமல் இந் நாளைப்போலத் தாளாக இல்லை. ஆகவே அவைகளைப் புதைத்து வைத்தாலும் நீண்ட காலத்திற்குக் கெடாமல் இருக்கும்.

மணிபத்திரன் தன்னுடைய பொருளை நிலத்தில் புதைத்து வைத்துச் செல்ல விரும்பவில்லை. தகுந்த மனிதர்களிடத்தில் கொடுத்து 'வைத்துவிட்டுப் போகவேண்டும் என்று எண்ணினான். அவனுடைய ஊரில் இருந்த மனிதர்களிடத்தில் அவனுக்கு நம்பிக்கையில்லை. ஆகவே அடுத்த ஊருக்குப் போய் அங்காவது நம்பிக்கையான மனிதர்களைக் கண்டுபிடிப்போம் என்று எண்ணினான். அவ்வூரை யடைந்து கடைத்தெருவிற்குச் சென்றான். அங்குப் பலசரக்கு வாணிகஞ் செய்யும் ஒரு வணிகனுடைய கடைக்குப் பக்கத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அந்த வணிகன் மிகுந்த சூழ்ச்சிக்காரன். உலாவிக் கொண்டிருக்கும் மணிபத்திரனுடைய உள்ளக் கருத்தை ஒருவாறு உணர்ந்து கொண்டான். அவனிடத்தில் உள்ள பொருளைத் தகுந்த சூழ்ச்சியால் கைப்பற்ற வேண்டும் என்று எண்ணினான்.

கபட நாடகம்

அப்பொழுது அந்த ஊரில் உள்ள ஒரு கிழவியினுடைய வேலைக்காரி அந்த வணிகனுடைய கடைக்கு நெய் வாங்குவதற்கு வந்தாள். கடையில் இருந்த ஆள் வழக்கம்போல் பணம் வாங்கிக் கொண்டு நெய் கொடுத்து அனுப்பினான். அவ் வேலைக்காரி சிறிது தொலை சென்ற பிறகு வணிகன் தன்னுடைய கூலியாளைப் பார்த்து, "அடே பையா! அந்தக் கிழவி வீட்டு வேலைக்காரி என்ன வாங்கினாள்? நீ எப்படிக் கொடுத்தாய்?" என்று கேட்டான். கூலியாள் வணிகனைப் பார்த்து, "ஐயா! அவள் ஒருபணம் கொடுத்து நெய் கேட்டாள். நான் ஐந்து பலம் கொடுத்து அனுப்பினேன்," என்று மறுமொழி கூறினான். அதனைக் கேட்ட வணிகன், "சிவ சிவ" என்று சொல்லிக் காதுகளை மூடிக்கொண்டான். பிறகு அந்த ஆளைப் பார்த்துச் சினந்து, "நீ என்ன காரியஞ் செய்தனை? இவ்வாறு வாணிகஞ் செய்தால் பிறகு நம்மிடத்திற்கு எவர் வாணிகஞ் செய்யவருவர்? பிறகு எவ்வாறு வாணிகம் நடக்கும்? நாம் பணத்துக்கு ஆறரைப் பலம் வீதம் வாங்கியிருக்கிறோம். அரைப்பலம் ஊதியம் வைத்துக் கொண்டு பணத்துக்கு ஆறு பலம் கொடுக்கக் கூடாதா? வாணிகம் செய்யும் நாம் பிறர் பொருளை நம்முடைய பொருள்போல் எண்ணிச் சாமான் கொடுத்து அனுப்ப வேண்டாமா? திருவள்ளுவ நாயனார்,

*'வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்,*
*பிறவுந் தமபோற் செயின்.'*

என்று சொல்லியிருப்பதை நீ அறியாயா? மிகுதியாக அவாக் கொள்ளலாமா? 'காணியாசை கோடி கேடு' என்னும் பழமொழி தெரியாதா? இனிமேல் நீ இவ்வாறு வாணிகஞ் செய்வாயானால் உன்னை வேலையில் இருந்து விலக்கிப் போடுவேன்," என்று மணிபத்திரன் கேட்குமாறு உரத்துச் சொல்லி நடித்துக் காட்டினான். பிறகு ஓர் ஆளை அனுப்பி அக் கிழவியின் வேலைக்காரியை அழைத்து ஒரு பலம் நெய்யையும் அவளுக்குக் கொடுத்தனுப்பச் செய்தான்.

## மணிபத்திரன் ஏமாற்றம்

இந் நடிப்பைப் பார்த்துக் கொண்டிருந்த மணிபத்திரன் மிகுந்த வியப்படைந்தான். 'இவனைப் போல் தகுதியும் தருமசிந்தையும் பேரவா இன்மையும் உடையவர்களை நாம் எங்கும் கண்டதும் கேட்டதும் இல்லை. இவ் வணிகன் பிறர் பொருளைக் கைப்பற்றுதற்குக் கனவிலும் கருதமாட்டான். நாம் எண்ணி வந்த காரியம் இங்கேதான் நிறைவேறவேண்டும்; நம்முடைய பொருளை இவனிடத்தில் வைத்துப் போனால் யாதும் கெடுதியில்லாமல் மறுபடியும் அடையலாம்' என்று முடிவு செய்தான்.

## மோசக்காரக் கிழவி

இஃதிவ்வாறாக, வேலைக்காரி வாங்கிக் கொண்டுவந்த நெய்யைக் கிழவி பார்த்தாள். அஃது அன்று காலையில் வாங்கிக் கொண்டு வந்ததைக் காட்டிலும் சிறிது அதிகமாயிருப்பதைக் கண்டாள். வேலைக்காரியைப் பார்த்து, "நெய் மிகுதியாக இருக்கிறதே! என்ன செய்தி?" என்று உசாவினாள். அவள் நடந்த செய்திகளை யெல்லாஞ் சொன்னாள். அந்தக் கிழவி அறிவு நுட்பம் உடையவள். வேலைக்காரியைப் பார்த்து, "அப்பொழுது அங்கே புதியவர்கள் யாராவது இருந்தார்களா?" என்று உசாவினாள். வேலைக்காரி கிழவியைப் பார்த்து, "வேறு ஊரான் ஒருவன் கடைக்கு வெளியே உலாவிக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் செல்வனைப் போல் தெரிந்தது," என்று சொன்னாள். 'இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறது' என்று கிழவி ஒருவாறு ஊகித்துணர்ந்தாள். வேலைக்காரியைப் பார்த்துப் "பிறருடைய பொருள் அணுவளவுகூட நமக்கு வேண்டாம். இந்த நெய்யைக் கடைக்காரனிடம் கொண்டுபோ. வழக்கம் போல் ஐந்து பலமே தரச் சொல்லிக் கேள். அவ்வாறு கொடுத்தால் வாங்கிக் கொண்டுவா. இல்லையென்றால் பணத்தை வாங்கிக் கொண்டு வந்துவிடு," என்று சொல்லிக் கண்டித்து அனுப்பினாள். அவ்வாறே அந்த வேலைக்காரி கடைக்காரனிடம் போய்த் தன் தலைவியாகிய கிழவி சொன்ன செய்தியைக் கூறி வழக்கம் போல் ஐந்து பலமே தருமாறு

கேட்டாள். ஐந்து பலம் கொடுப்பதற்குக் கடைக்காரன் இணங்கவில்லை. ஆகவே அவள் பணத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பி வந்துவிட்டாள்.

மணிபத்திரன் வியப்பு

இந் நிகழ்ச்சியை அங்கு உலவிய வண்ணம் பார்த்துக் கொண்டிருந்த மணிபத்திரன் கண்டு மிகுந்த வியப்படைந் தான். 'நாம் இந்தக் கடைக்காரனே பிறர் பொருளை விரும்பாத நற்குணச் செல்வன் என்று எண்ணிக் கொண் டிருந்தோம். இவனினும் அந்தக் கிழவி பிறர் பொருளை விரும்பாத உத்தமி என்று தெரிகின்றது. இன்னும் நன்ருக ஆராய்ந்து பார்ப்போம்' என்று முடிவு செய்தான். வேலைக் காரியைப் பின்தொடர்ந்து அக் கிழவியின் வீட்டுப் பக்கம் போய் அங்கு உலவிக்கொண்டு மேலும் என்ன நடக்கிற தென்று பார்த்துக் கொண்டிருந்தான்.

போலித் துறவி

அந்தச் சமயத்தில் ஒரு பொய்க்கோலத் துறவி பிச்சைக் காக அக் கிழவி வீட்டிற்கு வந்தான். கிழவியானவள் மணி பத்திரன் தன் வீட்டிற்குப் பக்கத்தில் உலவிக் கொண்டிருத் தலைக் கண்டாள். அவனுடைய தோற்றத்தால் அவன் ஒரு பெருஞ் செல்வன் என்று அறிந்து கொண்டாள். அவனிடம் இருக்கும் பொருளைத் தான் கவர்ந்து கொள்வதற்கு முயற்சி செய்யவேண்டும் என்று எண்ணியவளாய் நடிக்கத் தொடங் கினள். போலித் துறவி பிச்சைக்கு வந்திருப்பதைப் பார்த்த வுடன் தன் வேலைக்காரியைப் பார்த்து, "இந்தப் பரதேசிக்கு ஒரு முறம் நிறைய அரிசியும் அதற்கு வேண்டிய சமையற் பொருளும் நாலணப் பணமும் கொடுத்து அனுப்பு. நெடு நேரம் நிற்க வைக்காதே. பிச்சைக்கு வந்த பரதேசிகளைத் தலைவாசலில் நீண்ட நேரம் காத்துக் கொண்டு நிற்கவைப் பது தீவினைக்கு இடமாகும். அவர்கள் காரியத்தை முன்னே முடித்து விட்டுப் பிறகு நம்முடைய வேலையைப் பார்த்தல் வேண்டும். பரதேசிகளுக்கு இடாமல் நாம் சாப்பிடுவது ஆகாது. 'ஐயமிட்டுண்' என்று ஔவையார் கட்டளையிட்

டிருக்கவில்லையா? கடவுள் நமக்குக் கொடுத்திருக்கும் பொருளெல்லாம் எளியவர்களுக்கு உதவி செய்வதற்கே யல்லாமல் வேறெதற்கும் அன்று அவர்களுக்குச் செய்யும் தருமம் ஒன்றே நமக்கு மறுமைக்குத் துணையாய் வரும். மற்றவை யொன்றும் வரமாட்டாது,'' என்று அக்கள்ளக் கிழவி மணிபத்திரன் காதில் விழுமாறு தன் வேலைகாரிக்குக் கட்டளையிட்டாள். வேலைக்காரி தன்னுடைய தலைவியின் கட்டளைப்படியே அரிசி முதலியவற்றைத் துறவிக்குக் கொடுக்க வந்தாள். துறவி இதனைக் கண்டு மிகுந்த வியப்படைந்தான். 'நாளதோறும் இந்தக் கிழவி வீட்டுக்குப் பிச்சைக்கு வருகிறோம். ஒருநாளாவது ஒருபிடி அன்னமும் போடாத இவ்வுத்தமி இன்றைக்கு இவ்வாறு கொடுப்பதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும். இதனை அறிய வேண்டும்' என்று எண்ணினான்; பக்கத்தில் உலாவும் வணிகனைக் கண்டான். 'இவன் பொருள் உடையவன் போல் காணப்படுகிறான். இவனுடைய பொருளைக் கைப் பற்றுவதற்காகத்தான் இந்தக் கிழவி இவ்வாறு வேடிக்கைகள் செய்கிறாள்' என்று உணர்ந்து கொண்டான். 'நல்லது; நாம் இதற்குத் தக்க சூழ்ச்சி செய்து அப் பொருளைக் கைப்பற்றுவோம்' என்று முடிவு செய்தான். வேலைக்காரியைப் பார்த்து, "அம்மா! இவைகளெல்லாம் எனக்கேன்? ஒருபிடி சோறு எனக்குப் போதுமானது. நான் வீடுகள்தோறும் போய் அங்கங்கு ஒரு பிடி சோறு வாங்கிச் சாப்பிட்டுவிட்டுக் கடவுளை எணணிக் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறேன். இந்த அரிசிக்கும் உப்புப் புளி மிளகாய்க்கும் நான் விருப்பம் வைப்பேன் ஆனால் உலகப் பற்றானது சிறிது சிறிதாக என்னை வந்து மூடிக்கொள்ளும். அம்மா! இவைகளெல்லாம் எனக்கு வேண்டியதில்லை. ஒரு பிடி சோறு போடு,'' என்று சொல்லி அவ்விடத்திலேயே வாங்கிச் சாப்பிட்டுவிட்டுக் கையைத் துடைத்துக் கொண்டு போய்விட்டான்.

மணிபத்திரன் மடமை

இக் கபட நாடகத்தையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த மணிபத்திரன் முன்னையினும் மிகுந்த வியப்படைந்

தான். அவன் அறிவற்ற பேதையாகையால் போலித் துறவியை உண்மையான துறவியென்றே நம்பிவிட்டான். 'கிழவியைவிட இப் பரதேசி மிக நல்லவன். உலகப்பற்று ஒழிந்தவன். பொருளில் ஆசையற்றவன். இப் பரதேசியி னிடத்தில்தான் நம்முடைய பொருளை அடைக்கலப் படுத்தி வைக்க வேண்டும்,' என்று இறுதியில் முடிவு செய்தான். மணிபத்திரன் துறவி யிருக்கும் மடத்திற்குப் போய் அவன் அடிகளில் வீழ்ந்து பணிந்தான்; எழுந்து கைகட்டிக் கொண்டு நின்றான். "அடிகாள்! அடியேனுடைய விண்ணப் பத்தைச் செவியேற்றருளுதல் வேண்டும். நான் தொலை நாட்டிற்குப் போய்ச் சில காலம் அங்கிருந்துவிட்டு வரவேண்டியதாக இருக்கிறபடியால் என்னிடத்தில் உள்ள பதினாயிரம் வராகனையும் தங்களிடம் அடைக்கலமாக வைத்துவிட்டுச் செல்ல எண்ணுகிறேன்" என்று சொல்லி மிகுந்த பணிவோடு வேண்டிக்கொண்டான்.

போலித் துறவியின் பொய்ந் நடிப்பு

இதனைக் கேட்டு அந்தப் போலித் துறவியானவன் 'நம்முடைய நல்வினையே நல்வினை. பொருள் வந்தால் இப்படி வலிய வந்து சேருவதும் உண்டோ?' என்று எண்ணிப் பெருங் களிப்படைந்தான். "இந்த மடத்தில் உனக்குப் பிடித்தமான இடத்தில் புதைத்து வைத்துவிட்டுப் போய் மறுபடியும் உனக்கு விருப்பமானபோது வந்து எடுத்துக்கொள்," என்று சொன்னான். மணிபத்திரன் அவ்வாறே புதைத்துவிட்டு வெளி நாட்டுக்குப் போய்ச் சில காலம் பொறுத்துத் திரும்பி வந்தான்.

பொருள் மறைதல்

மணிபத்திரன் போலித் துறவியின் மடத்திற்குப் போய்த் தான் புதைத்து வைத்த இடத்தில் தோண்டிப் பார்த்தான். முன்பே பரதேசி அப்பொருளை அப்புறப்படுத்தி விட்டபடியால் அவ்விடத்தில் பொருளைக் காணாமல் பரதேசி யைப் பார்த்து, "அடிகாள்! பொருளைக் காணோமே?" என்று கேட்டான். துறவியானவன் "நீ புதைத்த இடத்

தைக்கூட நான் பார்க்கவில்லையே. நன்றாகத் தேடிப் பார்," என்று சொன்னான். மணிபத்திரன் பலவிடங்களில் தேடிப் பார்த்தும் காணாமையால் கிழவியின் வீட்டுப் பக்கம்போய் வாடிய முகத்துடன் உலாவிக் கொண்டிருந்தான்.

கிழவியின் சூழ்ச்சி

கிழவியானவள் மணிபத்திரனைப பார்த்து "நீ கவலைப் பட்டுக்கொண்டிருக்கக் காரணம் யாது?'' என்று கேட்டாள். மணிபத்திரன் வரலாறு முழுவதையுஞ் சொல்லியழுதான். "நான் அப்பொருள் முழுவதையும் உனக்கு மீட்டுத் தந்தால் நீ எனக்கு யாது கொடுப்பாய்?'' என்று கிழவி கேட்டாள். "ஆயிரம் வராகன், தருகிறேன்'' என்று மணிபத்திரன் உறுதிமொழி கூறினான். கிழவி, "அப்படியானால் நான் இன்று மாலையில் மடத்துக்குப் போகிறேன். அப்பொழுது அங்கு வருவாயானால் உன் பொருளை நீ பெறுவதற்கு வழி செய்கிறேன்,'' என்று சொன்னாள். மணிபத்திரன் "அவ்வாறே வருகிறேன்," என்று ஒத்துக்கொண்டான்.

போலித் துறவி ஏமாறுதல்

கிழவியானவள் தன்னிடத்தில் இருந்த மணியணிகளையெல்லாம் ஒரு தாம்பாளத்தில் எடுத்து வைத்துத் துணியால் மூடினாள். பிறகு தன்னுடைய வேலைக்காரியைப் பார்த்து, "நான் பரதேசி மடத்துக்குப் போகிறேன். நீ சிறிது நேரம் சென்ற பிறகு அங்கு வந்து, "அம்மா! ஊருக்குப் போன உன்னுடைய மகன் வந்துவிட்டார். உன்னை உடனே அழைத்துக் கொண்டுவரச் சொன்னார்," என்று விரைவாக ஓடிவந்து என்னிடத்திற் சொல்வாயாக,'' என்று கூறிவிட்டுத் தான் தாம்பாளத்தையெடுத்துக் கொண்டு பரதேசியிடஞ் சென்றாள். சென்று பரதேசியைப் பார்த்து, "அடிகாள்! என்னுடைய அருமைப் புதல்வன் காசிக்குப் போய் மூன்று திங்களாக வரவில்லை. நான் போய்ப் பார்த்து அவனை இங்கு அழைத்துக்கொண்டு வரவேண்டும். இந்த அணிகலன்களைத் தங்களிடத்தில் அடைக்கலமாக வைத்துவிட்டுப் போய் வரவேண்டும் என்று எண்ணுகிறேன்" என்றாள்.

அப்போது துறவி கிழவியைப் பார்த்து, "உனக்கு விருப்பமான இடத்தில் புதைத்துவைத்து வேண்டியபோது வந்து எடுத்துக்கொண்டு போகலாம்," என்று கூறினன். அவ்வமையம் மணிபத்திரன் வந்து, "அடிகாள்! தங்களிடத்தில் வைத்துப்போன பதினயிரம் வராகனையும் வாங்கிக்கொண்டு போவதற்கு வந்தேன்," என்று சொன்னன். போலித் துறவி இதனைக் கேட்டுத் திடுக்கிட்டான். 'இஃதென்ன வம்பாக முடிந்தது? நாம் இவன் கொடுத்த அற்பத் தொகையான பதினயிரம் வராகனுக்கு அவாக் கொண்டால் இலட்சக்கணக்காக விலை மதிக்கத்தக்க இந்த அணிகலன்களை யெல்லாம் இழந்துபோகும்படியாக நேரிடலாம்' என்று எண்ணியவனய் மணிபத்திரனைப் பார்த்து, "அப்பா! உன்னுடைய பொருள் அதோ புதைக்கப்பட்டிருக்கிறது. தோண்டி யெடுத்துக்கொண்டுபோ," என்று சொன்னன். மணிபத்திரன் மிகுந்த மகிழ்ச்சியோடு போய்த் தன்னுடைய பொருளைத் தோண்டி யெடுத்துக் கொண்டான். அப்பொழுது வேலைக்காரி ஓடிவந்து, "அம்மா உன்னுடைய செல்வப் புதல்வர் ஊரில் இருந்து வந்துவிட்டார். உன்னைப் பார்க்க மிகுந்த விருப்பமாக இருக்கிருர். உடனே கூப்பிட்டுக்கொண்டு வரச் சொன்னர்," என்று சொன்னள். கிழவியானவள் போலித் துறவியைப் பார்த்து, "அடிகாள்! என்னுடைய மகன் வந்து சேர்ந்துவிட்டான். நான் இனிமேல் ஊர்ப்பயணம் போய் அவனை அழைத்துக் கொண்டு வரவேண்டியது இல்லை," என்று கூறிவிட்டு அணிகலன்கள் வைத்திருந்த தாம்பாளத்தைத் துணியால் மூடியெடுத்து வேலைக்காரியிடம் கொடுத்துவிட்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் சென்ருள்.

முடிவுரை

பிறகு மணிபத்திரன் தான் கூறியபடியே கிழவிக்கு ஆயிரம் வராகன் கொடுத்துவிட்டுத் தன்னுடைய ஊருக்குப் போய்ச் சேர்ந்தான். நல்லறிவுக் கருத்துக்கள் பல இக் கதையால் பெறப்படுகின்றன.

# ௧௯. இளைஞர்களுக்கு அறிவுரை

[திரு. நெ. து. சுந்தரவடிவேலு, M.A.,L.T.,]

மாணவ மாணவியர்களே,

உங்கள் பருவம் மீண்டும் கிடைக்காத பருவம்; பொன் போற் போற்றிப் பயன்படுத்தப்பட வேண்டிய பருவம். வாய்ப்போ கிடைத்தற்கரிய வாய்ப்பு. தொடக்கப் பள்ளிக் கூடங்களே இல்லாத ஆயிரக்கணக்கான சிற்றூர்களும், படிக்க வாய்ப்பில்லாத பல இலட்சம் மக்களும் உள்ள இந் நாட்டில் உங்களுக்காவது ஏதோ படிக்க வாய்ப்புக் கிடைத் திருக்கிறதென்றால், அதை எளிதானதாகவோ அலட்சியப் படுத்தக்கூடியதாகவோ கருதாதீர்கள்; இப் பருவத்தையும், வாய்ப்பையும் நன்றாக முழுதும் பயன்படுத்திக்கொள்ளுங் கள்; மாணவப் பருவத்தில் கற்க வேண்டுவனவெல்லாம் கற்றுக்கொள்ளுங்கள்; பெறவேண்டிய திறமைகளையெல் லாம் பெற்றுக்கொள்ளுங்கள்; தேடிக்கொள்ள வேண்டுவன வெல்லாம் தேடிக்கொள்ளுங்கள்.

## கல்வி கரையற்றது

கற்கவேண்டுபவை உங்கள் பாட நூல்களோடு முடிந்து விட்டனவாக எண்ணாதீர்கள். கற்கவேண்டுபவைகளை அறிமுகப்படுத்துபவைகளே அவை. பாட நூல்களுக்கு அப்பால்—பரீட்சைக்குத் தொடர்பில்லாதவை—பலவற்றை நீங்கள் கற்றுக் கொள்ளவேண்டும்; படிப்பை முடித்தபின், அவைகளைக் கற்கலாம் என்று மட்டும் காலந் தாழ்த்தா தீர்கள்.

வெறும் ஏட்டுப் படிப்புத் தகவல்களைத்தான் கொடுக்கும்; அறிவொளியைத்தான் வீசும். அவற்றை வாழ்க்கையோடு இணைத்துப் பயன்பெறும் திறமையை நீங்கள் பெற முயல வேண்டும். வாழ்க்கைக்கு ஊக்கம், உறுதி, உழைப்பு, தன்னம்பிக்கை இன்றியமையாதவை. அவற்றையெல்லாம் நீங்கள் இடைவிடாத பயிற்சியாற் பெறலாம்; அப்படிப் பெறத் தவறவேண்டா.

## பிஞ்சிற் பழுக்கவேண்டா

இளம் பருவத்தே உங்களை மயக்கக் கூடியவை பற்பல.

*"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு."*

என்ற அறவுரையை மனத்திற்கொண்டு கல்வியிலே உங்கள் முழுக் கவனத்தையும் செலுத்துங்கள். கல்வியின் பகுதியாகத்தான் நீங்கள் சமூகம், பொருளாதாரம், அரசியல் ஆகியவற்றைப் படித்துச் சிந்தித்துத் தெளிவுபெறவேண்டும். மாணவர்களாக இருக்கும்போதே அரசியல்வாதிகளாகி விடவேண்டா என்று மட்டும் அறிவுறுத்த விரும்புகிறேன். எதற்கும் காலமுண்டு. காலம் வரும்போது கருத்தோடு செயலாற்ற ஆயத்தம் செய்துகொள்ள வேண்டுவதே மாணவர் கடமை. மாணவர்களாக இருக்கையிலேயே அரசியல்வாதிகளாவது பிஞ்சில் பழுப்பதாகும். அப் பழத்தின் சுவையும் பயனும் எப்படி இருக்குமென்பது நீங்கள் அறியாததன்று.

## உடலோம்பல்

உடலோம்பலின் இன்றியமையாமையை நான் அதிகம் வற்புறுத்தத் தேவை இல்லை. அதன் தேவையையும் சிறப்பையும் உணர்ந்திருந்தாலும் வசதிக் குறைவும் வேறு பொழுது போக்குக் கவர்ச்சிகளும் உடற் பயிற்சியை மறக்கச் செய்து வருகின்றன. இது பெருந்தீங்கு. "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே", என்பது பொருள் நிறைந்த பொன்மொழி. உடல் வலிமை இல்லாதவன் எல்லா வசதிகளும் பெற்றிருந்தாலும், தனக்கும் பிறருக்கும் முழுப் பயன் அற்றவனாகத்தான் இருக்க நேரிடும். எனவே, எப்படியும் ஒழுங்காக உடற்பயிற்சி செய்ய வழிவகை செய்து கொள்ளுங்கள்.

## ஒப்புரவு

*"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்."*

என்ற பொய்யாமொழியையும் உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். ஏட்டுப் படிப்பு அல்லது தொழிலறிவு

ஆகியவற்றை ஊட்டுவதோடு கல்வி நிற்கக்கூடாது. அது நமக்குக் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் கற்பிக்கவேண்டும். ஒழுக்கம் என்னும்போது வழக்கமாகக் கூறும் ஐம்பெருங் குற்றங்களை நீக்குவதைமட்டும் நான் குறிக்கவில்லை. மக்களோடு மக்கள் எப்படிப் பழகுவது, எங்கெங்கு எப்படி நடப்பது, பொது இடங்களில் எப்படி நடப்பது என்பவை களையும் சேர்த்துத்தான் குறிக்கிறேன். கட்டுப்பாடும் ஒழுங்கும் அற்ற அறிவாளி, கூடிய இடமெல்லாம் புரண் டோடிக் கண்டதையெல்லாம் பாழாக்கும் காட்டாறுபோன்று தீமை பயப்பவன் ஆவான். எனவே, கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் இளமையிலேயே கற்றுக்கொள்க.

## கற்றதனால் ஆய பயன்

நல்ல உறுதியான உடலும், கூரிய மதியும், கட்டுப் பாடும், ஒழுங்கும் எதற்குப் பயன்படவேண்டும்? யாருக்குப் பயன்படவேண்டும்? ஆக்கத்திற்கா? அழிவிற்கா? தனக்கா? பிறருக்கா?

அணுவைப் பிளந்து ஆற்றல் மிக்க சக்தியைக் கண்ட மனித சமுதாயம், அச் சக்தியால் உலகம் என்று அழிக்கப் படுமோ என அஞ்சி அஞ்சி அல்லலுறுகின்றதன்றோ? காரணம் என்ன? ஆக்கவேலைக்கு அவற்றைப் பயன் படுத்தத் தவறியதேயாகும். அறிவும் வலிவும் வளர்ந்த அளவுக்கு மக்களின் உள்ளம் வளர்ந்தபாடில்லை. ஆகவே, வலிமையெல்லாம்—அறிவெல்லாம்—இதுவரை "தான்" என்கிற சிறையிலிருந்து வெளிப்படவில்லை. தன் பெண்டு, தன் பிள்ளை என்கிற தன்னலம், பொதுநலத்திற்கு ஊறுக நிற்கிறது. "தான்" என்பதைக் குறைத்து "நாம்" என்பதைப் பெருக்கப் பெருக்கத்தான், நாம் மக்கள் நிலையை எய்துவோம். தனி உணர்ச்சி குறைந்து, சமூக உணர்ச்சி வளர வளரத்தான் நம் துன்பங்கள் தொலையும்.

## மக்கட் பண்பு

பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் உள்ள குறள்,

"அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்."

என்று இடித்துரைப்பதை மறந்துவிடாதீர்கள். கல்வியின் நோக்கம் மக்கட் பண்பைப் பெறுவதே. எது மக்கட் பண்பு என்று சிறிது சிந்திப்போம். மக்கட் பண்பாவது பிறிதிநோய் தந்நோய்போல் நோக்குதலாகும். எனவே, மக்கள் துன்பத்தைத் தன் துன்பமாக எவன் கருதுகிறானோ, அவனே கல்விமான். மற்றவர்கள் எவ்வளவு அறிந்திருந்தாலும் எத்துணைப் பட்டங்கள் பெற்றிருந்தாலும், எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தாலும் மக்கள் நிலையை அடையாதவர்களே. மக்கள் நிலையை அடையவே நாம் எல்லோரும் விரும்புவோம் என்பது உறுதி. எனவே, நம்மைச் சூழ்ந்துள்ளோர் அடைகிற துன்பங்கள் எவை எவை, அவற்றை நீக்க வழிகள் எவை எவை என்று கவனிப்போம்.

## துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும்

வறுமை, அதன் விளைவான பட்டினி, அறியாமை, அதன் விளைவான மூடநம்பிக்கைகள், மூடப்பழக்க வழக்கங்கள்; சாதி ஏற்றத் தாழ்வு, அதன் விளைவான சாதிச் சண்டை, சமய வெறி, அதன் விளைவான சமயப் போராட்டங்கள்; இவற்றின் கூட்டு விளைவான அமைதியின்மை—ஆகிய துன்பங்களை நாம் அனுபவித்து வருகிறோம். இத்துன்பங்களை நீக்க முடியுமா? இப்படியே விட்டு வைக்கலாமா? நீக்க முடியும், நீக்கவேண்டும் என்பதே என் முடிவு. பிற நாடுகள் செய்து காட்டிய முடிவுமாகும்.

## நல்குரவு

வறுமை ஒரு சமூகத் தொற்று நோய். அதைப் போக்குவது சமூகத்தின் முதற் கடமை. அதனை எவ்வழியிற் போக்குவது என்பதை நீங்கள் சிந்திக்கவேண்டும். உழைப்பைப் பெருக்கி உற்பத்தியைப் பெருக்கினால் எல்லோரும் வறுமையின்றி, வாழலாம் என்பது உண்மையா? பெற்ற பொருள்களை இப்போதுள்ள முறைக்கு மாறாக விநியோகிப்பது வாயிலாக வறுமையைப் போக்குவதா? என்ற

கேள்விகளுக்குப் பதில் என்னிடத்திலிருந்து எதிர்பார்க்கா தீர்கள். இரண்டில் எதைக் கொண்டாலும், இரண்டும் மறந்துவிட்ட மற்ருென்றை நான் நினைவூட்டக் கடமைப் பட்டுள்ளேன். அது எது? செலவு முறை; நம் மக்களின் செலவு முறையைக் குறிப்பிடுகிறேன். மயக்கத்திற்கோ, வீண் பெருமைக்கோ ஆனவற்றிற்கு நாம் ஏராளமான செல்வத்தைப் பாழாக்குகிருேம். அவற்றைத் தடுத்து வாழ்க்கையை நிரந்தரமாக நல்வழிப்படுத்தும் துறைகளுக்கு மிகுதியாகச் செலவிடக் கற்றுக்கொள்ளவேண்டும். அள வறிந்து செலவிடத் தெரியாத மக்களை எம்முறையும் காப்பாற்ருது என்பதை மறவாதீர்கள்.

## அறியாமை

தற்குறித்தன்மை நமக்குள்ள அடுத்த துன்பம். மக்கட் பெருக்கத்திற்குப் பெயர்போனதைப் போன்றே தற்குறித் தன்மைக்கும் நம் நாடு உலகறிந்ததாய் இருக்கிறது. அறி யாமையின் விளைவாய் நம்மிடையே உள்ள மூட நம்பிக்கை களும் கண்மூடி வழக்கங்களும் எண்ணிறந்தன. நாம் மக்கள் தன்மையை முழுதும் அடைவதற்குக் குறுக்கே நிற்கும் இவற்றையெல்லாம் விரைவில் குழிதோண்டிப் புதைக்கவேண்டும். மன்னர்களாகிவிட்டவர்களை மண்ணுங் கட்டி நிலையில் விட்டுவைப்பது இழிவுமட்டு மன்று, பெருந் தீங்குமாகும். எனவே, இத் தலைமுறையின் முழுக் கவனமும் முயற்சியும்,

"எல்லோரும் கல்வி கற்றுப்
பன்னரும் கலைஞானத்தால்,
பராக் கிரமத்தால், அன்பால்,
உன்னத இமயமலை போல்"

கீர்த்தி ஓங்கிடுவதற்கான பணிகளில் திருப்பப்படவேண்டும். இதற்கான பொறுப்பையும் உழைப்பையும் நாட்டு அரசிற்கு மட்டுமே விட்டுவிடாமல் பொதுமக்களும் பகிர்ந்து கொள்ள வேண்டும்; விரைவில் பகிர்ந்துகொண்டு வேகமாகப் பணி புரியவேண்டும். அப்படிப் பகிர்ந்துகொள்ள முடியுமா? என்ற ஐயம் எழலாம். முடியுமென்பதில் எனக்கு ஐய

மில்லை. இன்றும் நாட்டில் நடக்கும் தர்மங்களைப் பார்த் தவர்களுக்கு ஐயமிராது. நாட்டில் நடக்கும் அறங்களை யெல்லாம் கல்விக்கூடங்கள் மூலமாக நடக்கும்படி செய்வது நம்முடைய கடமை.

*" அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்*
*ஆல யம்பதி னாயிரம் நாட்டல்*
*பின்ன ருள்ள தருமங்கள் யாவும்*
*பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்*
*அன்ன யாவினும் புண்ணியங் கோடி*
*ஆங்கொர் ஏழைக் கெழுத்தறி வித்தல் "*

என்ற காலத்திற்கேற்ற நல்லுரையை எடுத்துக் காட்டிக் கல்விப் பணிக்கான எல்லா உதவிகளையும் செய்யக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## சாதி வேற்றுமை

சாதி உயர்வு தாழ்வு நம்மைப் பிடித்துள்ள மற்றொரு பெரு நோய்; தமிழர்கள் நல்ல நிலையில் இருந்த காலத்தே இல்லாத நோய், இடையிலே பெற்ற நோய்; விரைவில் ஒழிக்கப்பட வேண்டிய நோய். உயர்வு தாழ்வு எங்கு இல்லை? ஒவ்வோர் இடத்தில் ஒவ்வோர் உருவில் இருக் கிறது என்கிற முடக்குவாதம் நம்மை முன்னேற வொட்டா மல் தடுக்கும். அவ்வாதத்திற்குச் செவிகொடுத்தால் நீங்கள் மக்கள் தன்மையை எட்ட முடியாது.

*" எல்லோரும் ஓர் குலம்,*
*எல்லோரும் ஓர் இனம்."*

*" யாதும் ஊரே யாவரும் கேளிர்."*

*" பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்."*

என்ற நல்லுரைகளை நாம் பல்லாண்டுகளாகப் பலப்பல மேடைகளிலும் கேட்டுத்தான் வருகிறோம். இவற்றைத் தமிழனின் உயர்விற்கு எடுத்துக்காட்டாகப் பயன்படுத்திக் கொண்டு வருகிறோம். ஆனால் நாம் உண்மையிலே சாதி களை விட்டு மக்களாகும் வழியில் நடக்கிறோமா? தேர்தல் களில் ஆதரவு தேடும் முறையைக் கவனித்தாலே போதுமே, நம்மைவிட்டுச் சாதிவெறி போகவில்லை என்பதற்குக்

காரணம் என்ன? சாதிகளை வைத்துக்கொண்டே பேச்சளவில் சாதிப்பற்று வேண்டாமென்று கூறி, வெறும் பொழுது போக்காக வேலை செய்துகொண்டிருக்கிறோம். எனவே, இடமும் காலமும் கிடைத்தபோது சாதிவெறி முழு ஆட்டம் ஆடுகிறது. மக்கட் பண்பை மறைக்கும் சாதிப் பற்று ஒழியவேண்டுமென்றால், சாதிகள் இல்லாத நிலை ஏற்பட வேண்டாவா? அதற்கான வழியை இனித்தானா அறிந்துகொள்ளப் போகிறீர்கள்? அந்நிலை வெறும் விறு விறுப்பான பேச்சால்மட்டும் கிட்டுமா? கூட்டத்திற் கூடி நின்று கூடிப் பிதற்றிவிட்டு நாட்டத்திற் கொள்ளாவிட்டால் ஏற்படுமா? நெஞ்சில் உரத்தோடு நேர்மைத் திறனோடு எல்லாச் செயல்களிலும் சாதியை நீக்கினால் அன்றோ முடியும்? அந்த நேர்மையும் உரமும் உங்களிடம் எதிர் பார்ப்பது அதிகமா?

## முடிவுரை

உருவால் மக்களாய்ப் பிறந்த நாம், நிலையால் மக்களாகாமல் இருப்பதற்கான காரணங்கள் சிலவற்றை உங்களிடம் காட்டினேன். அவற்றைச் சிந்தித்துப் பார்ப்பீர்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதன் விளைவாக உங்களுக்குத் தெளிவு ஏற்படும் என்பதிலும் எனக்கு ஐயமில்லை. உங்கள் தெளிவில் பிறக்கும் நேரிய வழியில் நடக்க உரமும் உறுதியும் இருக்குமா என்பதைக் காலந்தான் காட்டவேண்டும். அத்தகைய உரமும் உறுதியும் பெருக உங்களுக்குத் துணையாக நிற்கும்படி நாட்டின் நலத்தில் நாட்டமுடைய பெரியோர்களை வணக்கத்துடன் வேண்டிக் கொள்கிறேன்.

*"கற்க கசடறக் கற்பவை; கற்றபின்,*
*நிற்க அதற்குத் தக."*

என்று வள்ளுவர் காட்டிய வழியை நினைவூட்டுவதோடு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

# குறிப்புரை

## செய்யுட் பகுதி

### க. வாழ்த்து

#### 1. கடவுள் வாழ்த்து

ஆசிரியர் சேக்கிழாரடிகள்; சைவசமயத் திருமுறைகளில் ஒன்றாகிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தை இயற்றியவர்; தொண்டை நாட்டுக் குன்றத்தூரில் பிறந்தவர்; அநபாய சோழனிடத்தில் முதல் மந்திரியாக இருந்தவர்; உத்தம சோழப் பல்லவர், தொண்டர்சீர் பரவுவார் என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்றவர். காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று அறிஞர் கூறுவர். இச் செய்யுள் பெரியபுராணத்தில் உள்ளது.

அருஞ்சொற் பொருள் :

உலகு - உலக மக்கள். நீர் - கங்கை நீர். வேணியன் - சடையை யுடையவன். அலகு+இல்=அலகில் - அளவு இல்லாத. சோதியன்- ஒளி வடிவமானவன். வணங்குவாம்: தன்மைப் பன்மை வினைமுற்று.

#### 2. மொழி வாழ்த்து

பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளை அவர்கள் ; திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவநூற் பேராசிரியராக இருந்தவர். பிறப்பிடம்: ஆலப்புழை என்னும் ஊர். தந்தையார் பெருமாள் பிள்ளை, தாயார் மாடத்தியம்மாள். கோடகநல்லூர்ச் சுந்தர சுவாமிகள் என்னும் மெய்ஞ்ஞானியாரிடம் சமய நூல்களைக் கற்று மேன்மையுற்றவர். திருஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி, நூற்றொகை விளக்கம் முதலிய நூல்களை இயற்றியவர். கி. பி. 1855 இல் தோன்றிக் கி. பி. 1897 வரை இருந்தவர். இச் செய்யுள் இவரியற்றிய மனோன்மணீயம் என்னும் நூலில் உள்ளது.

அருஞ்சொற் பொருள் :

வதனம் - முகம். பிறைநுதல் - பிறைபோன்ற நெற்றி; உவமைத் தொகை; திலகம் - பொட்டு. தமிழ் அணங்கு - தமிழ்த்தாய்.

நிலமடந்தையாகிய பெண்ணுக்குப் பரதகண்டம் முகமாகவும், தெக்கணம் நெற்றியாகவும், திராவிடநாடு திலகமாகவும், விளங்குகின்றன என்றும், திலக வாசனை போலத் தமிழ்மணம் வீசுகிறது என்றும் இச் செய்யுள் கூறுகிறது.

#### 3. நாட்டு வாழ்த்து

அமரகவி பாரதியார். இவர் நாட்டுக்கும், மொழிக்கும் தொண்டு புரிந்த பேரறிஞர். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள எட்டயபுரத்திற் பிறந்தவர். தந்தையார் பெயர் சின்னசாமி ஐயர் என்பது. தாயார் இலக்குமி அம்மாள். காலம் கி. பி. 1882—1921. இவர் நாடு

விடுதலை பெறவும் தமிழ்மொழி வளர்ச்சி பெறவும் கவிதைகளையும் கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டார். அவை பாரதியார் பாடல்கள், கட்டுரைகள் என்னும் பெயர்களில் வெளிவந்துள்ளன. அவை சமூக சீர்திருத்தக் கருத்துக்களை உடையவை.

அருஞ்சொற் பொருள்:

சாத்திரம் - நூல். பார் - பூமி. வான்புகழ் - சிறந்த புகழ். மணி ஆரம் - மாணிக்க மாலை. திருவள்ளுவர் பிறந்ததால் தமிழ்நாடு உலகப் புகழ்பெற்றது என்பது கருத்து.

வினாக்கள்:

1. இறைவன் என்ன என்ன தன்மைகளை உடையவன்?
2. நிலமடந்தையின் முகம், நெற்றி, திலகம் என்று கூறப்படுவன எவை?
3. தமிழணங்கு எச் சிறப்புடன் விளங்குகிறாள்?
4. தமிழ்நாடு என்ன என்ன பெருமைகளை உடையது?

---

## உ. அறவுரை

### 1. திருக்குறள்

திருக்குறள், சங்கநூல் வகையுள் பதினெண்கீழ்க் கணக்கைச் சேர்ந்தது. மக்கள் அடையவேண்டிய உறுதிப் பொருள்களாகிய அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றினையும் விளக்கிக் கூறுவது. சாதி சமய வேறுபாடின்றி உலகமக்கள் அனைவரும் விரும்பி ஏற்றுக் கொள்ளும் சிறந்த கருத்துக்களையுடையது. உலகில் உள்ள பல மொழியாளரால் தத்தம் மொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்றுக் கற்கப் படுகின்றது. இதனை இயற்றியவர் திருவள்ளுவர். கி. பி. முதல் நூற்றாண்டுக்கு முன் இருந்தவர். இவர் சென்னையை அடுத்த மயிலையில் வாழ்ந்தவர் என்று கூறுவர்.

அருஞ்சொற் பொருள்:

அறத்துப்பால் — பாயிரம்

1. சேராதார் - நினையாதவர். இறைவன் அடிகளை நினைத்து வழிபட்டவர் பிறவியாகிய பெரிய கடலை நீந்திக் கடப்பர்.
2. சார்வாய் - துணையாய் நின்று. எடுப்பதூஉம் - வளர்ப்பதும். எல்லாம் மழை - எல்லாம் வல்லது மழை. கெடுப்பதூஉம், எடுப்பதூஉம் என்பன இன்னிசை அளபெடைகள்.
3. தோட்டி - யானையை அடக்கப் பயன்படும் இரும்புக் கருவி, அங்குசம். உரன் - அறிவு வன்மை. ஐந்து - ஐந்து பொறிகள், (மெய், வாய், கண், மூக்கு, செவி எனபன). வரன் என்னும் வைப்பு - மேலானதென்று கூறப்படும் வீட்டுலகம். ஐம்பொறிகளையும் அடக்கி ஆள்பவன் விண்ணுலகத்திற் பிறந்து இன்பம் துய்ப்பான் என்பது கருத்து. உரனைத் தோட்டி என்று உருவகம் செய்து ஐம்பொறிகளை யானை என உருவகம் செய்யாமையால் இஃது ஏகதேச உருவக அணி ஆகும்.

4. நிறைமொழி - அருளுடன் வாழ்த்திக் கூறினாலும், சினந்து வைது கூறினாலும் அவ்வப் பயனைத் தரும் மொழி. மாந்தர் - மனிதர். இது துறவிகளை யுணர்த்தியது குறிப்பால். மறை மொழி - துறந்தார் வாயிலிருந்து வரும் வேதமொழி போன்ற ஆணை மொழிகள்

5. மாசு இலன் ஆதல் - குற்றம் இல்லாதவன் ஆகுக. பிற ஆகுலநீர - மற்றவை ஆரவாரத்தன்மை உடையன.

6. அன்று அறிவாம் - இறக்கும்பொழுது அறிந்து செய்வோம். பொன்றுங்கால்-உடம்பினின்று உயிர் போங்காலத்து. பொன்றாத்துணை-அழியாத துணையாகும். செய்க: வியங்கோள் வினை முற்று. பொன்றா : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

7. வீழ்நாள் - அறஞ் செய்யாது கழிந்த நாள். நன்று ஆற்றின் - அறம் செய்யின். வாழ்நாள் - மறுபிறப்பில் உடம்பில் உயிர் கூடிவாழும் நாள். படாஅமை: இசைநிறை அளபெடை.

## இல்லறவியல்

இல்வாழ்க்கையின் இயல்பு கூறுவது.

8. அன்பு - மனைவி மக்கள் முதலியவர்களிடத்துக் கொள்ளும் அன்பு. அறன் - பகுத்துண்டலாகிய அறம். இல்லறத்திற்கு அன்பே பண்பாகும்; அறம் பயனாகும்.

9. அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே - என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. அஃது - துறவறம். பிறன்பழிப்பது - பிறரால் பழிக்கப்படும் குற்றம்.

10. மனை மாட்சி - இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கை. எனைமாட்சித்து ஆயினும் - என்ன பெருமை யுடையதாய் இருப்பினும்.

11. தற்காத்தல் - கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்தல். தகைசான்ற சொல் - நன்மை பொருந்திய புகழ். சோர்வு இலாள் - நற்குண நற்செயல்களில் தளர்ச்சி இல்லாதவள்.

12. என்பு இலதனை - எலும்பு இல்லாத புழு முதலியவற்றின் உடலினை. காயும் - வருத்தமடையச் செய்யும். அன்பு இலதனை - அன்பு இல்லாத உயிரை. அறம் - அறக்கடவுள்.

13. யாக்கை யகத்து - உடம்பின் அகத்தின்கண் நின்று, உறுப்பு அன்பு - இல்லறத்திற்கு உறுப்பாகிய அன்பு. புறத்து உறுப்பு - இடம், பொருள், ஏவல் என்பன.

14. செல் விருந்து - தன்கண் வந்த விருந்தினர். வரு விருந்து - வரக்கூடிய விருந்தினர். ஓம்பி - பாதுகாத்து.

15. மிச்சில் - எஞ்சிய உணவு. புலம் - விளைநிலம். வித்து - விதை விருந்து ஓம்புவாரது நிலம் நன்கு விளையும் என்பது கருத்து.

16. இன்பு உறூஉம் - இன்பத்தை மிகுவிக்கும். துன்பு உறூஉம்- துன்பத்தை மிகுவிக்கும். துவ்வாமை - வறுமை.

17. தினை - ஒருவகைத் தானியம்; சிறிது அளவு என்பது கருத்து. பனை - பெரிய அளவு பயன தெரிவார் - சிறிய உதவி செய்யினும் பெரிய உதவியாகக் கருதுவதால் வரும் நன்மை அறிபவர்.

18. கொன்று அன்ன - கொன்றாற் போன்ற. இன்னா - துன்பம். நன்று ஒன்று - ஒரு நன்மையை. உள்ள - நினைக்க.

19. பிறவும் தமபோல் செயின் - பிறருடைய பொருளையும் தம் பொருள்போலப் பாதுகாத்துச் செய்தால். வாணிகம் - சிறந்த வாணிகம் ஆகும்.

20. ஒருமை - ஒரு பிறப்பு. ஐந்து - ஐந்து பொறிகள். எழுமை - ஏழு பிறப்பு. ஏமாப்பு உடைத்து - காவலாயிருந்து உதவி செய்யும்.

21. யா - எவற்றையும் - தம்மாற் காக்கத்தகும் எல்லாவற்றையும். நா - நாக்கு. காக்க - காத்துக்கொள்ளுக. சொல் இழுக்கு - சொற் குற்றம். சோகாப்பர் - வருந்துவர்.

22. குடிமை - நற்குடிப் பிறப்பாகும். இழுக்கம் - ஒழுக்கத்தி னின்று தவறுதல்.

23. உரவோர் - மனவலிமை யுடையவர். ஒல்கார் - சுருங்கார் (தளர்ச்சி யடையார்) ஏதம் - குற்றம். படுபாக்கு - உண் டாதல். படு+பாக்கு: படு: பகுதி. பாக்கு: விகுதி, இது தொழிற் பெயர்.

24. நோக்காத - மனத்தில் நினையாத ஆன்ற ஒழுக்கு - நிரம்பிய ஒழுக்கம்.

25. இன்மையுள் இன்மை - வறுமையினும் இழிந்த வறுமை. விருந்து ஓரால் - விருந்தினரை ஏற்காது நீக்குதல் வன்மையுள் வன்மை - வலிமையினும் சிறந்த வலிமை மடவார்ப்பொறை- அறிவில்லாதவர் செய்த குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளு தல். பொறை: தொழிற் பெயர்.

26. அழுக்காறு - பொறாமை. திரு-செல்வம். செற்று - அழித்து. தீயுழி - கொடிய நரகத்தில்.

27. அவ்விய நெஞ்சத்தான் - அழுக்காறு கொண்ட மனத்தினை யுடையவன். ஆக்கம் - செல்வம். பொறாமையுடையோர் செல்வம் பெற்றிருப்பின் அது பழவினையான் வந்தது என்பது கருத்து. நினைக்கப்படும் - ஆராயப்படும்.

28. கண் நின்று - கண் எதிரே நின்று. கண் அற - கண்ணோட்டம் இன்றி. பின் நோக்காச் சொல் - பின்வரும் குற்றத்தை நோக்காத சொல்.

29. மகன் எனல் - மனிதன் என்று சொல்லற்க மக்கள் பதடி எனல் - மக்களுக்குள் பதர் என்று சொல்லுக.

30. தீயவை - பிறர்க்குச் செய்யும் தீமைகள். தீய பயத்தலால் - துன்பத்தைத் தருதலால்.

31. ஒப்புரவினுல் - பிறர்க்கு உதவி செய்தலால். விற்று கோள் தக்கது - தன்னை விற்ருயினும் கொள்ளும் தகுதியுடையது.

32. தாம் உடைமை - தம்முடைய செல்வத்தை. வன்கணவர் - அருள் இல்லாதவர். ஈத்து உவக்கும்-வறியார்க்குக் கொடுத்து மகிழும்.

33. நிரப்பிய - பொருட் குறை நிரப்புதற்கு. தமியர் உணல் - தனித்து உண்ணுதல். இரத்தல் - பிறர்பால் சென்று இரந்து கேட்டல். நிரப்பிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

34. ஈதல் இயையாக் கடை - வறியார்க்கு ஒன்று ஈதல் முடியாத போது. அதூஉம் இனிது - சாதலும் இனிதாகும். அதூஉம்: இன்னிசை அளபெடை.

35. புகழ்பட - புகழ் உண்டாக. வாழாதார்-வாழமாட்டாதவர். தம்நோவார் - தம்மை நொந்துகொள்ளாதவராய். இகழ்வார்: வினையாலணையும் பெயர்.

## துறவறவியல்

துறவு + அறம் + இயல் = துறத்தலாகிய அறத்தின் இயல்பு கூறுவது.

36. உள்ளத்தால் பொய்யாது - ஒருவன் தன் மனத்திற்கேற்பப் பொய் கூருது. ஒழுகின் - நடந்தால். உலகத்தார் - உயர்ந் தோர். பொய் கூருதவன் உயர்ந்தோரால் மதிக்கப்படுவான் என்பது கருத்து.

37. யாம் மெய்யாக் கண்டவற்றுள் - யாம் உண்மை நூல்கள் எனக் கண்டவைகளில். எனைத்து ஒன்றும் - யாதொரு தன்மையாலும். வாய்மையின் நல்ல பிறஇல்லை - உண்மை கூறுதலைக் காட்டிலும் சிறந்த அறங்கள் வேறு இல்லை.

38. தன் உயிர்க்கு இன்னுமை தான் அறிவான் - பிறர் செய்யும் தீமை தனக்குத் துன்பம் தருதலை அனுபவித்து அறிகின்ற வன். மன் உயிர் - நிலைபெற்ற பிற உயிர்கள்.

39. அருள் ஆள்வார்க்கு - அருள் உடையார்க்கு. அல்லல் துனபம் இல்லை. வளி வழங்கும் - காற்று இயங்குகின்ற. மல்லல் - வளப்பம். மாஞாலம்-பெரிய இவ்வுலகத்து வாழும் மக்கள். கரி - சான்று.

40. இலர் - பொருள் இல்லாதவர். நோலாதவர் - தவம் செய்யா தவர். சிலர் × பலர். நோற்பார் × நோலாதவர்: இவை முரண்.

41. நெஞ்சில் துறவார் - மனத்தில் துறவு எண்ணம் இல்லாத வராய். வஞ்சித்து - தானம் செய்வாரை ஏமாற்றி, வன் கணூர் - கொடுமையுடையவர்.

42. தவத்தொடு தானம் செய்வார்-தவமும் தானமும் செய்பவர். மனத்தொடு வாய்மை மொழியின் - மனத்தொடு பொருந்த உண்மை பேசினுல்.

43. சினம் - கோபம். சேர்ந்தாரைக் கொல்லி - நெருப்பு இனம் - துணை. ஏமம்புணை - காவலாகிய மரக்கலம் பிறவிக்கடலுள் அழுந்தாமல் வீடு என்னும் கரை ஏற்றுகின்ற நல்லோராகிய புணை. சுடும் - நீக்கிவிடும்.

44. இணர் எரி - பல சுடரையுடைய பெரு நெருப்பு. தோய்வு அன்ன - வந்து பொருந்தினாற்போன்ற. இன்னா - துன்பம். வெகுளாமை புணரின் நன்று - எனக் கூட்டவேண்டும்.

45. சிறப்பு ஈனும் - சிறப்புக்களைத் தருகின்ற. செல்வம் பெறினும்-செல்வத்தைப் பெறுவதாய் இருப்பினும் மாசு அற்றார்-மனத்தில் குற்றமில்லாதவருடைய. கோள் - கொள்கை.

46. அற்கா இயல்பிற்று - நிலையாத இயல்பினை உடையது. அறகுப-நிலைத்து நிற்கும் அறங்களை. ஆங்கே-அப்பொழுதே. செயல் - செய்க

47. சாக்காடு - இறத்தல். பிறப்பு - மறுபடியும் பிறத்தல். உறங்குவது : உவமானம். சாக்காடு : உவமேயம். உறங்கி விழிப்பது : உவமானம் மறுபிறப்பு : உவமேயம்.

48. யாதனின் யாதனின் நீங்கியான-எப்பொருளை எப்பொருளைத் துறந்தான். நோதல் - வருந்துதல். அதனின அதனின் - அப் பொருளால் அப் பொருளால். யாதனின் யாதனின், அதனின் அதனின் : அடுக்குத் தொடர்கள்.

49. பற்று அற்றான் - எல்லாப் பொருள்களையும் பற்றி நின்றே பற்று அற்ற இறைவன். பற்றினை - அவன் ஓதிய வீட்டு நெறயினை. பற்று விடற்கு - நம்மை விடாது வந்த பற்று நீங்குவதற்கு அப் பற்றைப் பறறுக - அதனை யடையும் வழிகளை மேற் கொள்ளுக.

## பொருட்பால்—அரசியல்

அரசியல் முதலியன பொருள் தேடற்குத் துணையாகும். ஆதலின் அரசியல், அங்கவியல், ஒழிபியல்களைக் கூறும் பகுதி பொருட்பால் எனப்பட்டது. "மன்னனை உயிர்த்தே மலர்தலை உலகம்" என்றார் பெரியார். உலகிற்கு உயிரெனச் சிறந்த மன்னனுடைய இயல்பு கூறுதலின் இவ் வியல் அரசியல் எனப்பட்டது.

50. முறை செய்து - நீதி முறைப்படி ஆட்சி செய்து. இறை என்று வைக்கப்படும் - கடவுள் என்று சிறப்பாக மதிக்கப் படுவான்.

51. தாம் இன்பு உறுவது - தாம் இன்பம் அடைவதற்குக் காரண மாகிய கல்விக்கு. உலகு இன்புஉற - உலகம் இன்பத்தை யடைய. காமுறுவர் - (மேலும் கற்க) விரும்புவர்.

52. நனி நல்லார் - மிகவும் நல்லவர் ஆவர். சொல்லாதிருத்தல் - ஒன்றனையுஞ் சொல்லாதிருத்தல்.

53. செவிக்கு உணவு-செவிக்கு உணவாகிய கேள்வி ஈயப்படும்-இடப்படும். வயிற்றுணவினும் செவியுணவே சிறந்தது என்பதாம்.

54. கேட்க - கற்றறிந்தார் சொல்லும் கருத்துக்களைக் கேட்க. ஒற்கத்தின் - தளர்ச்சி வந்த பொழுது. (ஊன்று + ஆம்) = ஊற்றாம் - பற்றுக்கோடு ஆகிய.

55. செவியிற் சுவை - செவியால் நுகரப்படும் சொற்சுவை, பொருட் சுவைகள். வாய் உணர்வு - உணவுச் சுவை அறியும் உணர்வு. அவியினும் வாழினும் என் - இறந்தாலும் வாழ்ந்தாலும் உலகிற்கு வருவது என்ன?

56. அற்றம் காக்கும்-இறுதி வராமற் காக்கின்ற. செறுவார்க்கும்-பகைவர்க்கும். அழிக்கல் ஆகா - அழிக்கமுடியாத.

57. எத்தன்மைத்து - என்ன இயல்பையுடையது. மெய்ப் பொருள் - உண்மைப் பொருள்.

58. இவறன்மை - உலோபத் தன்மை. எற்றுள்ளும் - எந்தக் குற்றத்தினுள்ளும் உலோபத்தன்மை மிகப் பெருங் குற்றமாகும் என்பது கருத்து.

59. மனம் தூய்மை - அறியாமையின் நீங்குதல். தூணா - பற்றுக் கோடாக.

60. ஆக்கம் - செல்வம் தரும். இனநலம் - நல்லாரோடு சேர்ந்த நன்மை.

61. செய்தக்க அல்ல-செய்யத்தக்கன அல்லவற்றை. செய்தக்க - செய்யவேண்டுவன, கெடும் - (அரசன்) கெடுவான்: செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று.

62. பீலி - மயில்தோகை. சாகாடு - வண்டி. அச்சு + இறும் = அச்சு ஒடிந்து போகும். பெயின் - பெய்தால்.

63. அளவு - தனக்கு உள்ள பொருளின் அளவு. உளபோல - உள்ளனபோலத் தோன்றி.

64. ஞாலம் கருதினும்-ஞாலம் முழுவதையும் ஆள நினைப்பினும்.

65. கால் வல் நெடுந்தேர் - வலிய சக்கரம் பூட்டிய நெடுந்தேர். நாவாய் - தோணி.

66. காதன்மை - அன்பு உடைமை. கந்தா - பற்றுக்கோடாக. பேதைமை எல்லாம் - அறியாமை எல்லாவற்றையும்.

67. தேரான் தெளிவு - ஆராயாது தெளிதல். ஐயுறவு - ஐயம் கொள்ளுதல். தீரா இடும்பை - நீங்காத துன்பம். தீரா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

68. நாடி - ஆராய்ந்து. செயல் - செய்க: வியங்கோள் வினைமுற்று.

69. உலகு - உலகத்து உயிர்கள். வான் - மழை. மன்னவன் கோல் - மன்னனுடைய செங்கோல் முறைமை. குடி - குடிமக்கள்.

70. வையகம் எல்லாம் - இந்த மாநிலம் முழுவதையும். இறை - அரசன். முறை - நீதி. முட்டா - தடையின்றி.

71. வேலொடு நின்றான் - வேலோடு நிற்கின்றவன் ஆகிய வழிப் பறி செய்யும் கள்வன். கோலொடு நின்றான் - தண்டிக்கும் கொடுங்கோலோடு நின்ற அரசன். இரவு-இரந்து கேட்டல்.

72. கடிது ஓச்சி - கடுமையாகத் தண்டிப்பார் போற் காட்டி. மெல்ல எறிக - மெதுவாகத் தண்டிக்க. ஆக்கம் - மேன்மை. நீங்காமை. வேண்டுதல் - தன்கண் நிலைத்து நிற்றலை விரும்புதல்.

73. கருமம் சிதையாமல் - முறை செய்தலாகிய தொழில் கெடாமல். கண்ணோட - இரக்கம் காட்ட. உரிமை உடைத்து - உரிமை உடையதாகும்.

74. வினை செய்வார் - அரசியற் காரியம் செய்பவர். தம் சுற்றம்- தம்முடைய சுற்றத்தார். வேண்டாதார் - பகைவர். ஒற்று- ஒற்றன் செயலாகும்.

75. ஆக்கம் - செல்வம். அல்லாவார் - வருந்தமாட்டார். ஒரு வந்தம் - நிலைபெற்ற. கைத்து உடையார் - கைப்பொருளாக உடையவர்.

76. பொறி - ஊழ்வினையாகிய விதி. அறிவு அறிந்து - அறிய வேண்டியவைகளை அறிந்து. ஆள்வினை இன்மை - வினை செய்யாமை.

77. இடும்பை படாதவர்-துன்பத்துக்கு வருந்ாதவர். இடும்பை படுப்பர் - துன்பத்தைத் தருவர்.

78. விழையான்-விரும்பாதவனாய். இடும்பை இயல்பு என்பான்- துன்பம் அடைதல் இயல்பு என்று எண்ணுவோன்.

### அமைச்சியல்

அமைச்சனுடைய பண்புகளையும், செயல்களையும் கூறுதல்.

79. சொல்லின்கண் சோர்வு - சொற்குற்றம். ஆக்கமும் கேடும்- மன்னனுக்கும் மன்னுயிர்க்கும் மேன்மையும் அழிவும். ஓம்பல் - போற்றிக் காத்துக் கொள்க.

80. பழிமலைந்து - பழியை மேற்கொண்டு. ஆக்கத்தின் - செல்வத்தைவிட. நல்குரவு - வறுமை. தலை - உயர்ந்தது.

81. துன்பம் - மெய் முயற்சியால் வரும் துன்பம். துணிவு - மனம் கலங்காமை.

82. வினைத்திட்பம்-செயலில் உறுதிப்பாடு. வேண்டார்-கடைப் பிடியாத அமைச்சர். எனைத்திட்பம் - படை, அரண், நட்பு முதலிய உறுதிகள். உலகு வேண்டாது - உலகத்தோர் நன்கு மதியார்.

83. அவை அகத்து அஞ்சாதவர் அரியர்-அவையின்கண் அஞ்சாது சொல்ல வல்லவர் சிலரேயாவர். சாவார் - சாவ வல்லவர்.

### அரணியல்

அரண்-பாதுகாவல். அரசற்குப் பாதுகாவலாக அமைந்தவற்றைக் கூறும் இயல்.

84. பிணி - நோய். விளைவு - விளைதல். ஏமம் - காவல்.

## படையியல்

படைவீரர் முதலியோரது இயல்பு கூறுதல்.

85. தறுகண் - பகைவர்மேல் இரக்கங் காட்டாது செய்யும் வீரச் செயல். பேராண்மை - மிக்க ஆண் தன்மை. ஒன்று உற்றக் கால் - பகைவர்க்கு ஒரு தாழ்வு வந்தால். ஊராண்மை - உபகாரம் செய்தல். எஃகு - கூர்மை.

86. புரந்தார் - பாதுகாத்த மன்னர். சாக்காடு-இறப்பு. இரந்து கோள் தக்கது - இரந்தாயினும் கொள்ளத்தக்கது.

## நட்பியல்

நண்பருடைய இயல்பு கூறுதல்.

87. புணர்ச்சி பழகுதல் - புணர்ச்சியும் பழகுதலும். புணர்ச்சி- ஒரு நாட்டில் அல்லது ஓரூரில் வாழ்தல். உணர்ச்சி - இரு வர்க்கும் ஒத்த கருத்து முதலியன.

88. அழச் சொல்லுதல் - தவறு செய்த மன்னன் வருந்தித் திருந்துமாறு சொல்லுதல். இடித்து - நெருக்கி, இடித்துக் கூறி. வழக்கு - உலக வழக்கு.

89. ஒன்னார் - பகைவர். சொல் வணக்கம் - வணக்கமான சொற் கள். வில் வணக்கம் - வில்லின் வளைவு.

90. ஏவவும் - நல்ல செயல் செய்யுமாறு கூறினும். தேறான் - தெளியமாட்டான். உயிர் - கீழ்மகனுடைய உயிர். நோய் - இந்நிலத்துக்குப் பொறுத்தற்கரிய ஒரு நோய்.

91. வாள்போல் பகைவர் - வாள்போல் எதிர்த்து நிற்கும் பகைவர். கேள்போல் பகைவர் - நண்பர் போல் பழகிக் கெடுக்கும் பகைவர்.

92. தகைமாண்ட - அருளவும் அழிக்கவும் வல்ல மாட்சிமை யுடைய. செறின் - கோபித்தால். வகைமாண்ட வாழ்க்கை - படை முதலிய உறுப்புடைய அரச வாழ்க்கை.

93. இருமனப் பெண்டிர்-செல்வத்தின் மேலும் அயலார் மேலும் செல்லும் மனமுடைய பெண்டிர். கவறு - சூது. திரு - திருமகள்.

94. துஞ்சினார் - தூங்கினவர். கள் உண்பவர் நஞ்சு உண்பவர்க்கு ஒப்பாவர்.

## குடியியல்

குடிமக்களின் தன்மை கூறுதல்.

95. பெருக்கம் - செல்வப் பெருக்கு உள்ள காலம். சுருக்கம் - செல்வம் சுருங்கிய வறுமைக்காலம். பணிதல் வேண்டும் என மாற்றுக.

96. பெருமை - பெருமையுடையவர். அற்றம் - பிறருடைய அவமானத்தை. மறைக்கும் - மறைத்துப் பேசுவர்.

97. கடன் அறிந்து - தமக்குத் தகுவது இது என்று அறிந்து நல்லவை எல்லாம் கடன் என்ப - நல்ல குணங்களெல்லாம் இயல்பாய் இருக்கும் என்று சொல்லுவர்.

98. மக்கட்பண்பு - நன்மக்கட்கே உரிய பண்பு. அரம் - கூர்மை யுடைய ஒரு கருவி. மரம்போல்வர்-ஓரறிவுடைய மரத்திற்கு ஒப்பாவர்.

99. தான் பிறந்த இல் - தான்பிறந்த குடி. ஆண்மை ஆக்கிக் கொளல் - ஆளும் தன்மையைத் தனதாக்கிக் கொள்ளுதல்.

100. விழைவதூஉம் - உலகத்தில் விரும்பக்கூடிய பொருள்கள் எல்லாவற்றையும். விட்டேம் என்பார் - துறந்துவிட்டேம் என்னும் துறவிகள். நிலை - அத் துறவறத்தில் நிற்கும் நிலை.

கவனா :

1. பிறவி என்னும் பெருங்கடலை யார் நீந்துவர்? யார் நீந்தார்
2. மழை என்ன என்ன வன்மைகளையுடையது?
3. வீட்டுலகத்துக்கு விதை போன்றவன் யார்?
4. எது சிறந்த அறமாகும்? எவை ஆரவாரமாகும்?
5. ஏன் காலம் கடவாது அறஞ்செய்ய வேண்டும்?
6. ஒருவனுக்குப் பிறவி வரும் வழியைத் தடுக்கும் கல் எது?
7. இல்வாழ்க்கைக்குப் பண்பும் பயனுமாய் இருப்பன எவை?
8. அறன் எனப்பட்டது எது?
9. இல்வாழ்க்கை எப்பொழுது சிறப்புப் பெறுது?
10. யார் சிறந்த பெண் என்று சொல்லப்படுவாள்?
11. அறக்கடவுள் எதனைக் காயும்? எது போல?
12. வானத்தவர்க்கு நல்விருந்து ஆவான் யார்?
13. யாருடைய நிலத்துக்கு விதை இட வேண்டுவது இல்லை?
14. யாருக்கு வறுமை உண்டாகாது?
15. நன்றியின் பயனை அறிபவர் எதனை எவ்வாறு கொள்வர்?
16. பிறர் செய்த தீமையை மறக்கும் வழி யாது?
17. சிறந்த வாணிகம் எது?
18. ஐந்து அடக்கல் என்றால் என்ன? அதனால் வரும் நன்மை யாது?
19. ஏன் நாவைக் காக்கவேண்டும்?
20. எது குடிமையாகும்? எது இழிந்த பிறப்பாகும்?
21. எது பேராண்மை யாகும்? அது தரும் நன்மைகள் யாவை?
22. வறுமையினும் இழிந்த வறுமை எது? வன்மையுள் சிறந்த வன்மை எது?
23. அழுக்காறு என்னும் பாவி செய்யும் தீமைகள் எவை?
24. மக்களுள் பதடி என்று யாரைக் கூறவேண்டும்?
25. ஒருவன் தன்னை விற்றும் கொள்ளத்தக்கது எது?
26. உடைமை வைத்திழக்கும் வன்கணவர் எதனை அறியார்?
27. சாதலும் எப்பொழுது இனிது ஆகும்?

28. உலகத்தார் மனத்தில் நிலைத்திருப்பவன் யார்?
29. மன்னுயிர்க்கு இன்னா செய்பவன் எதனை நினைக்க வேண்டும்?
30. இந்நிலவுலகம் எதற்குச் சான்றாகும்?
31 வறுமையுடையோர் இவ்வுலகில் பலர் இருக்கக் காரணம் என்ன?
32. கொடியவரினும் கொடியவர் யார்?
33. தவமும் தானமும் செய்வாரைவிடச் சிறந்தவர் யார்?
34. வெகுளாமை நன்று எப்பொழுது? ஏன்?
35. குற்றமற்ற பெரியோர் கொள்கை யாது?
36. சாக்காடும் பிறப்பும் எவை போன்றவை?
37. பற்று நீங்குவதற்கு யாது செய்தல் வேண்டும்?
38. மக்கட்கு இறை என்று கருதப்படுவான் யார்?
39. கற்றறிந்தார் மேலும் கற்க விரும்புவர்—ஏன்?
40. கல்லாதவரும் எப்பொழுது நல்லவர் ஆவர்?
41. "கற்றிலனாயினும் கேட்க" என்று ஏன் கூறினார்?
42. யார் வாழினும் இறந்தாலும் உலகிற்கு ஒன்றும் பயனில்லை?
43. அறிவு மக்கட்கு எவ்வாறு பயன்படும்?
44. எது அறிவுடைமை ஆகும்?
45. இனந் தூய்மையுடையார்க்கு எவை எய்தும்?
46. மனநலமும், இனநலமும் எவற்றைத் தரும்?
47. அரசன் எவற்றைச் செய்தலானும் செய்யாமையானும் கெடுவான்?
48. வண்டியின் அச்சு எப்பொழுது ஒடியும்? இதனால் நாம் அறிவது யாது?
49. உள்ளனபோலத் தோன்றி எவை அழிந்துவிடும்?
50. இஞ்ஞாலத்தை அடைய நினைப்பினும் கைகூடும், யாருக்கு? எப்பொழுது?
51. தீரா இடும்பை தரும், எது? எப்பொழுது?
52. மன்னனைக் காப்பாற்றுவது எது?
53. மன்னன் இரத்தல் எது போன்றது ஆகும்?
54. இவ்வுலகு யார்க்கு உரிமையுடையதாகும்?
55. ஒற்றர் யார் யாரை ஆராயவேண்டும்?
56. செல்வத்தை இழந்துவிட்டேம் என்று யார் வருந்த மாட்டார்?
57. ஒருவர்க்கு எது பழியன்று? எது பழியாகும்?
58. எவன் துன்பம் எய்தாமல் வாழ்வான்?
59. எச் செல்வத்தைவிட வறுமை நல்லது?
60. உலகு யாரை விரும்பாது?
61. எவர் எளியர்? எவர் அரியர்?
62. "அணி யென்ப நாட்டிற்கு இவ்வைந்து"—ஐந்து எவை?
63. எது இரந்து கொள்ளும் தன்மையுடையது?

64. நட்பாங் கிழமைக்கு எவை துணையாதல் வேண்டா?
65. யாருடைய நட்பை ஆராய்ந்து ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்?
66. எத்தகைய பகைவர்க்கு அஞ்சவேண்டா? எப்பகைவர்க்கு அஞ்சவேண்டும்?
67. தகைமாண்ட தக்கார் பெருமை எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
68. திருநீக்கப்பட்டார் தொடர்பு எவை?
69. எப்பொழுது பணியவேண்டும்? எப்பொழுது பணியாமை வேண்டும்?
70. பெரியோர்க்கும் சிறியோர்க்கும் உள்ள வேறுபாடு என்ன?
71. யார் மரம் போல்வர்? ஏன்?
72. ஒருவற்கு நல்லாண்மை என்பது எது?
73. உழவுத்தொழில் நடவாவிடில் வரும் தீங்கு என்ன?

## 2 ஏலாதி

இந்நூலும் பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்தது. ஏலம் + ஆதி= ஏலாதி. ஏலம், இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி என்பன ஆறும் ஏலாதி எனப்படுவன. ஏலம் முதலிய மருந்துப் பொருள் ஆறும் மக்களுடலுக்கு நன்மை தருவன. அவை போல இந்நூலில் உள்ள ஒவ்வொரு செய்யுளிலும் ஆறு வகைக் கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அவை மக்கள் உள்ளத்துக்கு நன்மை தருவனவாகும். இந் நூலை இயற்றிய ஆசிரியர் கணிமேதையார் என்பவர்; சமண சமயத்தினர்.

அருஞ்சொற்பொருள்:

1. கொலைபுரியான் - கொலையை விரும்பான். பிறர்மனை மேற் செல்லான் - பிறர் மனைவியை விரும்பாதவன். மறை - மறைவாகக் கூறும் மொழிகள். செவி இலன்-காது கொடுத்துக் கேளான். மூங்கை - ஊமை. இறையிற் பெரியான் - அரசனைப் போன்ற பெருமையுடையவன்.
2. களியான் - களிப்புக்கொள்ள விரும்பான். காணுன்-கண்டு பேசான். உலையான - தளர்ச்சியடையான். எள்ளான் - இகழான். ஈத்து - உணவு கொடுத்து. குடிவாழ்வான் - குடியைச் சேர்ந்த மக்களோடு வாழ்வான. கூர்ந்து-செல்வம் மிகுந்து.
3. இல் - மனைவி. ஈண்டிய - நிறைந்த. நெல் - நெல் முதலிய தானியங்கள். ஆன்நிரை-பசுக்கூட்டம். எல்-பகற்பொழுது. எண்ணி ஊண் - நினைத்த உணவை.
4. சீற்றம் - சினம். நூல் சார்பு இல்லார் - நூல் கல்லாதவர். சாரின் - சேர்ந்தால்.
5. புணர்வு உவத்தல் - வந்து கூடியபோது மகிழ்தல். கவறல் - வருந்துதல். மென்புடையார்-மென்மைத்தன்மையுடையோர்-

**வினாக்கள் :**

1. பெரியோருடைய இயல்பு யாது?
2. மண் ஆண்டு குடியோடு வாழ்வான் எவன்?
3. எத்துன்பங்கள் சாபம்போற் சாரும்? எவரை?
4. அன்பு உடையார்க்கு உள்ள ஆறு குணங்கள் எவை?

## 3. சிறு பஞ்ச மூலம்

இந்நூலும் பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்தது. மூலம்-வேர். கண்டங்கத்திரி வேர், சிறுவழுதுணை வேர், சிறுமல்லி வேர், நெருஞ்சி வேர், பெருமல்லி வேர் என்ற ஐந்தும் மருந்தாகப் பயன்படுவன. இந் நூலில் உள்ள செய்யுட்கள் ஒவ்வொன்றிலும் ஐந்து ஐந்து கருத்துக்கள் உள்ளன. இவை மக்களுக்கு நல்லறிவு நல்க வல்லவை. ஆசிரியர் காரியாசான் என்பவர்; கி. பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டினர் என்பர் அறிஞர்.

**அருஞ்சொற் பொருள் :**

1. பிழைத்தல் - பிறர் செய்த தீமை. தீங்கு எண்ணியிருத்தல் சிறுமை எனக் கூட்டுக. பெருமை X சிறுமை; முரண் தொடை.
2. மூவார் - அறிவு முதிராதவர்; நூல் தேற்றாதார் - நூல்களைக் கல்லாதவர். நாறாத - மலராத. பேதை - மூடன்.
3. வௌவல்மின் - கவராதீர்கள். கருங்குணத்தார் - தீயகுணம் உடையோர். கழிமின் - நீக்கிவிடுங்கள். காலன் வரும் என மாற்றுக. காலன் - எமன்.
4. வழக்கு - செலவு செய்யும் வழக்கம். வெருவாமை - அஞ்சாத படி. வீழ்ந்து - விரும்பி. விருந்து ஓம்பி - விருந்தினரைப் பாதுகாத்து. தெய்வதை - தெய்வத்தை.
5. தான் பிறந்த இல்-தான்பிறந்த குடியின் பெருமை. தன்னைக் கடைப்பிடித்தல் - தான் தவறான வழியிற் செல்லாமல் நல் வழியைக் கடைப்பிடித்து. சாவ என - சாவ எனப் பிறர் வையாதபடி. வாழ்க என - வாழ்க என வாழ்த்தும்படி.

**வினாக்கள் :**

1. எது பெருமையும் எது சிறுமையும் ஆகும்?
2. பூத்தாலும் காயா மரம் யாருக்கு உவமை? எவ்வாறு?
3. காலன் வருவது உறுதி ஆதலால் நாம் யாது செய்தல் வேண்டும்?
4. பெண்டிர்க்குரிய சிறந்த செயல்கள் எவை?
5. ஒருவன் எவ்வாறு வாழவேண்டும்?

## 4. நான்மணிக்கடிகை

நான்கு + மணி + கடிகை = நான்மணிக் கடிகை. நான்கு மாணிக்கத் துண்டங்கள் என்பது பொருள். ஒவ்வொரு செய்யுளிலும் நான்கு

மணித் துண்டங்கள் போன்ற கருத்துக்கள் அமைந்துள்ளன என்பது கருத்து இந் நூலாசிரியர் நாகனார் என்னும் பெயரினர். விளம்பி என்னும் அவர் ஊர்ப் பெயரையும் சேர்த்து விளம்பி நாகனார் எனக் கூறுவர். இவர் வைணவ சமயத்தினர் ; காலம் 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டு என்பர்.

அருஞ்சொற் பொருள் :

1. கொண்டான் - மணஞ் செய்துகொண்ட கணவன். துன்னிய கேளிர் - நெருங்கிய சுற்றத்தார். மக்களின் - மக்களைவிட. ஈன்றாள் - பெற்ற தாய்.
2. இரவு - இரத்தலை மேற்கொண்டு. மன்னுதல்-நிலைபெறுதல். இசை - புகழ். செல்வது - துணையாக வருவது வெகுளி - கோபம். வெல்வது - வெற்றி.
3. கள்வம் - திருடுவோம். ஒண்பொருள் செய்வம் - சிறந்த பொருளைத் தேடித் தொகுப்போம். அப்பொருள் காப்பார் - தேடிய பொருளைக் காத்துக் கிடப்பவர்.

வினாக்கள் :

1. சிறந்த, கேளிர், கடவுள்—எனப்பட்டவர் யாவர்?
2. சிறந்த உறுப்பும், சிறந்த பொருளும் எவை ?
3. யாவர் இசை நடுதலும், அறஞ் செய்தலும் மேற்கொள்ள வேண்டும்?
4. யார் யார் துயிலின்றி இருப்பார்கள்?

## ங. தொடர்நிலைச் செய்யுள்

### 1. பெருங்கதை

பெருங்கதை என்பது இந்தியாவின் வடபகுதியில் உள்ள வத்தவ நாட்டை ஆண்ட உதயணன் என்னும் மன்னனுடைய வரலாற்றைக் கூறும் நூல். கொங்குவேளிர் என்பவர் இதனை இயற்றினார். அதனால் இதற்குக் கொங்குவேள் மாக்கதை என்ற வேறு பெயரும் உண்டு.

[முன் கதைக் குறிப்பு: உதயணன் முதலில் வாசவதத்தையை மணந்தான். பின்பு பதுமாவதியை மணந்தான். இவ்விருவருடன் கூடி இல்லற வாழ்க்கையில் வாழ்ந்தகாலத்தில் ஒரு நாள் தான் ஆருணி என்னும் நாட்டு மன்னனை வென்று அவனிடமிருந்து கொண்டுவந்த ஆயிரத்தெட்டு அடிமை மகளிரையும் வாசவதத்தைக்கும் பதுமாவதிக்கும் பங்கிட்டுக் கொடுத்தான். உதயணன் வெளியிற் செல்ல விரும்பியகாலை ஒருநாள் அவன் மனைவியர் இருவரும் தம் தோழியரை இரு கூறாகப் பிரித்துப் பந்தாட்டப் போட்டி நடத்தி வெற்றி தோல்வி காண விரும்பினர். அதற்குரிய இடமும் காலமும் குறித்திருந்தனர். இச் செய்தியை வயந்தகன் என்னும் தோழன் உதயணனுக்குக் கூறினன். உதயணன் பெண்போல மாறுவேடம் கொண்டு அவ்விளையாட்டை மறைந்திருந்து கண்டான். அப்பொழுது இப் பந்தாட்டம் நடைபெற்றது.]

**அருஞ்சொற் பொருள் :**

வரி. 1—10. கொவ்வை-கொவ்வைப் பழம். மது - தேன். தெரியல் - மாலை. தண்வளி - குளிர்ந்த காற்று.

,, 11—20. வளை - வளையல். சிலம்ப - ஒலிப்ப. பாடகம் - ஒரு வகைக் காலணி.

,, 1—12. புரை - போன்ற. கொவ்வை - கொவ்வைப் பழம். மது நாறு - தேன் மணம் வீசுகின்ற. தெரியல் - மாலை. மகதவன் - மகதநாட்டு மன்னன்; தருசகன் என்னும் பெயருடையவன். அவன் தங்கை பதுமாவதி என்பவள். பணி - கட்டளை. கோதை - கூந்தல். கணங்குழை - கூட்டமாகிய காதணி. வணங்கினள் : முற்றெச்சம். வளி - காற்று.

,, 13—20. வண்ணம் - அழகு. வளை - வளையல். சிலம்ப-ஒலிக்க. பாடகம் - காலணியில் ஒன்று. பரிந்து - விரும்பி. சூடகம்- கை அணி; வளையல் வகையில் ஒன்று. பாயிரம் இன்றி - முன்னுரை ஒன்றும் பேசாமல். பல்கலன் - பல ஆபரணம்.

,, 21—31. அவந்திகை - அவந்தி நாட்டு மன்னன் மகள்; (வாசவதத்தை) உவந்தவள்-அவளால் விரும்பப்பட்டவள்; (தோழியாகிய காஞ்சனமாலை). வாங்குபு - வாங்கி. குழல் - கூந்தல். நிழல் - ஒளி. கண்ணி - தலைமாலை. திருத்தி-ஒழுங்குபடுத்தி. வேய் இரும் தடந்தோள் - மூங்கில் போன்ற பெரிய தோள்.

,, 32—46. செயிர் தீர் - குற்றம் நீங்கிய. அம் பணை - அழகிய மூங்கில். மான் நேர் நோக்கி-மானின்கண் போன்ற கண்களையுடையவள். வாக்குறப் பாடுதல் - திருத்தமாகப் பாடுதல். முன்னிய - நினைத்த.

,, 47—68. விச்சுவலேகை - தோழியின் பெயர். குறளி-குள்ளமான வடிவம் உடையவள். சேலம் - சேலை; ஆடை. கருவிக்கோல்- பந்து அடிக்கும் கோல். பத்தி - வரிசை. கவர்ச்சி - பல வழியான செலவு. பாம்பு ஒழுக்காக - பாம்பு வளைந்து செல்வது போல. காம்பு - மூங்கில். இழித்திட்டு-கீழே இறங்கும்படி செய்து.

,, 69—86. ஆரியை - பந்து அடிக்கும் பெண்ணின் பெயர். அசைஇ-அசைந்து. திரிபு வீழ்-திரிந்து வீழ்கின்ற. அரிஆர் மேகலை - உள்ளிடு பரல்களை உடைய மேகலை. அரிமலர்க் கோதை-வண்டு மொய்க்கும் மலர்க் கூந்தல். பல்+தோள்= பஃறோள். திறத்துளி - திறமையோடு.

**வினாக்கள் :**

1. இராசனை என்பவள் யார்?
2. பந்துகள் எவ்வாறு இருந்தன?
3. அயிராபதி என்னும் கூனி எவ்வாறு பந்தடித்தாள்?
4. ஆரியை பந்தடிக்கும்போது எவ்வாறு அடித்தாள்?
5. இராசனை முதலானோர் முறையே எத்தனை கை பந்தடித்தனர்?

## 2. பெரிய புராணம்

இந்நூல் சிவனடியார் அறுபத்து மூவருடைய வரலாறுகளை விளக்கிக் கூறுவது. ஆசிரியர் சேக்கிழார். இவர் குன்றத்தூரில் வேளாளர் குலத்தில் சேக்கிழார் குடியிற் பிறந்தவர். இளமையில் இவருக்கு அருண்மொழித்தேவர் என்ற பெயர் இருந்தது. இரண்டாம் குலோத்துங்க மன்னனுடைய முதல் அமைச்சராய் இருந்தவர். உத்தம சோழப் பல்லவர், தொண்டர்சீர் பரவுவார் என்னும் பட்டங்களைப் பெற்றவர். காலம் 12 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.

அருஞ்சொற் பொருள் :

1. வேணியார் - சடையையுடைய சிவபெருமான். அவை-செல்வமும் சிந்தையும். பாரின் மல்க - இப் பூமியில் நிறைய.
2. ஆரம் - மாலை. என்பு - எலும்பு. நித்தமாகிய-நிலைத்த. கூர - மிகுதிப்பட்ட. மதுரப்பதம் - இன்மொழிகள். பரிவு எய்த-அன்பு உண்டாக.
3. குலாவு - விளங்குகின்ற. காதலின்-விருப்பத்தோடு. ஆதனம்-ஆசனம். இச்சையில் - விருப்பத்தோடு. அமுது செய்ய - உண்ண.
4. ஆளும் நாயகர் - சிவபெருமான். நாளும் நாளும் - நாள் தோறும். மாநிதி - பெருஞ் செல்வம். எண் தோளினர் - சிவபெருமான். அளகை - அளகாபுரி. தோழனார் - குபேரன்,
5. அல்லல் - துன்பம். நல்குரவு - வறுமை. ஒல்லையில்-விரைவில். உன்னினார் - நினைத்தார்.
6. உள்ளன மாறுதல்-உள்ள பொருள்களை விற்றல். இறுக்க - கொடுப்பதற்கு. மாறு இல் திருப்பணி - வேறுபாடு இல்லாத சிறந்த தொழில்; அடியார்க்கு உணவளித்தல் முதலியன.
7. ஈரம் - மழையில் நனைந்த ஈரம். தாரம் - மனைவி. தபோதனர் - தவமுனிவர். தீர - மிகுதியாக.

இமக்குலக்கொடி - இமயமலை அரசன் மகள் பார்வதி தேவியார். இனிமை + அடிசில் = இன்னடிசில். அடிசில் - உணவு. தகவுற - தகுதி பொருந்த. அணங்கே - பெண்ணே.

9. ஏதிலார் - அயலார். போது - பொழுது. வைகிற்று-கழிந்தது. தீது செய்வினையேற்கு - தீவினை செய்த எனக்கு.
10. செல்லல் - வறுமை. வித்திய - விதைத்த. மல்லல் - வளப்பமான கொடுவந்தால் - கொண்டுவந்தால். அயர்வு உற - வருந்த.
11. அ + மாற்றம் = அம் மாற்றம். மாற்றம்-உரை. உள் மகிழ்ந்து - மனம் மகிழ்ந்து. ஒருப்பட்டனர் - சம்மதித்தனர்.
12. பிறங்க - விளங்க. அருகு நாப்பண் - அருகில் உள்ள இடமும், நடுவிடமும். அறிவு + அரும் + கங்குல். கங்குல் - இரவுப் பொழுது. கணம் - கூட்டம். கட்டுவிட்டு - தொகுதி குலைந்து.

13. துண் எனும்படி - துண் என்று நடுங்கும்படி. தோய்ந்திடில்- இது நம்மேல் படிந்தால். வண்ணம் - நிறம். நண்ணல் செய்யா - அடைதல் இல்லாத.
14. இடா - நீர் இறைக்கும் கூடை. குறியின் வழி - அடையாளத்தின் வழியே.
15. சாலி - நெல். வெண்மை + முளை = வெண்முளை. சார்ந்தன - ஒதுங்கி வந்தன. ஒல்லை - விரைவில்.
16. வெம்மை + தழல் = வெந்தழல்; தழல் - நெருப்பு. நீடும் - நீண்ட. அலக்கு - மேலே கட்டியுள்ள கழிகள்; வரிச்சுகள்.
17. முளை வித்து - முளைத்த விதை. வாக்கிய - நீர் ஊற்றிய.
18. அழிவுறும் - வருந்துவான். ஐயன் - சிவனடியார். புன்செய்க் குறும் பயிர் - தோட்டத்தில் உள்ள குறும் பயிர்கள். பாசப் பழி முதல் - பாசத்தின் குற்றமுடைய வேரை.
19. கைம்மை வினை - கைத்தொழில் திறமை. பண்டைய நினைவு- செல்வம் உள்ள பழையகாலத்து நினைவு. குறை-அடியார்க்கு உயர்ந்த வகையில் உணவளிக்க இயலாத குறை.
20. இணை இலாதார் - ஒப்பு இல்லாது உயர்ந்தவர். ஈண்ட - விரைவாக. ஒண்ணு - இயலாத.
21. தொழும்பனுர் - அடியார். சோதி - ஒளிவடிவம்.
22. அணங்கு - மனைவியாகிய பெண். இருநிதிக் கிழவன் - செல்வத்துக்குரிய தலைவன்; குபேரன். மொழிவழி - உன் சொற்படி. எவர்க்கும் மிக்கான் - யாவரினும் உயர்ந்தவனுகிய இறைவன்.

**விணுக்கள் :**

1. இளையான் குடிமாறனுர் அடியார்களுக்கு எவ்வாறு நன்மை செய்தார்?
2. தில்லை இறைவன் என்ன நினைத்தார்? ஏன்?
3. அடியார்க்கு உணவளிக்கும் வகைபற்றி மாறனுரின் மனைவியார் கூறியன யாவை?
4. மாறனுர் வயலுக்குச் சென்றபோது இருள் எவ்வாறு
5. மாறனுர் இருளில் எவ்வாறு சென்றுர்?
6. மாறனுரின் மனைவியார் செய்த சிறந்த செயல்கள் எவை?
7. "பாசப்பழி முதல் பறிப்பார் போல"—இந்த உவமை எதனை விளக்க வந்தது?
8. மாறனுர் அடியாரை நோக்கி என்ன சொல்லி அழைத்தார்?
9. இறைவன் மாறனுர்க்கு எவ்வாறு அருள்புரிந்தார்?

## 3. வில்லி பாரதம்

பரதமரபினர் வரலாற்றைக் கூறுவதால் இந்நூல் பாரதம் எனப் பெயர் பெற்றது. வியாச முனிவர் வடமொழியில் பாரதத்தை இயற்றிஞர். அதனைத் தமிழிற் பாடியவர் வில்லிபுத்தூராழ்வார். இவர் நடுநாட்டில் சனியூரில் பிறந்தவர். தந்தையார் பெயர் வீரராகவ

ஐயங்கார் என்பது. குலம் வைணவ அந்தணர் குலம். வக்கபாகை என்னும் நகரத்தை ஆண்ட வரபதி ஆட்கொண்டான் என்னும்சிற்றரச னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி இந்நூலை இவர் இயற்றினார். இவர் மைந்தரும் சிறந்த கவிஞர்; வரந்தருவார் என்னும் பெயருடை யவர். காலம் இற்றைக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது.

[பாண்டவர் ஐவரும் திரௌபதியோடு காட்டில் வாழ்ந்த காலத் தில் முனிவர் ஒருவருடைய உணவுப்பொருளான ஒரு நெல்லிக்கனியை அருச்சுனன் அம்பினால் எய்து ஒரு மரத்திலிருந்து வீழ்த்தினான். அதனால் தீங்குவரும் என்பதை உணர்ந்த தருமர் வருந்தினார். பின்னர்க் கண்ண பிரான் அருளால் தீங்கு வராமல் நீங்கியது. இக் கதைப்பகுதி இங்குப் பாடமாக வந்துள்ளது.]

அருஞ்சொற் பொருள் :

1. கன்னல் - கரும்பு. கயிரவம் - சிவந்த அல்லிமலர். வாய் - உதடு. நல்கு - கொடு.
2. மை களவு கனி மானும்-கரிய களாப்பழம் போன்ற. விசயன்- அருச்சுனன். கனிவு உடைமை - அன்பு உடைமை. முக்கனி- மா, பலா, வாழை என்னும் மூன்று கனிகள். முகில்-மேகம். நாடன் - பாஞ்சால நாட்டு மன்னன்; துருபதன்.
௩ ஆமலகம்-நெல்லிக்கனி. ஏ-அம்பு. இறுத்தோன் - பழத்தை வீழ்த்தியவன்.
4. கடவுளர் கோமான்: இந்திரன். அருச்சுனன் இந்திரனுடைய மைந்தன். மூத்த கொற்றவன் - மூத்த அரசன்; தருமன். அழல் பாவை - வேள்வி நெருப்பில் தோன்றிய திரௌபதி. மதி இலேன் - அறிவு இல்லாத நான். திதி மைந்தர் - திதி என்பவளின் மக்களாகிய அசுரர். தேவர்களின் வேண்டு கோளுக்கு இணங்கி அசுரரைக் கொன்றான் அருச்சுனன்.
5. மூலம் — கிழங்கு. நீடுறு காலம் - நீண்டகாலம். நண்ணுவது - அடைவது. ஏடு - மலர் இதழ். தார் - மாலை.
6. வெம்மை+உரை=வெவ்வுரை; சாப மொழி. செம்மை+ உரை=செவ்வுரை; வணக்கமான நன்மொழிகள். சீறல் - கோபித்தல்.
7. மேலிடா - கட்டுப்பாட்டை மீறாத. நின்தன் - உன்னுடைய. துலையோடு ஒப்பான் - துலாக்கோல் போல நடுவுநிலை தவறா தவன் தெவ்வை - பகைவரை. செறுத்தல் - அழித்தல்.
8. தேவர் நாள்-மனிதருடைய ஒருவருட காலம். அது தேவருக்கு ஒரு நாளாகும். கைதவம்-குற்றம். கருதுறாமல் - நினையாமல். வெருவுதல் - அஞ்சுதல்.
9. ஓராது-ஆராயாமல். மடங்கல் ஒப்பாய்-சிங்கம் போன்றவனே. உழக்க - அனுபவிக்க.
10. அம் முனி : துருவாச முனிவர். ஆபத்து - விருந்து உண்ண வந்த துன்பநிலை. வெரீஇ-அஞ்சி; சொல்லிசை அளபெடை. வெம் முனிவு - அமித்திர முனிவனுடைய கொடிய கோபம். தெவ்+முனி=தெம் முனி=பகைவரை அழிக்கின்ற. திகிரி - சக்கரம்.

11. கேழ் - நிறம். உளைவுற - வருந்த. இளையவன் : சகாதேவன். தம்முன் : தன் அண்ணனாகிய நகுலன்.
12. திண்மை-வலிமை. பட்டாங்கு-உண்மை. கோடு-மரக்கிளை. ஒன்றும் - பொருந்தும். பவளவாய் : உவமைத்தொகை. தராபதி : தருமன்.
13. மேக மேனியன் : மேக நிறத்தையுடைய கண்ணபிரான். தயித்தியர் குலம் - அசுரர் கூட்டம். அல் - இரவு. அலகை - பேய். பூதனை என்னும் பேய் தாய் வடிவம் கொண்டு கண்ணனைக் கொல்லவந்தபோது கண்ணன் அவளை அழித்தான். முரசம் எழுதப்பெற்ற கொடி தருமனுக்கு உரியது.
14. எட்டி - எட்டிக்காய். துயர் - துன்பம். மறலி - எமன். மல் - மற்போர். வாயுவின் மைந்தன் - வீமன்.
15. ஊனம்-குற்றம். ஊன்-உடல். பூண்-ஆபரணம். புரப்பது-காப்பது. வரிசை - சிறப்பு. ஈனம் - இழிவு.
16. எழில் - அழகு. நலம் - பலவகை நன்மைகள். முருக்கு - ஒரு வகை மரம். அதன் மலர் மணம் இல்லாதது. பயனற்றது. வாகைத்தார் - வாகைமாலை. தாரை - நேரே செல்கின்ற ஒருவகை நடை. மா - குதிரை.
17. ஒரு மொழி - உண்மை. உற்பவம் - பிறப்பு. உற்பவ காரணன் - தந்தை. தாரம் - மனைவி. பொறை - பொறுமை. உறவு - உறவினர். இதயம் - மனம். கிடை - கிடந்த கருத்து.
18. மறு - ஒருவகை மச்சம். ஓதனம் - உணவுப்பொருள். அறுவர் - திரௌபதியுடன் சேர்த்து அறுவர். இச் செய்யுளில் வேற்றுப் பொருள் வைப்பணி உள்ளது.

வினாக்கள் :

1. நெல்லிக்கனியின் சிறப்பு யாது?
2. நெல்லிக்கனி வீழ்த்தியது கேட்டுத் தருமன் வருந்திக் கூறியன யாவை ?
3. வீமன் கூறிய உபாய மொழிகள் எவை ?
4. கண்ணபிரான் அறுவரையும் நோக்கிக் கூறியன யாவை ?
5. தருமன் தன் மனக்கிடக்கையாகக் கூறியன யாவை ?
6. வீமன் மனத்தில் இருந்த உண்மைக் கருத்துக்கள் எவை?
7. அருச்சுனன் உள்ளக் கருத்து யாது?
8. நகுலன், சகாதேவன் இருவரும் கொண்டிருந்த கருத்துக்கள் எவை ?

## 4. மனோன்மணீயம்

இந்நூல் சீவகன் என்னும் பாண்டிய மன்னன் மகளாகிய மனோன்மணி என்னும் பெண்ணின் வரலாறு கூறுவது. அதனால் இப் பெயர் பெற்றது. பாண்டியன் மதுரையிலிருந்து தலைநகரைத் திருநெல்வேலிக்கு மாற்றினான் ; கெட்ட எண்ணமுடைய குடிலன் என்னும் அமைச்சன் சொல்கேட்டு அவன் மைந்தன் பலதேவனைச் சேரநாட்டு மன்னன் புருடோத்தமனிடம் தூது அனுப்பினான்.

அருஞ்சொற் பொருள் :

வரி க—க0. எழுத அரும் மேனி - எழுத முடியாத சிறந்த அழகிய உடம்பு. வழுதி-பாண்டியன். கயவன்-கீழ்மகன். கைதவன்-பாண்டியன். நயம் தீது - நன்மை தீமை. நட்டிலன - நண்பு செய்தானல்லன். மலைய மன்ன - மலையமலை என்னும் பொதிய மலைக்குத் தலைவனே. பொங்கு + அலை + புணரி - பொங்குகின்ற அலைகளையுடைய கடல். தாரணி - பூமி. ஒன்னார் - பகைவர். திகிரி - ஆணைச்சக்கரம்.

,, கக—க௯. குடங்கை - உள்ளங்கை. அணை - தலையணை. குறும்பர் - சிற்றரசர். தடமுற்றம் : உரிச்சொல் தொடர் ; பரந்த முன்னிடம். வேம்பு + ஆர் - வேப்பம்பூமாலை தரித்த. மந்திரச் சிகாமணி - மந்திரிகள் அவையில் சிறப்புடையவன். தந்திரத் தலைவன் - படைத் தலைவன். பொருந்தலர் - பகைவர். சூழ்ச்சியன் - தந்திரங்களை உடையவன்.

,, ௨0—௨எ. நெல்லை-திருநெல்வேலி. கண்டு-அமைத்து. புல்லார்-பகைவர். அகழி தோண்டியபோது ஆதிசேடனும் வெருவினன் என்பது கருத்து.

,, ௩0—௪௨. பௌவம் - கடல். உரமாய் - வலிமை பொருந்த. பாடை - மொழி. ஆசாரம் - ஒழுக்கம். சாக்கியம் - சான்று. தொல்லையாங் கிழமை - பழமையான உரிமை. இறுத்து - தங்கி. சதியா - சூழ்ச்சியாக. ஈண்டினன் - வந்து சேர்ந்தான்.

,, ௪௩—௫௫. உதியன் - சேரன். பங்கம் இல - குற்றம் இல்லாத. சமர்செயில் - போரிட்டால். கடன் - கடமை. கழறி - கூறி.

,, ௫எ—௬௨. சகம்எலாம் - உலகம் முழுவதும். ஆழ்துயர் - மிகுந்த துன்பத்தில். அரி ஏறு - ஆண்சிங்கம்.

,, ௬௩—எ௬. உசிதன் - பாண்டியன். திரைக்கடல் அமுது - அலையுடைய கடலில் தோன்றிய அமுதம். மலர்-மலர்போன்றவள்; மனோன்மணி. விரை மலர் - மணம் வீசும் மலர். தேர் - ஆராய்கின்ற. அளி - வண்டு ; வண்டு போன்றவன் சேர மன்னன். தென்னவன் - பாண்டியன். கோது அறும் - குற்றம் இல்லாத. வேட்டல் - மணஞ்செய்தல்.

,, எஎ—அ௪. சுரிகுழல் : சுருண்ட கூந்தலையுடைய மனோன்மணி : அன்மொழித் தொகை. வதுவை - திருமணம். போனது - புருடோத்தமனால் தள்ளப்பட்டது. பார்வகித்தான் - இப் பூமியை ஆண்டான். அறிவன் - அறிவான். புரிசை - மதில்.

வினாக்கள் :

1. சீவக வேந்தனைப் பற்றிப் பலதேவன் கூறியன யாவை ?
2. பாண்டியனுடைய நகரத்து அகழியும் மதிலும் எச் சிறப்புக்களை யுடையன ?
3. பாண்டியன் நெல்லையைத் தலைநகர் ஆக்கிய காரணம் யாது ?
4. பாண்டியனும் சேரனும் போர் புரிந்தால் வரும் தீங்கு என்னை ?

5. தென்னவன் மனம் திருந்தவும், நன்செய் நாடு சேரன் அடையவும் உள்ள வழி யாது?
6. சேரன் பலதேவனுக்குக் கூறிய விடை யாது?

## 5. வள்ளல் அதியமான்

கொடைமன்னர் பனுவல் என்னும் நூல் கடையெழு வள்ளல்களாகிய பாரி, ஆய், நள்ளி, காரி முதலியவர்களின் வரலாற்றைக் கூறுவது. இந் நூலுள் வள்ளல் அதியமான் என்பது ஒரு பகுதி. இந் நூலை இயற்றிய ஆசிரியர் வித்துவான் பெ. கோவிந்தன் அவர்கள். இவர் ஸ்ரீவில்லிபுத்தூரினர். இனிய செந்தமிழ்க் கவிகளை விரைந்து பாடும் ஆற்றல் உடையவர். உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராய் இருந்து ஓய்வுபெற்றுள்ளவர். இவர் இயற்கை இருநூறு, பைந்தமிழ்ப் பாமலர்—முதலிய செய்யுள் நூல்களை இயற்றியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

1. கன்னல் - கரும்பு. கதிர் முத்து - ஒளி வீசும் முத்து. அயல் - பக்கம். வாளை - வாளைமீன். பல+நண்டு=பன்னண்டு. பொன்னி - காவிரியாறு.
2. தெங்கு - தென்னை. கமுகு - பாக்குமரம். பலவு - பலா மரம். ஞாயில் - மதில். மங்குல் - மேகம்.
3. ஆவி இயைந்த - உயிரோடு கூடிய. ஏ - அம்பு. எழினி: அதியமானுடைய பெயர்.
4. நிலவின் கலை என்ன - நிலாவின் கலை வளர்வதுபோல. நன்னூல் - நல்ல நூல்கள்.
5. மா ஏறும் வித்தை - குதிரை ஏற்றம். வேந்து இயல் நூல் - அரசர்க்குரிய இயல்புரைக்கும் நூல். குழலி-கூந்தலையுடைய பெண். செம்பொன் கட்டில் - சிவந்த பொன்னாற் செய்த அரியணை.
6. பாடினி - இசைபாடும் பெண். புரை - போன்ற. அஞ்சி: அதியமான் நெடுமான் அஞ்சி. உன்னி - நினைத்து. உவந்து-மகிழ்ந்து.
7. பொய்கை குளம். அதர்-வழி. கால் கொடு - கால்கொண்டு. பெண் அணங்கு: ஔவையார்.
8. பலாத் தேனின் உயர்ந்த - பலாப்பழத்தின் தேன் பாய்ந்து வளர்ந்த நெல். அகவுதல் - ஒலித்தல்.
9. அரண் வாயில் - காவலையுடைய வாயில். துகள் கடந்த - குற்றம் நீங்கிய. தோகை - தோகை போன்ற அவ்வையார்: உவம ஆகுபெயர்.
10. ஏழ் இசை-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. தாழ்வு இலாத-குற்றம் இல்லாத. இருக்கை-ஆசனம்.
11. தொடை - மாலை. நின்வரவு - உன் வருகை. நவின்றனன் - சொன்னன்.

12. கைவளம் - ஒருவகைப் பண். இசை விருந்து - இசையாகிய விருந்து.

13. திவவு - முறுக்கப்பட்ட. வாய் இசை - வாய்ப்பாட்டு இசை. தவ - மிகவும். பண் - இசை.

14. இல்லம் - வீடு. துணை - மனைவி. திரையல் - வெற்றிலை பாக்கு.

15. மாவிற் செல்லல் - குதிரை யேறிச் செல்லுதல்.

16. எணி - எண்ணி என்பதன் தொகுத்தல் விகாரம். இறைவன்- அரசன். காடு கொல் தச்சன் - காட்டில் மரம் வெட்டும் தச்சன். வருவல் - வருவேன். வாயிலோயே என்பதை முன்னால் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும்.

17. யாழைத் தாங்கினாள் - யாழை எடுத்துக்கொண்டவளாய். யாய்-தாய்; அன்னையே. நீடு உயர் மனை-நீண்டு உயர்ந்த வீடு.

18. வெகுளி - கோபம். ஆண்டு - அவ்விடம். வள்ளுவன் - ஒரு வள்ளலின் பெயர்.

**வினாக்கள் :**

1. கொங்கு நாட்டின் சிறப்புக்கள் யாவை ?
2. தகடூரின் பெருமைகள் யாவை ?
3. அதியமான் இளமையில் எக்கலைகளைக் கற்றான் ?
4. அவ்வையார் அதியமானிடம் சென்ற காட்சி எவ்வாறு உவமிக்கப்பட்டுள்ளது ?
5. அவ்வை பாடலைக்கேட்டு அவையோர் எவ்வாறு பாராட்டினர் ?
6. பரிசில் அளிக்கத் தாழ்த்த அதியனைப்பற்றி அவ்வையார் நினைத்தவை எவை ?
7. வாயிற் காவலனை நோக்கி அவ்வையார் கூறியன யாவை ?
8. அவ்வையார் அதியமானிடம் பெற்ற பரிசுகள் எவை ? எப்பொழுது பெற்றாள் ?

## ௬. பல்சுவை

### 1. வருணனை

1. கான் - காடு. ககனம் - வானம் தாரை - விண்மீன். நிரை நிரை - வரிசை வரிசையாக. வேனிலான் - வேனிற்காலத்துத் தலைவன். விழவு - திருவிழா. கும்பம் - குடம். விண்ணில் தோன்றிய விண்மீன்கள் காட்டில் மலர்ந்த முல்லை மலர் போலவும், மதியம் வெள்ளிக்குடம் போலவும் காட்சி அளித்தன.

2. வதுவை - மணம். கொம்பு - கிளை. குனிக்கும் - நடிக்கும். மஞ்ஞை - மயில். அயில் - கூர்மையான. அரங்கு - நாடக மேடை. சிறை - சிறகு. பனி - குளிர்ச்சி. தும்பி - வண்டு. செவ்வழி - ஒருவகைப் பண்.

## 2. சீட்டுக்கவி

பழங்காலத்தில் கவிஞர் தம் கடிதங்களைக் கவி வடிவத்தில் எழுதி யனுப்புவது வழக்கம். இக்கவியினை இயற்றியவர் சீகாழி அருணாசலக் கவிராயர் என்பவர். அவர் தாம் புதிதாக இயற்றிய இராம நாடகக் கீர்த்தனை என்னும் நூலை அரங்கேற்ற விரும்பிய பொழுது அவ் விழா வுக்கு வந்து சிறப்பிக்கவேண்டுமென இலிங்கப்ப செட்டியார் மைந்தர் பெருமாள் செட்டியார் என்பவருக்கு எழுதியது இச் சீட்டுக்கவி. இவர் சீகாழி என்னும் பதியில் வாழ்ந்தவர்; சைவவேளாளர். தந்தை பெயர் நல்லதம்பிப் பிள்ளை என்பது. தாயார் வள்ளியம்மையார். இவர் தமிழ், தெலுங்கு, வடமொழி என்னும் மூன்று மொழிகளையும் கற்றவர். காலம்: பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி.

பஞ்சலட்சணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்கள். காழி - சீகாழி. மணிகொண்ட மார்பு- மணிகளால் இழைக்கப்பெற்ற ஆரம் அணிந்த மார்பு. சுதன் - மைந்தன். வணிக+அதிபன்=வணிகாதிபன். நரேந்திரன்-மகிபாலன்; அரசன். வெகுமதி செய்தல் - பரிசு கொடுத்தல். ஆயிரம் பிறை காணுதல் - திங்களுக்கு ஒருமுறை மூன்றும் பிறை கண்டு பல ஆண்டுகள் வாழ்தல்.

## 3. சிலேடை

1. தொட்டிக்கலை என்னும் ஊர் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது. அவ்வூர் இறைவன் மீது பாடிய இந்நூல் கலைசைச் சிலேடை வெண்பா எனப் பெயர் பெற்றது.

கலைசை - தொட்டிக்கலை. சேல் - சேல் மீன். தடம் - குளம். கால் ஆறு - வாய்க்கால் வழி. தேன் - ஒருவகை வண்டு. கால் ஆறு- ஆறு கால்களையுடைய வண்டு. தடத்திலும், தாமரையிலும் தேன் உண்ண விரும்பி ஆறு கால்களையுடைய வண்டுகள் பாயும் என்பது மற்றொரு பொருள். சூல் - சூலம். பாணி - கை. வேணி ஆர் பாகீரதி - ஆகாயத்திற் பொருந்திய கங்கை. பாணியார் - நீரையுடையவர். வேணியார் - சடையையுடையவர். பற்று - இருப்பிடம்.

2. பாம்பினிடம் நஞ்சு இருக்கும்; தன் தோலை உரித்துக் கொள்ளும். நாதர் - சிவபெருமான். சினம் - கோபம். மீளாது - கடிக்கப்பட்டவர் உயிர் திரும்பாது.

நைந்து இருக்கும் என்பது நஞ்சிருக்கும் என எதுகை நோக்கி மாறியது போலி. நைந்து - கனிந்து. நாதர் முடிமேல் இருத்தல் - திருமுழுக்காட்டும்போது இறைவன் முடியில் அணிதல். சினம் - பசி. பசி வேளையில் பல்லில்பட்டால் பழம் மீளாது. தேம் - தேன். திருமலை ராயன்: ஒரு சிற்றரசன்.

## 4. சிறு பிரபந்தம்

திருவேங்கடத்தந்தாதி:— திருவேங்கடம் - திருப்பதி மலை - அங்கிருக்கும் திருமால் மீது பாடப்பட்ட அந்தாதி நூல். அந்தம்+ஆதி=அந்தாதி. ஒரு செய்யுளின் முடிவில் உள்ள சொல் அடுத்த செய்யுளின் முதலில் வரும்படி பாடுதல் அந்தாதி எனப்படும். அந்தம் - முடிவு. ஆதி - முதல்.

1. தருவேம் கடத்து - மரங்கள் வேகும் பாலை நிலத்தில். உருவேங்கள் - உருவத்தையுடைய எங்கள். தத்து - துன்பம். கடம் தும்பி - மதயானை. அஞ்சல் - அஞ்சாதே. கழல்-திருவடி: (தானியாகு பெயர்.)

2. திரு விரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்:— திருவிரிஞ்சை-வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். ஆதரவு - அன்பு. தாயாக - தாய்போலிருந்து. கதி - மேன்மையான பதவி. கதிர்வண்ணம் - சூரியனைப் போன்ற ஒளி நிறம்.

3. முக்கூடற் பள்ளு:—திருமுக்கூடல் என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். பொருநை என்னும் தாமிரபரணி ஆறும், சித்திரா நதியும், கோதண்டராம நதியும் ஆகிய மூன்று ஆறுகள் கூடும் இடம். அது இப்போது சீவலப்பேரி என்னும் பெயரால் வழங்கப்படுகிறது. அங்கு அழகர் கோயில் என்னும் திருமால் கோவில் ஒன்று உள்ளது. பள்ளு என்னும் நூல் பள்ளர் என்னும் உழவருடைய வாழ்வை விளக்கும் நூல். கொண்டல் - மேகம். அண்டை - பக்கம். தண்டலை - சோலை. கனகம் - பொன் வண்டல் இடுதல் - கரை அமைத்தல். எயில் வழி - மதிலின்கண் உள்ள அம்பு விடும் வழி. செண்டு அலங்காரர்-செண்டு என்னும் ஒருவகை ஆயுதத்தைக் கையில் உடையவர்.

4. திருவருணைக் கலம்பகம்:—கலம்பகம் என்பது பதினெட்டு உறுப்புக்கள் அமையப் பாடும் ஒரு சிறு நூல். இது திருவருணை என்னும் திருவண்ணாமலையில் உள்ள இறைவன்மீது பாடப்பட்டது. சித்தர் ஒருவர் தம்முடைய சித்துக்களை விளக்கிக் கூறுதல் சம்பிரதம் எனப்படும். பரவை - கடல். பொருக்கெழுதல் - காய்ந்து போதல். ககனம் - ஆகாயம். பருதி - சூரியன்: நிருதி - தென்மேற்குப் பகுதியில் இருக்கும் காவற் கடவுள். அனலம் - நெருப்பு. கிரி - மலை.

## 5. வழிபாட்டுப் பாடல்

**அருஞ்சொற் பொருள்:**

1. கலை ஞானம் - கலைகளை உணர்வதற்கேற்ற அறிவு. எண் - நினைவு. எழுத்து - நினைவைக் குறித்து வைக்கும் ஒரு வரி வடிவம். சுடர் - ஒளி.
2. நாடி நாடி - தேடித் தேடி. கண்மாரி பெய்ய - கண்ணீர் மழை பொழிய. வேசற்று - களைப்புற்று. பர தெய்வம் - மேலான தெய்வம்.
3. குணதிசை - கீழ்த்திசை. சிகரம் - (கதிரவன் தோன்றும் கிழக்கு மலையின்) உச்சி. மது - தேன். ஈண்டி - நெருங்கி

களிறு + ஈட்டம் - களிற்றீட்டம். களிறு - ஆண் யானை. பிடி - பெண் யானை.

4. கதி - மேலான பதவி. எம் துயர் - எம்முடைய துன்பம். சிறை - பிறவிச் சிறை.

வினாக்கள் :

1. விண்மீன்களும் மதியமும் தோன்றிய காட்சி எவ்வாறு புனைந்துரைக்கப்பட்டுள்ளது?
2. சோலையின் காலைக் காட்சியாகக் கம்பர் என்ன கூறுகிறார்?
3. அருணாசலக் கவிராயர் சீட்டுக் கவியில் கூறுவன யாவை?
4. கலைசை என்னும் ஊர் எச்சிறப்புக்களை உடையது?
5. பாம்புக்கும் வாழைப் பழத்துக்கும் உள்ள சிலேடை நயம் யாது?
6. திருமாலின் திருவடிகள் எவற்றைச் செய்தன?
7. திருவிரிஞ்சை முருகனை ஆசிரியர் எவ்வாறு வழிபட்டார்?
8. திருமுக்கூடல் எச்சிறப்புக்களை உடையது?
9. சித்தர் தாம் செய்யக்கூடிய சம்பிரதம் என்று எவற்றைக் கூறுகிறார்?
10. இறைவர் எப்பொருள்களாக இருக்கின்றார் என அப்பர் கூறுகிறார்?
11. தாயுமானார் இறைவனை நோக்கி என்ன முறையிடுகின்றார்?
12. காலைப் பொழுதின் நிகழ்ச்சிகளை ஆழ்வார் எவ்வாறு விளக்குகிறார்?
13. வீரமா முனிவர் ஏசுநாதரை எவ்வாறு பாராட்டுகிறார்?

# உரைநடைப் பகுதி

## க. மறைமலை அடிகள்

ஆசிரியர் : திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள். தஞ்சை மாவட்டத்தில் உள்ள கருப்பக்கிளர் என்னும் ஊரினர். தமிழ்ப் புலவர் வரிசை, அகநானூற்று உரைநடை முதலிய நூல்களின் ஆசிரியர். வரலாற்று உண்மை காணுவதில் ஆர்வம் உடையவர்.

**அருஞ்சொற் பொருள் :**

புனல் நாடு - நீர்வளம் மிக்க நாடு (சோழநாடு). பொன்னி - காவிரியாறு. மனம் கவன்று - மனம் வருந்தி. கண்ணுதற் பெருமான் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். நோன்பு - விரதம். வேதாசலம் - திருக்கழுக்குன்றத்தில் உள்ள இறைவன் பெயர். உவகை - மகிழ்ச்சி. தன் கொண்டான்-தன்னை மணஞ்செய்து கொண்ட கணவன். நாகை - நாகப்பட்டினம். இரங்கற்பா-இறந்தவரை நினைத்து வருந்திப் பாடும் பாட்டு.

**வினாக்கள் :**

1. மறைமலை தமிழ் நூல்களை எவரிடம் எவ்வாறு கற்றார்?
2. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையோடு இவருக்குத் தொடர்பு எவ்வாறு ஏற்பட்டது?
3. மறைமலை அடிகளின் மாணவர்கள் யாவர்?
4. மறைமலை அடிகள் செய்த தொண்டுகள் எவை?

## உ. மணிமேகலை

ஆசிரியர் : பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள். பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்கள் பலவற்றுக்கு உரை எழுதியவர். தஞ்சை மாவட்டத்தில் உள்ள பெருமழை என்னும் ஊரில் இருப்பவர். எளிய இனிய உரைநடை நூல்களும் கட்டுரைகளும் எழுதி வருபவர்.

**அருஞ்சொற் பொருள் :**

நல் இசைப்புலவர் - நல்ல புகழ்பெற்ற புலவர். ஏசா - குற்றம் இல்லாத. இசை விளங்கு - புகழால் விளங்குகின்ற. தென் சொல் கடந்து - தமிழ் நூல்களைக் கற்றுத் தேறி. வடநூல் கடல் - கடல் போல் மிகுந்த வடமொழி நூல்கள். கவியரசர் - கவி இயற்றும் புலவர்க்கு எல்லாம் முதல்வர். புவி - பூமி. கண்கூடாக - கண் முன்பாக. இகல் இலாத-மாறுபாடு இல்லாத. எஞ்சாமல்-குறையாமல். இடியேறு - இடியோசை. பிக்குணி - பௌத்தரில் பெண் துறவி. பேதைப் பருவம் - ஐந்து அகவை முதல் ஏழு அகவைவரை உள்ள பெண்ணின் பருவம். பெதும்பைப் பருவம் - எட்டு முதல் பன்னிரண்டு அகவை வரை உள்ள பருவம். நோற்று - விரதங் காத்து. மதுகை - வலிமை. பற்று அற்றோர் - அவா அற்றவர்.

விளக்கங்கள் :

1. ஐம்பெருங் காப்பியங்கள் எவை ?
2. சீத்தலைச்சாத்தனார் எச் சிறப்புக்களை உடையவர் ?
3. இளங்கோவடிகள் எந்நூலைச் செய்தார்? அவர் ஏன் அதனைச் செய்ய விரும்பினார் ?
4. பெருங் காப்பியத்துள் எவை அமைந்திருத்தல் வேண்டும் ?
5. மணிமேகலையினிடம் இருந்த ஆற்றல்கள் எவை?
6. இளங்கோவடிகள் சாத்தனாரை எவ்வாறு பாராட்டினார் ?
7. மணிமேகலையில் அமைந்த காப்பிய நுணுக்கங்கள் எவை?

## ௩. கடிதம் : தங்கைக்கு

ஆசிரியர் : டாக்டர் மு. வரதராசனார் அவர்கள். நாடறிந்த பெரும் புலவர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர். மக்கள் விரும்பும் தமிழ்நூல்கள் பலவற்றை எழுதி வருபவர்.

அருஞ்சொற் பொருள் :

பொறை - பொறுமை. ஆணவ மனம் - செருக்குக் கொண்ட மனம். பூசல் - சண்டை.

விளக்கங்கள் :

1. தங்கை தன் கடிதத்தில் கேட்டிருந்த இரண்டு வேண்டுகோள்கள் எவை ?
2. 'பசியும் உணவும் நேர்மாறானவை அல்ல' —என்ற உவமை எதனை விளக்க வந்தது ?
3. யார் உரிமையை அனுபவிக்க முடியும்?
4. நெடுங்கால அனுபவத்திற்குப் பிறகு கணவன் கற்றுக்கொள்ளும் பாடம் எது?
5. "பழகப் பழகப் பாலும் புளிக்கும்''—என்ற பழமொழியால் நாம் தெரிந்துகொள்வது என்ன ?
6. வலியப் பேசி, விட்டுக் கொடுத்தவர் தோற்றவர் அல்லர்—இதனை வள்ளுவர் எவ்வாறு விளக்குகிறார் ?

## ௪. ராவ்சாகிப். ஆபிரகாம் பண்டிதர்

ஆசிரியர் : கழகப் புலவர் திரு. இராமநாத பிள்ளை அவர்கள். திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த குலசேகரன் பட்டினத்திற் பிறந்தவர். தமிழ் ஆராய்ச்சித் துறையில் வல்லவர். உரைநடை நூல்கள் பல எழுதியுள்ளார். சித்தாந்த பண்டிதர் என்னும் பட்டம் பெற்றவர். திருமூலர் திருமந்திரத்துக்கு அரிய உரை இயற்றியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

ஓவாது - நீக்காது. ஓம்பி - பாதுகாத்து. உணர்வாளர் - அறிவு உடையவர். உடைமையாளர் - செல்வம் உடையவர். யாத்து -

இயற்றி. பீடு - பெருமை. மல்கி - நிறைந்த. பெயரிய - பெயரை உடைய. உடைமை - செல்வம். வற்று + ஊற்று = வற்றாத ஊற்று. நைந்தனர் - வருந்தினர். முன் + தவம் + பேறு = முற்றவப் பேறு - முன்பு செய்த தவத்திற்குத் தகுதியாகப் பெறும் பயன். பண் இசைப் பணி - இசைத்துறை வேலை. நுண்மாண் நுழைபுலம் - நுட்பமான மாட்சிமைப்பட்ட கூரிய அறிவு. விழைதக்க - விரும்பத்தக்க. முனைவன் - முதல்வன்.

**வினாக்கள் :**

1. ஆபிரகாம் பண்டிதருடைய பெற்றோர் பெயர்களை எழுதுக.
2. பண்டிதர் கல்வியில் கருத்துடையவர் என்பது எதனால் தெரிகின்றது ?
3. இரவு நேரங்களில் துறவிகளிடத்தில் இவர் எவற்றைக் கற்றார் ?
4. சஞ்சீவி மருந்து இயற்றும் முறைகளை இவர் யாரிடம் கற்றார் ?
5. இவர் எவ்வெக் கலைகளில் திறமை பெற்றிருந்தார் ?
6. இவரைப் பாராட்டிய பெரியோர் யாவர் ?
7. இவர் இயற்றிய சிறந்த நூல்கள் எவை ?

## ரு. நீதிநூல்களில் இலக்கிய நயம்

ஆசிரியர் : டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள். சென்னைப் பல்கலைக் கழக அகராதித் துறையில் ஆராய்ச்சிப் பேரறிஞராக விளங்குபவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராய் இருந்தவர். பல நூல்களின் ஆசிரியர்.

**அருஞ்சொற் பொருள் :**

ஈக - அளிக்க. விடம் - நஞ்சு. புரை - துவாரம். மாய்ந்தான் - இறந்தான். கரப்பவர் - ஒளிப்பவர். இரப்பவர் - இரந்து கேட்பவர். அல்லல்பட்டு - துன்பப்பட்டு. உலகு இயற்றியான் - உலகத்தைப் படைத்தவன். அறை - ஒலிக்கின்ற. கயவர் - கீழ்மக்கள். மறை - மறைவாகப் பேசும் வார்த்தைகள். நிலைபேறு - நிலைத்து நிற்றல். இச்சகம் - விருப்ப மொழிகள். மகேசுவரன் - கடவுள்.

**வினாக்கள் :**

1. நீதி நூல்களின் இயல்பு யாது ?
2. சிற்பம் முதலிய கலைகளுக்கும் இலக்கியக் கலைக்கும் உள்ள வேறுபாடு என்ன ?
3. "கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்லோ" என்பதில் உள்ள நயம் யாது ?
4. இடைக்காடனர் குறளின் பெருமையை எவ்வாறு கூறியுள்ளார் ?
5. பிச்சைக்காரன் கருதியதாகத் திருவள்ளுவர் கண்ட கனா யாது ?
6. திருவள்ளுவர் உவமைகளைக் கையாளுவதில் சிறந்தவர் என்பதற்குச் சான்று தருக.

7. அறுசுவை யுண்டி என்ற செய்யுளில் உள்ள சொற்களுக்கு முரணாக எடுத்துக்காட்டும் பொருளையும் நயங்களையும் விளக்குக.
8. இச்சகம் பேசி வாழும் ஒருவனைப் பார்த்துப் புலவர் என்ன கூறியுள்ளார்?

## சு. மின்மினிப்பூச்சி

ஆசிரியர்: திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள். வாணாள் முற்றும் உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியராக இருந்தவர். பல நூலாசிரியர்; உரையாசிரியர்; இப்பொழுதும் கழகச் சார்பில் நிகழும் புலவர் வகுப்பு, சித்தாந்த வகுப்புப் பேராசிரியராகவும் இருந்து வருகின்றனர்.

அருஞ்சொற் பொருள்:

ஆர்வம் - விருப்பம். வனப்பு - அழகு. திங்கள் - நிலா. உடுக்கள் - நட்சத்திரங்கள்; விண்மீன்கள். கதிரவன் - சூரியன். ஞாயிறுகள் - சூரியர்கள். இடர் - துன்பம். மூதறிவோர் - நிறைந்த அறிவுடையவர். ஆன்மா - உயிர். இறை - கடவுள். ஞானம் - அறிவு. ஐம்பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி. ஐம்புலன் - ஐந்து வகையான அறிவு (ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை). பேருள்ளம் வைத்து - பெருங் கருணையுடன். கைவல்லார் - கைத்தொழில் திறமையுடையவர்.

வினாக்கள்:

1. மக்களுக்கு இரவிலும், பகலிலும் ஒளிதரும் பொருள்கள் எவை?
2. இறைஞானம் என்பது யாது? அது எப்பொழுது மக்களுக் குத் துணைசெய்யும்?
3. உலகில் உள்ள பொருள்கள் நமக்கு எவற்றை அறிவிக் ?
4. இறைவன் படைத்த பொருள்களை நாம் ஏன் போற்றிப் பாதுகாத்தல் வேண்டும்?
5. அறிவுடையவர்கள் எதனை நாடுகின்றார்கள்? ஏன்?

## எ. தமிழ் இலக்கியத்திற்கண்ட அரசு

ஆசிரியர்: டாக்டர், ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர். "சொல்லின் செல்வர்" என்னும் பட்டம் பெற்றவர். மக்கள் உள்ளத்தைக் கவரும் முறையில் சொற்பொழிவு ஆற்றும் திறமும் நூல்கள் இயற்றும் பெருமையும் உடையவர்.

அருஞ்சொற் பொருள்:

மலர்தலை - பரந்த இடத்தையுடைய. வேல்மிகு தானை - வேலாயுதத்தைக் கொண்ட மிகுந்த சேனை. விண் இன்று பொய்ப்பின் - மழை பெய்யாது தவறுமாயின். வியன் - பரந்த. உள் + நின்று = உண்

ணின்று - உள்ளேயிருந்து. உடற்றும் - வருத்தும். வாரி - வருவாய். குன்றினும் - குறைந்தாலும். பைங்கூழ் - பசிய பயிர். களை கட்டல்- களையை நீக்குதல். கோறல் - கொல்லுதல் கொற்றம் - வெற்றி. மறம் - பாவம். செல்கை - செல்லுதல். மருமம் - மார்பினிடத்து. ஆழி - சக்கரம். விச்சை - வித்தை. வையகம் - இம் மண்ணுலகம்.

**வினாக்கள் :**

1. வேந்தற்குக் கடமையாகப் புறப்பாட்டு எதனைக் கூறு
2. மன்னனைக் குடிமக்கள் எப்பொழுது பழிப்பார்கள் ?
3. பசும்பயிரின் களையை நீக்கியது போன்றதாகும்—எது ?
4. கண்ணகியைப் பார்த்து நெடுஞ்செழியன் என்ன கூறினான் ?
5. காவலன் என்ற பெயர் மன்னனுக்கு எதனால் வந்தது ?
6. மனுநீதிச் சோழனை எவ்வாறு சேக்கிழார் பாராட்டினார் ?
7. சேரமன்னன் பாண்டியனை எவ்வாறு புகழ்ந்தான் ?
8. கரிகால் வளவன் எவ்வாறு நீதி வழங்கினான் ?
9. அரசனைப் பற்றித் தமிழ் இலக்கியம் கூறும் கருத்துக்கள் எவை ?

## ௮. பாரதநாட்டுச் சிற்பக்கலை

ஆசிரியர் : திருமதி ஆர். எஸ். ருக்மணி, எம். ஏ. அவர்கள். கட்டுரைகளும் உரைநடை நூல்களும் எழுதிப் புகழ்பெற்றவர்.

**அருஞ்சொற் பொருள் :**

ஆய்ந்து - ஆராய்ந்து. வியத்தகு - பாராட்டத்தகுந்த. நவீனம் - புதுமை. ஒப்பனை - அழகு. புராதனமானது - பழமையானது. வாழ்+நாள்=வாணாள். முட்டு இன்றி - பொருட் குறைவில்லாமல். கழிபேர் உவகை-மிக்க மகிழ்ச்சி. கழிபேர் : ஒரு பொருட் பன்மொழி. படிமம் - வடிவம். முழை - குகை.

**வினாக்கள் :**

1. கோடுகளின் மடக்கால் அமையும் கலைகள் யாவை ?
2. பாரத நாட்டுத் தெய்வங்களின் உடல் உறுப்புக்கள் எவ்வாறு அமைந்துள்ளன ?
3. பாரத நாட்டுச் சிற்பியின் சிறப்புக்கள் எவை ?
4. சிற்பிகளை மன்னர்கள் எவ்வாறு ஆதரித்தனர் ?
5. உலகம் எங்கும் புகழ்பெற்று விளங்கும் சிற்பங்கள் எவ் விடங்களில் இருக்கின்றன ?

## ௯. சுவிட்சர்லந்து

ஆசிரியர் : திரு. சோம. இலக்குமணச் செட்டியார் அவர்கள். மேல் நாடுகளுக்கும், கீழ் நாடுகளுக்கும் பயணம் செய்து அந்நாட்டு உண்மை நிலைகளை விளக்கிப் பல கட்டுரைகளும், நூல்களும் எழுதியுள்ளார். இவர் உலகம் சுற்றிய தமிழர்.

**அருஞ்சொற் பொருள் :**

அகத்தூய்மை - மனத்தூய்மை. பேணி - பாதுகாத்து. சுணக்கம்-காலதாமதம். சரண் அடைதல்-அடங்கிவிடுதல் (போரை நிறுத்துதல்). பெருமை + ஆர்வம் = பேரார்வம்; மிக்க விருப்பம்.

**வினாக்கள் :**

1. சுவிஸ் நாட்டு அரசியலார் வகுத்துள்ள திட்டங்கள் எவை?
2. சுவிஸ்நாட்டு மக்கள் சுகாதார மேன்மை யுற்றிருப்பது எவற்ருல்?
3. எவ்வெவ்விளையாட்டுக்களில் அவர்கள் சிறப்புற்று விளங்குகின்றனர்?
4. அந்நாட்டு மக்களுக்குப் படைப்பயிற்சி எவ்வாறு அளிக்கப்படுகிறது?
5. பலநாட்டு மக்களும் சுவிஸ் நாட்டில் ஒற்றுமையுற்று இருக்கின்றனர் என்பதற்குச் சான்றுகள் தருக.
6. சுவிஸ்நாட்டு மக்கள் நேரத்தை வீணுக்காது எவ்வாறு பயன்படுத்துகின்றனர்?

## ௧௦. கண்டீரக்கோப் பெருநள்ளி

ஆசிரியர் : திரு. சிவ. குப்புசாமி பிள்ளை அவர்கள். தஞ்சாவூரை அடுத்த கரந்தைக் கல்வி நிலயத்தில் ஆசிரியப் பணியாற்றி வருபவர். செந்தமிழ் நாடக நூல்கள் பல எழுதியிருக்கின்ருர். சங்க நூல்களில் சிறந்த ஆராய்ச்சியுடையவர்.

**அருஞ்சொற் பொருள் :**

கண்டீரக்கோப் பெருநள்ளி - கடையெழு வள்ளல்களில் ஒருவன். வேனில் - வெயிற் காலம். கான் - காடு. நெருநல் - நேற்று. எள் + துணை = எட்டுணை - எள் அளவு. எம்பால் - எம்மிடம். எய்தவன் - செலுத்தியவன். களைகண் - பற்றுக்கோடு ஆக ஆதரிப்பவர். உள்ளம் பற்றிய - நினைத்த. கங்குல் பறவை - இரவில் உலாவும் பறவை. கிளை - தம் இனம். நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.

**வினாக்கள் :**

1. இளநங்கை தன் தந்தையை நோக்கி என்ன கூறினள்?
2. வன்பரணர் தம் மகளுக்குக் கூறிய ஆறுதல் மொழிகள் எவை?
3. பெருநள்ளி புலவர்க்குக் கூறிய நல்லுரைகள் எவை?
4. வன்பரணர் நள்ளியிடம் கூறிய நன்றியுரை யாது?
5. பெருநள்ளி புலவர்க்கு அளித்த பரிசில் யாது?
6. பெருநள்ளியுடன் வேட்டையாட வந்தோர் யாவர்?
7. வன்பரணரிடம் மாடலன் பெருநள்ளியைப்பற்றி என்ன கூறினன்?

## ௧௧. மின்னலும் இடியும்

ஆசிரியர் : திரு. என். கே. வேலன், பி. ஏ., அவர்கள். தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றவர் ; விஞ்ஞான நூற்கருத்துக்களை எளிமையும் இனிமையும் வாய்ந்த தமிழ் நடையில் எழுதுபவர். இவர் உரைநடை நூல்கள் சில எழுதியுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

அணங்கு - பெண். ஆற்றல் - வல்லமை. கரந்து - மறைந்து. உறைவது - தங்கியிருப்பது.

வினாக்கள் :

1. மின்னலைப் பற்றிய பழமொழி யாது?
2. மின்னல், இடிகளைப்பற்றி ஆராய்ச்சி செய்தவர் யார்? எவ்வாறு ?
3. மின் ஆற்றலுக்கும் மின்னலுக்கும் உள்ள ஒற்றுமைகள் எவை?
4. மேகத்தில் மின் ஆற்றல் நிறைந்திருப்பது எவ்வாறு உறுதி யாயிற்று ?
5. இடிதாங்கிகளைக் கட்டடங்களில் வைப்பதனால் வரும் நன்மை என்ன? விளக்கி எழுதுக.
6. மின் ஆற்றல் இயற்கையில் எங்கும் மலர்ந்து கிடக்கின்றது—சான்று தருக.
7. பெரிய அளவில் மின் ஆற்றலை உண்டாக்குவதற்குக் கையாளும் இரண்டு முறைகள் எவை ?

## ௧௨. அரசர் அண்ணாமலை வள்ளல்

ஆசிரியர் : பண்டித. திரு. லெ. ப கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர். தமிழ்மொழி ஆராய்ச்சிக் கட்டுரைகளும், நூல்களும் எழுதிவருபவர். தமிழ் நூல்களில் நயங்கண்டு இனிய விரிவுரை ஆற்றுபவர்.

அருஞ்சொற் பொருள் :

அருமறை - திருக்குறள். உடன்உறை - ஆசிரியர் துணையுடன் மாணவர் விடுதியில் உறைதல். பெருவண்மை-பெருங்கொடை. பயிலப் பட்டன-கற்கப்பட்டன. தன்நேர் இல்லா - தனக்கு ஒப்பானவர் ஒருவரும் இல்லாத. குறிக்கோள்-நோக்கம். அயரா-தளர்ச்சியில்லாத. ஈடுபாடு-பற்று. ஈட்டலும் - செல்வத்தைச் சம்பாதித்துச் சேர்த்தலும். வகுத்தல் - நல்ல முறையில் செலவு செய்தல். எண்ணிய - நினைத்தவற்றை. எண்ணியாங்கு - நினைத்தபடி.

வினாக்கள் :

1. அண்ணாமலை வள்ளலின் ஊர்ப்பெயரும் பெற்றோர் பெயர்களும் எவை?
2. எவற்றில் வல்லவர் அரசர் எனத் திருக்குறள் கூறுகின்றது?

3. வள்ளல் எந்த எந்த நிலையங்களுக்குப் பொருள் உதவி செய்துள்ளார்?
4. வெள்ளி விழாவின்போது நடந்த சிறந்த நிகழ்ச்சிகள் எவை?
5. வள்ளல் எப் புலவர்களுக்குப் பொன்னாடை போர்த்துச் சிறப்பித்தார்?
6 தமிழ் இசை வளரவேண்டும் என வள்ளல் ஏன் கருதினார்?
7. இவர் பெற்ற பட்டங்கள் எவை?
8. இவர் தம் வாழ்க்கையின் குறிக்கோளாக எவற்றைக்
9. இராஜா சர். அண்ணாமலை செட்டியார் முத்தமிழ் வளர்ச்சிக்குச் செய்துவரும் தொண்டுகள் எவை?

## ௧௫. மனையியல்

ஆசிரியர்: டாக்டர் இராஜம்மாள் தேவதாஸ் M.Sc., M.A., Ph.D.

**அருஞ்சொற் பொருள் :**

தொன்றுதொட்டு - பழங்காலம் முதல். தியாகம் - தன்னலமற்ற தன்மை. தாக்கப்படுதல் - ஒதுக்கப்படுதல். சீலம் - ஒழுக்கம், ஒக்கல் - சுற்றத்தார். அறன் ஈனும் - அறத்தைக் கொடுக்கும். உவக்கும் - மகிழ்வாள். இல்லவள் - மனைவி. சோர்வு - தளர்ச்சி. தற்கொண்டான் - தன்னை மணஞ்செய்துகொண்ட கணவன். ஆக்குவது - வளர்ப்பது.

**வினாக்கள் :**

1. வீடுகளில் பெண்களுக்குத் தாய்மார் எவற்றைக் கற்பித்தனர்?
2. இன்ப வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்தன எவை?
3. மனையியல் ஆண்களுக்கும் ஏன் கற்பிக்கப்படுகிறது?
4. அமெரிக்க மனையியல் கழகத்தை யார், ஏன், தோற்றுவித்தார்?
5. தமிழ்நாட்டில் கிராமப்பெண்களுக்கு மனையியல் பயிற்சியாக எவை கற்பிக்கப்படுகின்றன?
6. கல்வி நிலையங்களில் மனையியல் ஏன் கற்பிக்கப்படுகிறது?
7. மனையியலே உண்மையான கல்வியாகும் என்று ஏன் கூறுதல் வேண்டும்?
8. மனையியலில் அமைந்த பல துறைகள் எவை?
9. உடையைப் பற்றிக் கல்லூரியில் எவற்றைக் கற்கலாம்?
10. குழந்தை வளர்ப்புத் துறையில் நாம் கற்கவேண்டியவை யாவை?

## ௧௬. காடு

ஆசிரியர்: மறைமலை அடிகள்; சென்னையை அடுத்த பல்லாவரத்தில் பொதுநிலைக் கழகம் நிறுவித் தமிழ்த் தொண்டும் சமயத் தொண்டும் செய்தவர்; தனித்தமிழ் நடையில் அரிய ஆராய்ச்சி நூல்களும், மொழிபெயர்ப்பு நூல்களும், சிறுவர்க்கேற்ற எளிய நூல்

களும் இயற்றியவர். மேல்நாட்டுக் கலை நூல்களைக் கற்று ஆராய்ந்து தொகுத்து வைத்துள்ளார். தமிழ்நாட்டின் தலைசிறந்த பெரும் புலவராய் விளங்கியவர். காலம்—கி. பி. 1875—1950.

அருஞ்சொற் பொருள் :

உள் இயங்குவோர் - உள்ளே செல்வோர். கோடுகள் - கிளைகள். வளார்கள் - மெல்லிய கழிகள். துதைந்து - நெருங்கி. இறும்பூது - வியப்பு. கவின் - அழகு. பொதுளிய - நிறைந்த. அடவி - காடு. துவன்றிய - நிறைந்த. பம்பிய - நிறைந்த.

வினாக்கள் :

1. எவ்வகைக் காடுகளை எப்பெயரிட்டுத் தமிழர் வழங்கி வந்தனர்?
2. கடலைச்சார்ந்த காடுகள் எவ்விடங்களில் உள்ளன?
3. பெருங் காடுகளின் உள்ளே சென்றால் எவற்றைக் காணலாம்?
4. பெருங் காடுகள் எம் மலைப்பக்கங்களில் உள்ளன?
5. காடுகள் நீரும், உணவும், தூய காற்றும் தந்து உதவுகின்றன-எவ்வாறு?
6. கோயம்புத்தூர்க் கடுத்த வெள்ளிமலைப் பெருங்காட்டு மரங்கள் எவைபோலத் தோற்றமளிக்கின்றன?
7. காடுகளிலிருந்து அரசாங்கத்தார்க்கு வரும் வருவாய்கள் எவை?

## கரு. கல்லூரிப் பாடமொழி

ஆசிரியர் வரலாறு—௪ ஆம் பாடக் குறிப்பிற் காண்க.

அருஞ்சொற் பொருள் :

புறக்கணித்து - ஒதுக்கி. கலைச்சொல் அமைப்பு - வேற்றுமொழிச் சொல்லைத் தமிழில் பெயர்த்து அமைத்தல்.

...க்கள் :

1. தமிழ்மொழி உலகில் சிறப்புப்பெற்றது எதனால்? சிறப்புற என்ன செய்யவேண்டும்?
2. தமிழ் வேற்றுமொழிபோல் முடங்கிக்கிடந்தது எவற்றால்?
3. கல்லூரிப் பாடங்களைத் தமிழிற் படிப்பதால் வரும் குறைகள் என நம்பி எவற்றைக் கூறினர்?
4. தமிழிற் பிற பாடங்களையும் கற்பதால் வரும் நன்மைகள் யாவை?
5. வெளிநாடு சென்று படிப்போர்க்கு மாறன் கூறிய வழிகள் யாவை?
6. தலைவர் இறுதியிற் கூறிய முடிவுரை யாது?

## கசு. சுவாமி இருக்கிறார்

ஆசிரியர் : மகாமகோபாத்தியாய, டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள். சென்னை அரசினர் கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராக

இருந்தவர். சீவகசிந்தாமணி முதலிய பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து முதன்முதல் அச்சிட்டவர். தமிழ் ஆராய்ச்சித்துறையில் சிறந்து டாக்டர் என்னும் பட்டம் பெற்றவர். கி. பி. 1942 வரை இருந்தவர்.

அருஞ்சொற் பொருள் :

கொட்டுதல் - ஊற்றுதல் சங்கேதமாக - குறிப்பாக. அசட்டை - அவமதிப்பு, பொருட்படுத்தாமை.

**விளுக்கள் :**

1. கும்பகோணம் கல்லூரியில் தண்ணீர் கொடுப்பவர் எப்படிப் பட்ட பண்பு உடையவராய் இருந்தார்?
2. "சுவாமி இருக்கிறார்" என்ற விடையை யார் எப்பொழுது கூறினார்? ஏன்?
3. நாராயணசாமி ஐயர் ஏன் சினம் கொண்டார்?
4. சாமிநாதையர்—சுவாமி இருக்கிறார் என்பதற்குக் கூறிய பொருள் விளக்கம் யாது?

## கள. பாசனம்

அருஞ்சொற் பொருள் :

பாசனம் - நிலத்துக்கு நீர் பாயச்செய்தல். முனைப்பான - விரைவான. முதல்போகம் - ஓராண்டில் முதன்முறை பயிரிடுதல். பிரதான - முக்கியமான. தறுவாய் - நிலைமை. உபரிநீர் - மிகுந்த நீர், தேவைக்கு மேல் எஞ்சிய நீர். பூங்கா - பூஞ்சோலை.

**விளுக்கள் :**

1. முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மேற்கொண்ட பன்னிரண்டு திட்டங்கள் எவை?
2. இரண்டாவது திட்டகாலத்தில் புதிதாகச் சேர்த்துக்கொண்ட ஐந்து திட்டங்கள் எவை?
3. மணிமுத்தாறு தேக்கத் திட்டத்தைப்பற்றி நீ அறிந்தவை யாவை?
4. அமராவதித் தேக்கம் எவ்விடத்தில் உள்ளது?
5. சாத்தனூர்த் தேக்கத் திட்டத்தால் பாசனவசதி பெறும் நிலங்கள் எவை?
6. கிருஷ்ணகிரித் தேக்கம் எவ்விடத்தில் உள்ளது? அதனால் உண்டாகும் நன்மைகள் எவை?

## கஅ. மணிபத்திரன்

ஆசிரியர் வரலாறு க ஆம் பாடக் குறிப்பிற் காண்க.

அருஞ்சொற் பொருள் :

அலுவல் - வேலை. கபடம் - வஞ்சனை. பணம் - சுமார் இரண்டு அணு மதிப்புள்ள நாணயம். மறுமொழி - பதில். ஊதியம் - இலாபம். அவா - ஆசை. காணி - சிறு பொருள். பெருமை + அவா = பேரவா; பேராசை. வராகன் - மூன்றரை ரூபாய்.

**வினாக்கள் :**

1. வணிகன் தன் கடையில் இருந்த சிறுவனைப் பார்த்து எவற்றைக் கூறினான்?
2. கிழவியே பிறர் பொருளை விரும்பாத உத்தமி என்று மணிபத்திரன் ஏன் கருதினான்?
3. போலித் துறவி ஏன் அரிசியை வாங்கிக்கொள்ள விரும்பவில்லை?
4. போலித் துறவியிடம் மணிபத்திரன் என்ன விண்ணப்பித்துக் கொண்டான்?
5. மணிபத்திரன் கிழவிக்கு ஏன் ஆயிரம் வராகன் கொடுத்தான்?
6. இக் கதையால் நாம் அறிந்து கொள்ளும் கருத்துக்கள் எவை?

## கக. இளைஞர்களுக்கு அறிவுரை

ஆசிரியர் : திரு. நெ. து. சுந்தரவடிவேலு M. A., L. T., அவர்கள். சென்னைக் கல்வித்துறைத் தலைவர். நீண்டநாளாகக் கல்வித்துறையில் பணியாற்றி வருபவர். நாட்டு மக்களின் கல்வி வளர்ச்சியில் கருத்துடையவர். மேல்நாடுகட்குச் சென்று அந்நாட்டுக் கல்வி முறைகளை அறிந்தவர்.

**அருஞ்சொற் பொருள் :**

விழுப்பம் - மேன்மை. ஓம்பப்படும் - பாதுகாத்தல் வேண்டும். ஐம்பெருங் குற்றங்கள் - கொலை, களவு, கள், சூது, பொய் என்பன. கூர்மையர் - கூர்மையான அறிவு உடையவர். மரம்போல்வர் - ஓரறிவுடைய மரத்தைப்போன்றவர் ஆவர். தற்குறி - எழுத்து அறியாதவன். கேளிர் - சுற்றத்தார். உரம் - வலிமை.

**வினாக்கள் :**

1. வாழ்க்கைக்கு எவை இன்றியமையாதவை?
2. பிஞ்சில் பழுப்பது என்பது என்ன?
3. ஏன் உடற்பயிற்சி செய்ய வழிவகை செய்துகொள்ள வேண்டும்?
4. ஒழுக்கம் என்பதுபற்றி ஆசிரியர் கூறுவன யாவை?
5. நம் துன்பங்கள் எப்பொழுது தொலையும்?
6. மக்கட் பண்பு என்பது யாது? அஃது இல்லாதவர் எதைப் போன்றவர் ஆவர்?
7. நாம் இப்பொழுது எத்துன்பங்களை அனுபவித்து வருகிறோம்?
8. நாம் வறுமையைப் போக்குவதற்குச் செய்யவேண்டிய செயல் யாது?
9. கூட்டத்தில் கூடிநின்று கூறிவிட்டு நாட்டத்தில் கொள்ளாதிருக்கின்றோம்—எதனை? எவ்வாறு?

